மற்ருென்று,

"தீயினுள், தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியு நீ; சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பும் நீ; மறத்தினுள் மைந்தும் நீ
வேதத்து மறை நீ; பூதத்து முதலும் நீ
அனைத்தும் நீ; அனைத்தின் உட்பொருளும் நீ;...
பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோர் இலையே."

—பரிபாடல்-3

என வரும் ஹரிகீர்த்தனங்கள் யாவும் ஸஹஸ்ரநாமத்தில் பரக்கக் காணலாம். அந்தத் தொன்மைக் காலத்திலேயே விஷ்ணு பக்தியும் திருமாலின் புகழும் தமிழகத்தில் நன்கு வேரூன்றிவிட்டதை இது புலப்படுத்துகிறது.

ஒன்பதாவது நூற்ருண்டு இறுதியில் சங்க நூல்களைத் தொகுத்து அவற்றிற்குக் காப்புச் செய்யுட்களை (மங்களா சாஸனம்) வழங்கிய பாரதம் பாடிய பெருந்தேவஞர் என்பவர் **நற்றிணை** எனும் தொகை நூலுக்கு, இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் தியான ச்லோகத்தை நற்றமிழில் ஆக்கி காப்புச் செய்யுளாக அமைத்துக்கொண்டார். பூ$^4$: பாதெ$^3$ள யஸ்ய நாபி$^4$: எனத் தொடங்கும் சுலோகத்திற்கு அவர் தந்த தமிழ் வடிவமாவது :

"மா நிலம் சேவடியாகத் தூ நீர்
வளை நால் பௌவம் உடுக்கையாக
விசும்பு மெய்யாகத் திசைகையாகப்
பசும்கதிர் மதியமொடு சுடர் கண்ணுக
இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீது அற விளங்கிய திகிரியோனே !"

வேருேர் அடியார் '**நான் மறக்கினும் சொல்லு நாவே (அவன் பெயரை)**' என்று கூறுகிருர்.

"ஸஹஸ்ரநாம்நே புருஷாய" என்று தேவர்களும், "தேவோ நாமஸஹஸ்ரவாந்" என்று பரம ரிஷிகளும், "பேருமோராயிரம் பிற பலவுடைய எம்பெருமான்", "பேராயிரமுடைய பேராளன்", "பேராயிரங் கொண்டதோர் பீடுடையான்" என்று ஆழ்வார்களும், "மாமாயன், மாதவன், வைகுந்தனென்றென்று நாமம் பலவும் நவின்று"

என்று ஸ்ரீ ஆண்டாளும், "வதஞ் செப்பும் பேராயிரம்...அவ் அரியினுக்கே" என்று கம்பரும் திருநாராயணனின் நாமங் களை மிகப் பாராட்டிக் கூறியிருக்கின்றனர்.

"ஆதிமூலமே" என்று கூக்குரலிட்ட கஜேந்திரனுடைய கஷ்டத்தை எப்படிக் கடவுள் நிவர்த்தித்தார்—

"துவாரகா வாஸா", "அச்யுதா" என்று கதறிய துரௌபதிக்கு எப்படித் துரிதமாய் வந்து திருமால் உதவினர்—

என்பவை போன்ற பகவானின் உபகாரங்களை நினைத்துப் பார்த்தாலே அவ்விஷ்ணுவின் பெயர்களாயிரம் செய்யும் செயல்களைச் சிந்திக்கச் செய்யும்.

## மஹாபாரதத்தின் ஸாரம் ஸஹஸ்ரநாமம்

ஸ்ரீ வியாஸ பகவான் அருளிச் செய்த புராணங்கள் பதினெட்டு. அப்பதினெண் புராணங்களில் **மஹாபாரதம்** ஐந்தாவது வேதமாகப் போற்றப்படுகிறது. "பாரதத்தில் இல்லாத நீதியோ, தர்மமோ வேறெங்கும் கிடையாது; இங்குள்ளதே எங்குமுளது" என்று பாரதத்தின் சிறப்பை ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ வியாஸரே கூறியுள் ளார்.

ஒன்ருயிருந்த வேதத்தை வகுத்த காரணத்தினுல் **வேதவியாஸர்** என்ற விருது பெற்றவரும், வஸிஷ்ட மஹர் ஷியின் பேரனுன பராசர முனிவருடைய புதல்வரும், சுக மஹர்ஷியின் தகப்பனுர் எனற பெருமை வாய்ந்தவரும், **கிருஷ்ணத்வைபாயனர்** என்ற திருநாமத்தை உடையவரும். "வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே" என்றபடி ஸாக்ஷாத் நாராயணனே என்று போற்றப்படுப வருமான ஸ்ரீ வியாஸர் ஸ்ரீ மஹா பாரதத்தை இயற்றினுர்.

இத்தகைய மகிமை பொருந்திய பாரதத்திலே மிகச் சாரமானவை **பகவத் கீதையும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரமும்** என்பதை "பாரதே பகவத்கீதா விஷ் ணோர் நாமஸஹஸ்ரகம்" என்பதால் அறிகிருேம்.



ஸ்ரீ புருஷோத்தமன்

(திருவண்புருடோத்தமம்—திருநாங்கூர்)

(சீர்காழி ரயில் நிலையத்திற்கு 5 மைலில் உள்ள க்ஷேத்ரம்)

'கேஶவ: புருஷோத்தம:' எனப்படுபவன். (சுலோகம்-3)

''கரும்பினூடுயர் சாலிகள் விளைதரு
  கழனியில் மலிவாவி
மருங்கெலாம் பொழிலோங்கிய
  நாங்கூர் வண்புருடோத்தமமே.''

—திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 4-2-4

இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாமம் மஹாபாரத **இதிஹாஸத்தில்** ஆநுசாஸநிக பர்வம் என்ற பாகத்தில் 149-ஆவது அத்யாயமாக அமைந்துள்ளது.

இந்த ஸ்தோத்ரம் அனுஷ்டுப் என்ற ஸம்ஸ்கிருத விருத்தத்தில் 142 சுலோகங்களைக் கொண்டது. இதில் முதல் 13 சுலோகங்கள் இந்த ஸ்தோத்திரத்தின் முன்னுரையாகவும், அடுத்த 107 சுலோகங்கள் ஸ்ரீமந் நாராயணனுடைய ஆயிரம் திருநாமங்களை வரிசையாகக் கூறுவனவாகவும், கடைசி 22 சுலோகங்கள் பலச்ருதி—அதாவது இந்த ஸ்தோத்திரத்தை ஸங்கல்ப பூர்வகமாகவோ எவ்வித ஸங்கல்பமும் செய்யாமலோ பாராயணம் செய்பவர்களுக்கு ஏற்படக் கூடிய நற்பயன்களைக் குறிப்பனவாகவும் அமைந்துள்ளன.

பதினெட்டு நாட்கள் நடந்த மஹாபாரத யுத்தத்தில் முதல் நாளன்று பகவத்கீதை தோன்றிற்று. யுத்தம் முடிந்த பிறகு பீஷ்மரால் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் தோன்றியது.

பகவத்கீதை மத்யம பாண்டவனுன அர்ஜுனனுக்கும், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பாண்டவ ஜ்யேஷ்டரான தர்ம புத்திரருக்கும் உபதேசிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

பகவத்கீதை ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணுவதாரமான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினுலேயே அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமமோ, ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா எதிரில் வீற்றிருந்து திருச்செவி சாய்த்து அங்கீகரித்தருளும் வகையில், பீஷ்மரால் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ வால்மீகிபகவானுல் இயற்றப்பட்டு ஸ்ரீராமபிரானின் கல்யாண குணங்களைக் கூறும் **ஸ்ரீமத் ராமாயணம்** ஸ்ரீராமனுடைய ஸந்நிதானத்திலேயே அரங்கேற்றப் பட்டதேபோல், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் ஸந்நிதானத்திலேயே **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்** அரங்கேற்றப்பட்டு அவனுடைய அங்கீகார முத்திரையையும் பெற்றதாகும். ஆகவே, பகவதங்கீகாரம் பெற்று, சிறப்பாக அமைந்த ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் மகிமையை என்னவென்று கூறுவோம்!

பதினெட்டுநாள் பாரத யுத்தம் முடிந்துவிட்டது. வெற்றி பெற்ற பாண்டவர்கள் அரசுரிமையை ஏற்ருர்கள்.

உத்தராயணம் வந்த பிறகு மரிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஸ்வேச்சாமரணவரம் பெற்ற பீஷ்மாசாரியர், அர்ஜுனன் அமைத்த 'சரதல்பம்' என்னும் அம்புகளாலாகிய படுக்கையிலே படுத்திருக்கின்றார். அந்த ஸமயத்தில் வேதவியாஸர் தர்மபுத்திரரை அழைத்து, "அறிவுக் கடலான பீஷ்மர் காலம் சென்றுவிட்டால், பிறகு அத்தகையவர் கிடைப்பது அரிது. ஆகையால் அவர் ஜீவித்திருக்கும் போதே அவரிடம் சென்று ஸகல தர்மங்களையும் அறிந்து கொள்" என்றார். ஸ்ரீ கிருஷ்ணனும் அப்படியே சொன்னார். பெரியோர்கள் இட்ட இக்கட்டளையின்படியே தர்மபுத்திரர் தம் தம்பிகளுடன் சென்று பீஷ்மரை அடிபணிந்து, தர்மோபதேசம் செய்தருளுமாறு வேண்டிக்கொண்டார். அப்போது பல மஹர்ஷிகளும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும் அங்கு வீற்றிருந்தனர்.

நாம் செய்ய வேண்டியனவாகச் சாஸ்திரங்கள் விதிக்கின்ற தர்மங்களைப் பற்றி தர்ம புத்திரர் கேட்கக் கேட்க, விஸ்தாரமாக பீஷ்மர் உபதேசம் செய்தார். க்ஷத்ரிய தர்மம், மோக்ஷ தர்மம், தான தர்மம் என்றிவ்வாறுள்ள தர்மங்களையெல்லாம் அவர் உபதேசித்தார். அதன் பிறகு மறுபடியும் தர்ம புத்திரர் சில கேள்விகளைக் கேட்டார். அவைகளுக்குப் பதில் சொல்லும் வகையில் அவதரித்ததே ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்.

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் அவதாரிகை 13 சுலோகங்களின் கருத்து

தர்மபுத்திரர் ஸ்ரீ பீஷ்மாசாரியரைக் கேட்டதாக— விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் முன்னுரையாக அமைந்துள்ள முதல் 13 சுலோகங்களின் பொருளை அறிந்தால் இந்த ஸ்தோத்ரம் அவதரித்த காரணத்தையும், கடைசி 22 சுலோகங்களின் பொருளை அறிந்தால் மக்களின் அன்றாடைய வாழ்க்கையில் ஏற்படக்கூடிய நன்மையையும் நன்கு அறியலாம். எனவே, அந்த சுலோகங்களின் கருத்துக்கள் கீழே குறிப்பிடப்படுகின்றன :

1. ஸ்ரீ வைசம்பாயனர் சொல்லுகிறார் :

தர்மபுத்திரர் பீஷ்மாசாரியரிடமிருந்து மிகவும் புண்ணியமான தர்மங்களைப் பற்றித் தெரிந்து கொண்ட பிறகு மறுபடியும் பீஷ்மாசாரியரைப் பார்த்து இவ்வாறு கேள்வி கேட்கிறார்.

**தர்மபுத்திரரின் ஆறு கேள்விகள்:**

2. (1) உலகில் எல்லாத் தெய்வங்களிலும் உயர்ந்த ஒரே தெய்வம் எது? (2) எந்த ஒரு தெய்வம் சரணமாகப் பற்றத் தக்கது? (3) எவனைத் துதித்து மக்கள் சிறந்த பலனைப் பெறுவர்? (4) எவனைப் பூசித்து மக்கள் சிறந்த பலனைப் பெறுவர்?

3. (5) தங்கள் அபிப்பிராயத்தில் எல்லாத் தருமங்களிலும் சிறந்த தருமம் எது? (6) எதை ஜபித்து ஜீவன் பிறவியாகிய ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான்?

[குறிப்பு : இங்கு கேள்விகள் உள்ள வரிசையில் பதில்கள் இல்லை. அதற்குக் காரணம் விளங்கவில்லை. ஆகவே அந்த அந்த பதில்களுக்கு முன் அதற்குரிய கேள்விகளும் மற்றொரு முறை தரப்பட்டுள்ளன.]

**பீஷ்மாசார்யரின் பதில்கள்:**

**[6-வது கேள்வி; எதை ஜபித்து ஜீவன் பிறவியாகிய ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான்?]**

4. பதில்: ஜகத் ப்ரபுவாகவும் தேவ தேவனாகவும், அந்தமில்லாதவனாகவும், புருஷச் சிரேஷ்டனாகவும் உள்ள ஸ்ரீமந் நாராயணனை ஸஹஸ்ர நாமத்தால் எப்பொழுதும் ஊக்கத்துடன் துதி செய்பவன் ஸகல துக்கங்களினின்றும் விடுபடுகிறான்.

5. **[4-வது கேள்வி:—எவனைப் பூசித்து மக்கள் சிறந்த பலனைப் பெறுவர்?]**

பதில்: அவனையே எப்பொழுதும் பக்தியுடன் வழிபடுபவனும், அழியாத புருஷனாகிய அவனையே தியானமும், ஸ்தோத்ரமும், நமஸ்காரமும் செய்பவனுமான மனிதன் ஸகல துக்கங்களினின்றும் விடுபடுகிறான்.



ஸ்ரீ மாதவன்

(திருத்தேவனார் தொகை)

(சீர்காழிக்கு 4 மைலில் உள்ள க்ஷேத்ரம்)

"வீரஹா மாதவோ மது:" எனப்படுபவன். (சுலோகம்-18)

"இந்திரனும் இமையவரும் முனிவர்களும் எழிலமைந்த
சந்தமலர்ச் சதுமுகனும் கதிரவனும் சந்திரனும்
'எந்தை எமக்கருள்', என நின்றருளுமிடம் எழில்நாங்கை
சுந்தரநல் பொழில்புடைசூழ் திருத்தேவனார் தொகையே."

—திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 4-1-4

6. [3-வது கேள்வி :-எவனைத் துதித்து மக்கள் சிறந்த பலனைப் பெறுவர் ?]

பதில் : ஆதியந்த மில்லாதவனும், எங்கும் நிறைந்தவனும், ஸகலலோகங்களை ஆளுபவனும், உலகங்களுக்குத் தலைவனுமான பகவானை எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்பவன் ஸகல துக்கங்களினின்றும் விடுபடுகிறான்.

7. அவன், ப்ரஹ்மா, ப்ராஹ்மணன், தவம், வேதம் இவைகளுக்கு இதமானவன்; ஸகல தருமங்களையும் அறிந்தவன்; மக்களின் புகழை வளரச் செய்பவன்; உலகநாதன்; பெரிய பரம்பொருள்; எல்லா உயிர்கட்கும் பிறவியளிக்கும் காரணமானவன்.

[5-வது கேள்வி :— தங்கள் அபிப்பிராயத்தில் எல்லாத் தருமங்களிலும் சிறந்த தருமம் எது ?]

8. பதில் : புண்டரீகாக்ஷனை ஸ்ரீமந் நாராயணனை மனிதன் எப்பொழுதும் பக்தியுடன் ஸ்தோத்திரங்களால் அர்ச்சனை புரிவதென்பதே எல்லாத் தருமங்களிலும் மிகச் சிறந்த தருமம் என்பது என் அபிப்பிராயம்.

[2-வது கேள்வி :- எந்த ஒரே தெய்வம் சரணமாகப் பற்றத்தக்கது ?]

9. பதில் : எது உயர்ந்த ஒளியோ, எது உயர் பெரிய தவமோ, எது உயர் பெரிய ப்ரஹ்மமோ அத்தகைய சிறப்புகளைப் பெற்றதே சரணம் அடையத்தக்க ஒரே தெய்வம்.

[1-வது கேள்வி :- உலகில் ஒரே தெய்வம் எது ?]

10. பதில் : எவன் தூயவைகள் எல்லாவற்றிலும் தூயவனோ, மங்களகரமானவைகள் எல்லாவற்றிலும் மங்களகரமானவனோ, தேவர்களுக்கெல்லாம் தேவனோ, உயிரினங்களுக்கெல்லாம் எவன் அழியாத் தந்தையோ;

11. எவனிடமிருந்து ஸகல உயிர்களும் கல்பத் தொடக்கத்தில் (சிருஷ்டி காலத்தில்) பிறக்கின்றனவோ, எவனிடம் பிரளய காலத்தில் லயமடைகின்றனவோ ;

12. அத்தகைய உலகத் தலைமை தாங்கும் ஜகந்நாதனை விஷ்ணுவின் ஆயிரம் நாமங்களைக் கேள். இவை, பாபம் பயம் என்பவைகளை அகற்றும்.

வி. ஸ.—4

13. எந்த பரமாத்மாவினுடைய கல்யாண குணங்களைப் பற்றிய திருநாமங்கள் பிரசித்தி பெற்றுள்ளனவோ, எவைகளை ரிஷிகள் அடிக்கடிப் பாராயணம் செய்து வருகின்றார்களோ அந்தத் திருநாமங்களை, நான்கு புருஷார்த்தங்களைப் பெறுவதற்காகச் சொல்கிறேன், கேள்.

## பலச்ருதி சுலோகங்களின் கருத்து

இனி, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்வதால் ஏற்படும் நற்பயன்களை விளக்கும் இந்த ஸ்தோத்ரத்தின் இறுதியிலுள்ள 22 சுலோகங்களின் கருத்தாவது—

1. இப்படி ஸ்தோத்ரம் செய்யத்தக்க மஹாத்மாவான கேசவனின் ஆயிரம் திருநாமங்கள் குறையில்லாமல் கூறப்பட்டன.

2. இந்த ஸ்தோத்ரத்தைத் தினந்தோறும் கேட்பவனும், பாராயணம் செய்பவனும் இம்மையிலும் மறுமையிலும் எத்தகைய இன்னலையும் அடையமாட்டான்.

3. (1) பிராம்மணன் உண்மைப் பொருளை அறிவான். (2) க்ஷத்ரியன் வெற்றி பெறுவான். (3) வைசியன் செல்வம் செழிக்கப் பெறுவான். (4) இறுதி வர்ணத்தவன் இன்பமடைவான்.

4. (5) தர்மத்தைக் கோருபவன் தர்மத்தை அடைவான். (6) செல்வத்தைக் கோருபவன் செல்வத்தை அடைவான். (7) இல்லற சுகத்தில் விருப்பமுள்ளவன் அச்சுகத்தை அடைவான். (8) சந்ததியைக் கோருபவன் சந்ததியை அடைவான்.

5. எவனொருவன் தினந்தோறும் காலையில் எழுந்தவுடன் சுத்தமாக பகவானிடமே மனத்தை இருத்தி, வாஸுதேவனுடைய இந்த ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்வானோ—

6. (9) அவன் பரந்த புகழை அடைவான். (10) தலைமைப் பதவியை அடைவான். (11) அழியாச் செல்வத்தை யடைவான். (12) உயர்ந்த சிரேயஸ்ஸை (மோக்ஷத்தை) அடைவான்.

7. (13) எங்கும் பயத்தை அடையான். (14) வன்மையையும் ஒளியையும் அடைவான். (15) நோயற்றவனுவான். (16) காந்தியும், பலமும், அழகும், குணங்களும் பெறுவான்.

8. (17) நோயால் வருந்துபவன் நோயினின்றும் விடுபடுவான். (18) சிறைப்பட்டவன் சிறையிலிருந்து விடுபடுவான். (19) பயந்தவன் பயத்திலிருந்து விடுபடுவான். (20) விபத்திலுள்ளவன் விபத்திலிருந்து விடுபடுவான்.

9. (21) தினந்தோறும் பக்தியுடன் புருஷோத்தமனை ஸஹஸ்ரநாமத்தால் துதிசெய்பவன் கடக்க முடியாதவைகளை விரைவில் கடந்து விடுவான்.

10. (22) வாஸுதேவனைப் புகலிடமாகக் கொண்ட வாஸுதேவபக்தன் ஸகல பாபங்களும் நீங்கி சுத்தனுகி சாசுவதமான ப்ரஹ்மத்தை அடைவான்.

11. வாஸுதேவ பக்தர்களுக்கு எவ்விதமான அசுபமும் கிடையாது. ஜனனம், மரணம், மூப்பு, நோய் என்ற பயம் அறவே உண்டாகாது.

12. இந்த ஸ்தோத்திரத்தை சிரத்தை, பக்தி இவைகளுடன் கற்றுக்கொண்டவன் ஆத்மசுகம், பொறுமை, செல்வம், தைரியம், ஞானம், கீர்த்தி இவைகளைப் பெறுவான்.

13. புருஷோத்தமனிடத்தில் பக்தி கொண்ட புண்ணியாத்மாக்களுக்குக் கோபமுண்டாகாது; பொறுமை யுண்டாகாது; பேராசை உண்டாகாது; கெட்ட எண்ணமும் உண்டாகாது.

14. சந்திர சூரியர்கள், நக்ஷத்திரங்கள் இவைகளுடன் கூடிய ஆகாசமும், இடைவெளியும், திக்குகளும், கடலும் இவையெல்லாம் மஹாத்மாவான வாஸுதேவனின் சக்தியால் தாங்கப்பட்டுள்ளன.

15. தேவர், அசுரர், யக்ஷர், நாகர், ராக்ஷஸர் இவர்களுடன் கூடிய இந்தச் சராசரப் பிரபஞ்சம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய வசத்தில் இருக்கிறது.

16. இந்த்ரியங்களென்ற புலன்கள், மனம், புத்தி, ஸத்வமென்ற குணம், சக்தி, பலம், தைரியம், க்ஷேத்ரமாகிய சரீரம், க்ஷேத்ரஜ்ஞனுகிய ஆத்மா — இவை எல்லாம் வாசுதேவ மயமே.



திருவெள்ளறை ஸ்ரீ புண்டரீகாக்ஷன்

"அமோக : புண்டரீகாக்ஷ :" எனப்படுமவன்

(சுலோகம்-12)

(ஸ்ரீரங்கத்திற்கு 10 மைலில் உள்ள க்ஷேத்ரம்)

"கண்ணனே வெள்ளறை நின்ருய்
கண்டாரொ டேதீமை செய்வாய்
வண்ணமே வேலைய தொப்பாய்
வள்ளலே காப்பிட வாராய் "

—பெரியாழ்வார் திருமொழி 2-8-4

17. எல்லா வேதங்களிலும் ஆசாரம் முதன்மையானது என்று கூறப்பட்டுள்ளது. ஆசாரத்திலிருந்து தர்மம் உண்டாயிற்று, தர்மத்திற்கு அச்யுதன் பிரபு.

18. ரிஷிகள், பித்ருக்கள், தேவர்கள், பஞ்ச மஹாபூதங்கள், தாதுக்கள், இந்த சராசரப் பிரபஞ்சம்—இவை எல்லாம் நாராயணனிடமிருந்தே தோன்றியவை.

19. கர்மயோகம், ஞானம், ஸாங்க்யம், வித்யைகள், சில்பம் முதலிய தொழில்கள், வேதங்கள், சாஸ்திரங்கள், விஞ்ஞானம் — இவையனைத்தும் ஜநார்த்தநனிடமிருந்து உண்டாயின.

20. விஷ்ணு ஒருவனே ஒரு மஹாபூதமாகவும், தனித் தனியாக உள்ள பல பூதங்களாகவும், ஸகல பூதங்களுக்கும் ஆத்மாவாகவும் இருந்து மூவுலகங்களிலும் பரவி, அவைகளை அனுபவிக்கிருன். எல்லாவற்றையும் புசிப்பவன், அழிவற்றவன் அவனே.

21. எவனொருவன் மறுமையில் மோக்ஷத்தையும், இம்மையில் சுகத்தையும் அடைய விரும்புகிருனே அவன் ஸ்ரீ வியாஸ பகவானுல் இயற்றப்பட்ட இந்த விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப் படிக்க வேண்டும்.

22. உலக நாயகனும், பிறப்பற்றவனும், உலகத்தின் பிரபுவும், அழிவற்றவனுமான புண்டரீகாக்ஷனைப் பஜனை செய்பவர்கள் வாழ்க்கையில் தோல்வியை அடையவே மாட்டார்கள்.

## ஸஹஸ்ரநாமம் என்ருல் விஷ்ணு ஸஹஸ்ரநாமமே

''விஷ்ணு'' என்ற சொல் ''விஷ்ல் வ்யாப்தௌ'' என்ற தாதுவிலிருந்து வந்த சொல்லாகும். ஆகவே, விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் வியாபித்துள்ளவன் என்று பொருள். இப்படி, அங்கிங்கெனுதபடி எங்கும் பரவியுள்ள பரம்பொருள் ஸ்ரீமந்நாராயணனே — விஷ்ணுவே — என்பதை வேதங்களும், உபநிடதங்களும், புராணங்களும், இதிஹாஸங்களும் பறைசாற்றுகின்றன.

எனவே, ஸ்ரீமந் நாராயணனுடைய ஆயிரம் நாமங்களைக் கூறும் ஸ்தோத்ரமே "ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்" என்ற பெயரில் புகழ்பெற்று விளங்குகின்றது.

"விஷ்ணு ஸஹஸ்ரநாமம்" என்று சொல்லாமல், "ஸஹஸ்ரநாமம்" என்றாலே விஷ்ணு ஸஹஸ்ரநாமம் என்று எல்லோரும் அறிந்து கொள்ளும் அளவிற்கு இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்குப் பிரசித்தி ஏற்பட்டுள்ளதென்பது மிகையாகாது.

ஒவ்வொரு தேவதைக்கும் ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் உண்டு. விஷ்ணு ஸஹஸ்ரநாமம், லலிதா ஸஹஸ்ரநாமம், சிவ ஸஹஸ்ரநாமம், ராம ஸஹஸ்ரநாமம், கிருஷ்ண ஸஹஸ்ரநாமம், ந்ருஸிம்ஹ ஸஹஸ்ரநாமம் என்று பல ஸஹஸ்ரநாமங்கள் உள்ளன.

ஆயினும், அஷ்டாவக்ர கீதை, ரிபுகீதை முதலான கீதைகள் எத்தனையோ இருக்க, "கீதை" என்ற பொதுப் பெயரால் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு உபதேசித்த **பகவத் கீதை** ஒன்றே எப்படி எல்லோராலும் புரிந்து கொள்ளப்படுகிறதோ, அவ்வாறே ஸஹஸ்ரநாமம் என்ற பொதுப் பெயரால் **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமமே** எல்லோராலும் அறியப்படுகிறது.

இதைப் பற்றிய ஒரு கதையைப் பெரியவர்கள் சொல்வதுண்டு :

ஸ்ரீமத் ஆதிசங்கரபகவத்பாதர், ப்ரஹ்ம ஸூத்ரம், உபநிஷத்துகள், ஸ்ரீமத் பகவத்கீதை என்ற ப்ரஸ்த்தாநத்ரயத்திற்குப் பாஷ்யம் அருளிச் செய்தபிறகு, தம்முடைய ஆராத்ய தேவதையான அம்பாளின் திருக்கல்யாண குணங்களைக் கூறுகின்ற "ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம"த்திற்குப் பாஷ்யம் இயற்ற விரும்பினார். ஆகவே, லலிதா ஸஹஸ்ரநாமப் புஸ்தகத்தை எடுத்து வரும்படி சிஷ்யனிடம் சொன்னார். சிஷ்யன் உள்ளே போய் எடுத்து வந்து கொடுத்தான். அதைப் பிரித்துப் பார்க்கும்போது அது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம புஸ்தகமாய் இருந்தது. "லலிதா ஸஹஸ்ரநாம புஸ்தகத்தை அல்லவா எடுத்து வரச் சொன்னேன் ?" என்று சொல்லி மறுபடியும் அவனை அனுப்பினார். அவன் மறுபடியும் ஒரு

புஸ்தகத்தை எடுத்து வந்து கொடுத்தான். பிரித்துப் பார்க்கும்போது அதுவும் விஷ்ணு ஸஹஸ்ரநாம புஸ்தக மாகவே இருந்தது. ஸ்ரீ ஆசாரியாள் சிஷ்யனைக் கோபித்துக் கொண்டு, "திரும்பத் திரும்ப விஷ்ணு ஸஹஸ்ரநாம புஸ்தகத்தையே கொண்டு கொடுக் கிறாயே" என்று கேட்டார். அதற்கு சிஷ்யன், "ஸ்வாமி! மன்னித்தருள வேண்டும். பட்டுப் பாவாடை தரித்து, ஸர்வாபரண பூஷிதையான ஒரு கன்னிகை, 'இதைக் கொண்டு கொடு' என்று அதட்டுகிறாளே! நான் என்ன செய்வேன்?" என்று சொன்னான். உடனே ஸ்ரீ பரமாசாரியாள் ஆச்சரியமடைந்து உள்ளே போய் பார்க்க, அந்தக் கன்னிகையைக் காணோம். உடனே ஸ்ரீ ஆசாரியாள், ஆனந்த பாஷ்பத்துடன், "என் தாயே! உனது ஸஹோதரனான ஸ்ரீமந் நாராயண னுடைய திருநாமங்களுக்குப் பாஷ்யம் செய்யச் சொல்லி ஆக்ஞாபித்தாயோ? நின் கருணை வெள்ளம் பக்தர்களைக் காக்கட்டும்" என்று விளித்து, விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கே பாஷ்யம் அருளிச் செய்தார்.

இந்த நிகழ்ச்சியை யொட்டி ஸஹஸ்ரநாமம் என்ற பொதுப் பெயரால் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமமே அநாதி காலமாக அழைக்கப்படுகிறதென்பது விளங்குகிறது.

ஸ்ரீ ஆசாரியாள் பஜகோவிந்த ஸ்தோத்திரத்தில்—

"கே³யம் கீ³தா நாமஸஹஸ்ரம்
த்⁴யேயம் ஸ்ரீபதிரூபமஜஸ்ரம்|
ப⁴ஜ கோ³விந்த³ம் ப⁴ஜ கோ³விந்த³ம்
ப⁴ஜ கோ³விந்த³ம் மூட⁴மதே||"

என்ற சுலோகத்தில் பகவத் கீதையையும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் எப்பொழுதும் பாராயணம் செய்ய வேண்டுமென்பதை வலியுறுத்தியுள்ளார்.

மற்றும் ஸ்ரீ ஸஹஸ்ரநாம பாஷ்ய அவதாரிகையில்—

"ஸஹஸ்ர மூர்த்தே: புருஷோத்தமஸ்ய
ஸஹஸ்ரநேத்ராநந பா³ஹோ:|
ஸஹஸ்ரநாம்நாம் ஸ்தவநம் ப்ரஶஸ்தம்
நிருச்யதே ஜந்மஜராதி³ ஶாந்த்யை||"



அத்திகிரி ஸ்ரீ வரதன்
(சின்ன காஞ்சிபுரம்)

"வரதோ வாயுவாஹந:" எனப்படுமவன் (சுலோகம்-36)

"அத்தியூ ரான்புள்ளை யூர்வான், அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான்—முத்தீ
மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் றனக்கும்
இறையாவான் எங்கள் பிரான்."

—பூதத்தாழ்வார் இரண்டாந்திருவந்தாதி-96

என்ற சுலோகத்தால் பகவத் கடாக்ஷம் பெற்று ஜனன மரண ஜராதி கஷ்டங்கள் நீங்குவதற்கு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர படநமே சிறந்ததெனக் கூறியுள்ளார். இந்த சுலோகங்களில் "ஸஹஸ்ரநாம" என்ற பொதுப் பெயராலேயே விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைக் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமமே சிறந்தது

### (இதற்கு ஆறு காரணங்கள்)

பகவானுடைய கல்யாண குண திவ்ய சரிதங்களைக் கூறும் மற்ற நூல்களிலும் இந்த ஸஹஸ்ர நாமமே மக்களுக்குக் கைக்கொள்ள உரித்தாகும் பெருமைபெற்றதென்பதற்குக் **கூரத்தாழ்வான்** திருமகனாரும் ஸ்ரீரங்கநாத புத்ரரென்று போற்றப்படுபவருமான **ஸ்ரீ பராசரபட்டர்** ஆறு காரணங்களைக் கூறுகிறார். அவையாவன—

### 1. மஹாபாரத ஸாரமானது

ஐந்தாவது வேதமென எல்லோராலும் ஒருமுகமாய்ப் புகழப்பட்டதும், 'இதில் இல்லாதது வேறெங்கும் இல்லை' என்று வைதிக லௌகிகங்களான ஸகல விஷயங்களையும் நடுநிலையில் நின்று முடிவு கண்டு தருவதும், மற்ற புராணங்கள் அனைத்தினும் சிறப்புற்று விளங்குவதுமான மஹாபாரதத்தில், அதன் ஹ்ருதய ஸ்தானமாக உள்ள ஆநுசாஸநிக பர்வத்தில், தாந தர்மங்களில் சிறந்தவைகளை நிச்சயிக்கும் இடத்தில், ஸாரமானதாக இந்த ஸஹஸ்ரநாமம் கூறப்பட்டுள்ளது.

### 2. ரிஷிகள் போற்றியது

வேதார்த்தங்கள் முழுவதையும் கண்ட ஸநகர், ஸநந்தநர், நாரதர் முதலிய மஹர்ஷிகள் விளக்கிய பல்லாயிரக் கணக்கான திருநாமங்களிலிருந்து பொறுக்கி யெடுத்த நாமங்களின் தொகுதியாம் இந்த ஸ்தோத்ரம்.

### 3. வேதவியாஸர் தொகுத்தது

இந்த ஆயிரம் நாமங்களைப் பொறுக்கி ஸ்தோத்ரமாக ஆக்கியவர் வ்யாஸபகவான். இவர் பகவானுடைய அவதாரம் என்றே கூறப்படுகின்றார். இவர் பேச்சில் வஞ்சகம்

முதலியவற்றுக்கே இடமில்லை. ஸாதாரண மக்களுக்கும் பயன்படுமாறு ஸகல வேதங்களையும் இவர் வகுத்தருளியவர்; தத்துவங்களின் உண்மையிலும் அநுஷ்டானங்களிலும் அறியாமை, ஐயப்பாடு, விபரீதஜ்ஞாநம் ஆகியவை மக்களுக்கு ஒழியுமாறு ஐந்தாவது வேதமாகிய **மஹாபாரதத்தை** இயற்றியவர்; அரசர் குலத்தைச் சார்ந்த விசுவாமித்ர முனிவரைத் தம் வாய்ச் சொல்லால் பிரம்மரிஷியாக்கிய வஸிஷ்ட பகவானுக்குக் கொள்ளுப் பெயரர்; புலஸ்தியர், வஸிஷ்டர் இவர்களின் அநுக்ரஹத்தால் பரதேவதையின் உண்மைகளைக் கண்டறிந்து **ஸ்ரீ விஷ்ணு புராணம், பராசர ஸம்ஹிதை** இவற்றைச் செய்தவராகச் சைவ புராணங்களிலும் போற்றப்பெற்ற பராசர பகவானின் புதல்வர்; பிறரால் செய்ய முடியாத ஒப்பற்ற தவம், தியாநம் இவற்றால் ஸகல மஹர்ஷிகளின் கூட்டத்தால் பூஜிக்கப் பெற்றவர். இத்தகைய வ்யாஸபகவான், முன்பு ஸநகாதியர் பாடிய திருநாமங்களிலிருந்து பொறுக்கி ஸ்தோத்ர வடிவில் இதைத் தொடுத்ததால் எல்லோரும் கைக்கொள்ள உரியதாயிற்று.

## 4. பீஷ்மரின் சிறந்த மதம்

பீஷ்மாசாரியர் இந்தத் திருநாமங்களின் பெருமை மற்ற அனைத்தினும் மிக்கது என்பதைத் தம் சிறந்த மதமாகப் போற்றுகின்றார். பீஷ்மர் ஸாதாரண மனிதரா? வ்யாஸ பகவான், பீஷ்மாசாரியரை ஸகல தத்துவங்களையும் அறிந்த ஸர்வஜ்ஞரென்றும், அவர் அறியாத விஷயம் இல்லையென்றும், அவர் ஒருவரே தர்மங்களைப் பற்றி எழும் ஸந்தேஹங்களைப் போக்கவல்லவரென்றும் கூறித் தர்மபுத்ரரைப் பீஷ்மரிடம் தர்மம் கேட்டுத் தெளியுமாறு கட்டளையிடுகின்றார். பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருந்தபோது கண்ணபிரான் அவர் பெருமையை நினைந்து நினைந்து மனமுருகுகின்றான். மேலும், பீஷ்மரை நான்கு வேதங்களையும் அங்கங்களுடன் அறிந்தவரென்றும், த்ரிகாலத்தையும் அறிந்த ஒப்பற்ற ஜ்ஞாநி யென்றும் தன் உள்ளம் அவரிடமே செல்கிறதென்றும், அவர் மறைந்து விட்டால் உலகில் ஞானமே குறைந்து விடுமென்றும், அவர் தம் தவத்தால் புதியதோர் உலகத்தைப் படைக்கும் ஆற்றலுடையவரென்றும் கூறி அவர் மறைவுக்கு வருந்துகின்றான். இவ்வாறு பகவானே போற்றுமளவுக்கு மகிமை பொருந்திய பீஷ்மாசாரியர் இந்த ஸஹஸ்ர நாமத்தின் பெருமை எல்லாவற்றினும் மிக்கதாகத் தமது சிறந்த மதமென வெளியிட்டுள்ளார்.

## 5. பலராலும் கைக்கொள்ளப்பட்டது

பலராலும் மிகமிகக் கைக்கொள்ளப்படுகின்றது இந்த ஸஹஸ்ரநாமம். பாரதம், ஸ்ரீ விஷ்ணு தர்மம் முதலிய நூல்கள் இதன் பெருமையை மிகப் புகழ்கின்றன. ஆயுர் வேத சாஸ்த்ரங்களும் ஸஹஸ்ர நாமத்தைக் கொண்டு எம் பெருமானைத் துதித்தால் ஸகல ஜ்வரங்களும் நீங்கிவிடுவ தாய்க் கூறி, இதன் ஜபத்தால் க்ஷய ரோகமும், மூத்திர கோச சம்பந்தமான நோய்களும், க்ரஹங்களால் வரும் உபத்திரவங்களும் ஒழிந்து விடுவதாய் வெளியிடுகின்றன. உலகிலுள்ள கவிகளும் ஸஹஸ்ர நாமத்தைக் கொண்டு காப் பிடுவதால் நலம் விளைவதாகத் தங்கள் நூல்களில் மொழி கின்றனர். பல மக்கள் இதைக் கற்கின்றனர்; மனப் பாடம் செய்கின்றனர்; பிறரிடம் கேட்கின்றனர்; ஜபம் செய்கின்ற னர்; தினந்தோறும் அநுஸந்திக்கின்றனர்; காகிதத்தில் எழுதுகின்றனர்; பிறருக்கு விளக்குகின்றனர்; இதை அநு ஸந்திப்பவரைப் பூஜிக்கின்றனர். இன்னும் இத்தகைய பல் வேறு புண்ணியச் செயல்களைச் செய்கின்றனர்.

## 6. கீதைப் பொருளை நிர்ணயிப்பது

ஸ்ரீ ஸஹஸ்ர நாமம் பாரதத்தில் முக்கியப் பகுதியான **பகவத் கீதை** முதலிய கிரந்தங்களில் கூறிய அர்த்தத்தை நிர்ணயித்துக் கொடுப்பதாக இருக்கின்றது. இங்ஙனம் அவை கூறும் அர்த்தத்தையே இதுவும் கூறுவதாலும் கைக் கொள்ளச் சிறந்ததாயுள்ளது.

இந்த ஆறு காரணங்களால் நன்கு சிந்தித்துச் செய லாற்றும் தன்மையரான அறிஞர்களுக்கு இந்த ஸஹஸ்ர நாமம் கைக்கொள்ள மிகச் சிறந்ததாய் நிர்ணயிக்கப்பட் டுள்ளது.

ஸ்ரீமத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வ பௌமரான தூப்புற்குலமணி **ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசி கன்**, தாமருளிச் செய்த பாதுகா ஸஹஸ்ரத்தில் "விஶ்வம்ப⁴ரா ஶ்ருதிப⁴வேந மஹர்ஷிணா யத் வ்யாஸேந யச்ச மது⁴ ஸூத³ந பாத³ரக்ஷே | த்³வே சக்ஷுஷீ" வால்மீகி மஹர்ஷியி னல் அருளிச் செய்யப்பட்டதும், வ்யாஸ பகவானல் அருளிச் செய்யப்பட்டதுமான ஸ்ரீமத் ராமாயண மஹாபாரதங்கள் இரண்டும் நமக்கு இரண்டு கண்களாக அமைந்துள்ளன— என்றருளிச் செய்துள்ளார்.



திருவெவ்வுள் ஸ்ரீ வீரராகவன்

(திருவள்ளூர் ரயில் நிலையத்திற்கு $2\frac{1}{2}$ மைலில் உள்ள திவ்யதேசம்)

"வீர : பபத்திமதாம் ஶ்ரேஷ்ட :" எனப்படுமவன்

(சுலோகம்-43)

"பந்தி ருக்கும் மெல்விரலாள் பாவை பனிமலராள்
வந்தி ருக்கும் மார்வன்நீல மேனி மணிவண்ணன்
அந்த ரத்தில் வாழும் வானோர் நாயகனாயமைந்த
இந்தி ரற்கும் தம்பெருமா னெவ்வுள் கிடந்தானே"

—திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 2-2-9

முன்னோர்களும்—

"ஸ்த்ரீ ஶூத்[3]ர த்[3]விஜப[3]ந்தூ[4]நாம் த்ரயீ ந ஶ்ருதிகோ[3]சரா |
இதி பா[1]ரதமாக்[2]யாநம் க்ருபயா முநிநா க்ருதம்||"

அதாவது, ஸ்திரீகள், சூத்ரர்கள், பக்தர்கள் ஆகியோர் வேதத்தைக் கேட்கவும் தகுதியற்றவராகின்றனர் என்று மனமிரங்கிய வியாஸபகவான், அவர்களும் உய்யவேண்டு மென்று பரம கருணையுடன் ஐந்தாவது வேதமாக ஸ்ரீமந் மஹா பாரதத்தை அருளினார்—என்று போற்றியுள்ளனர்.

## பார்வதிதேவியும் பாராயணம் செய்தது

ஆயிரநாமத்தின் மஹிமையை ஆயிரம் வாய்கள் படைத்த ஆதிசேஷனாலும் கூற முடியாது ஒரு சமயம கைலயங்கிரியில் கைலாஸநாதர் தியான நிலையிலமர்ந்திருந் தார். தியானம் முடிந்ததும் உமாதேவியார், "பெருமானே, தாங்கள் தேவர்களுக்கு தேவர்; பரமேசுவரர். தாங்கள் எந்த மூர்த்தியை தியானம் செய்கிறீர்கள்?" என்று வினவ, சிவபெருமான், "உமையே, நான் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி யைத் தியானம் செய்கிறேன். அவரையே நீயும் பிரதி தினம் வழிபடுவாயாக!" என்று கூறினார். பார்வதி தேவியும் வாம தேவ முனிவரிடம் ஸஹஸ்ரநாமத்தின் பூஜா பாராயண முறைகளை அறிந்து, பிரதி தினமும் விஷ்ணு பூஜை செய் வாள். பூஜையின் முடிவில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும் செய்வாள். இவ்வாறு நியமம் தவறாது செய்து வந்தாள்.

ஒருநாள் துவாதசி. பரமேசுவரன் துவாதசி பாரணை செய்வதற்குப் பார்வதிதேவியை அழைத்தார். அவ்வம்மை, "பெருமானே, நான்வழக்கப்படி விஷ்ணு ஸஹஸ்ரநாமபாரா யணம் செய்ய வேண்டும். பாராயணம் முடிந்தபின் உண் பேன்" என்று கூறி, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தாள். இப்படி, உமாதேவியார் பிரதி தினம் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தார் என்றால் அந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் எவ்வளவு மகிமைப்பெற்றதாக இருக்க வேண்டும்!

## ஒரு சுலோகம் படித்தாலும் போதும் !

**பீஷ்மர் உபதேசித்த ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் முழுவ தும் கேட்ட அர்ஜுனனுக்கு "இது நூற்றுக்கும் மேற்பட்ட**

சுலோகங்களைக் கொண்டிருக்கிறதே. இதைப் பூர்ணமாகக் கற்றுப் பாராயணம் செய்யும் ஆற்றலும் அவகாசமும் அற்றவர்கள் பலர் இருப்பார்களே. அவர்கள் கதி என்ன ஆவது?'' என்ற கேள்வி மனத்தில் எழுந்தது. ''அதோகதிதானோ என்னவோ'' என்றுகூட நினைத்தான். உடனே அவன் உள்ளம் பதறிற்று. எழுந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அருகில் சென்றான். அவர்களும் உய்யும்படி ஒரு வழியை அவர் உபதேசிக்க வேண்டுமென்று நினைத்து வெளிப்படையாகக் கீழ்ச் சொன்னபடி பகவானை விளித்து அவர்களையும் காக்க வேண்டும் என்று வேண்டினான். அவன் எண்ணத்தை உணர்ந்த ஸ்ரீ கிருஷ்ணன் அப்போதே,

''எவன் என்னை ஸஹஸ்ர நாமத்தினால் ஸ்தோத்திரம் செய்ய விரும்புகின்றானோ அவன் அதைப் பூர்த்தியாகப் பாராயணம் செய்யமுடியா விட்டாலும் ஸஹஸ்ரநாம சுலோகங்களில் ஏதாவது ஒன்றைச் சொன்னாலே போதும். அதுவே பூர்ண பாராயணத்தினால் வரக்கூடிய பலனைத் தரும். இதில் ஐயம் வேண்டாம்'' என்றார்.

## ஒரு நாமமே ஸஹஸ்ரநாம ஸமம்

இப்படி ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தைப் பற்றி நிகழ்ந்ததை யெல்லாம் அறிந்தாள் பார்வதீ தேவி. மனிதர்களிடத்தில் அம்பாளுக்குள்ள கருணை அபாரமானது. அவள் ஆலோசனை பண்ணினாள். முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டது ஒரு சுலோகம். இதை முழுவதும் கற்றுப் படிக்கக்கூட முடியாத பல ஆன்மாக்கள் இருக்கலாம். அவர்களுக்கும் ஒரு வழி காட்டவேண்டாமா? என்று சிந்தனை செய்தாள். உடனே பர்த்தாவிடம் சென்றாள். ஸஹஸ்ரநாம சுலோகங்களில் முழுசுலோகம் ஒன்றைப் படிப்பதுகூட பலருக்கு கடினமாயிருக்கலாம். அதைக் காட்டிலும்கூட லகுவான வழி ஒன்றிருந்தால் அதை உபதேசிக்க வேண்டுமென்றாள். உடனே ஈசுவரன் அவளைக் கொண்டாடி, '' 'ஸ்ரீராம ராம ராம'' என்று சொன்னாலே போதும். அது ஸஹஸ்ரநாமத்திற்குச் சமமானது'' என்றார்.

ஸஹஸ்ர நாமத்தில் 22-வது தளமாக ஸ்ரீராமாவதார சம்பந்தமான நாமங்களுக்கு ஸ்ரீ பராசர பட்டர் பாஷ்யம் எழுதும்போது ''ம்ருத ஸஞ்ஜீவனமான ஸ்ரீராம நாமங்கள் சொல்லப்படுகின்றன'' என்று முன்னுரை யிட்டுள்ளார்.

ம்ருத ஸஞ்ஜீவனம் என்றால்* 'இறந்தவர்களைப் பிழைப்பூட்டுவது' என்று பொருள். எல்லாம் வல்ல இறைவன் நாமம், இறந்தவர்களையும் பிழைப்பூட்டுமென்று கொள்வதில் தவறென்ன? எனவே, ஸ்ரீ ராமநாமம் அவ்வளவு மகிமை பொருந்தியதென்று ஸ்ரீ பராசர பட்டர் அருளிச் செய்ததைக் கருத்தில் இருத்த வேண்டும்.

ஆகவே, ஸஹஸ்ரநாமம் முழுவதும் நன்றாகக் கற்று நித்ய பாராயணம் செய்து வருபவர்கள்கூட சில ஸமயங்களில் எக்காரணத்தினாலாவது பூர்ண பாராயணம் செய்ய அவகாசம் கிடைக்காவிட்டால் ஏதாவது ஒரு சுலோகத்தை அல்லது ராமநாமத்தை மட்டும் அந்தக் காலங்களில் பக்தியுடன், உருக்கத்துடன் அநுஸந்தானம் செய்தால் பூர்ண பாராயணம் செய்தது போலவே ஆகுமென்பது ஸ்ரீ கிருஷ்ணனுடையவும், ஈசுவரனுடையவும் உபதேசத்தின் கருத்து.

## இதர பாராயணங்களிலும் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம்

ஸ்ரீமத் பாகவத ஸப்தாஹ பாராயணம் நடைபெறும் காலத்தில் பாதகங்கள் நீங்குவதற்காக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர பாராயணம் செய்யவேண்டும் என்று ஸநத்குமார முனிவர் கூறுகின்றார்.

ஸ்ரீமத் ராமாயண நவாஹ பாராயணத்திலும் (9 நாட்கள்) ஒவ்வொரு நாளும் பாதகங்கள் நீங்குவதற்காக ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர பாராயணம் செய்யவேண்டுமென்று அகஸ்தியர் கூறுகிறார்.

குமார ஸம்ஹிதையில் 'ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடைபெறும் பொழுது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமங்களைச் சொல்லி மல்லிகை, சம்பக மலர்களால் ஸ்ரீராமபிரானுக்கு அர்ச்சனை செய்யவேண்டும் என்று கூறப்படுகிறது.

---

* அல்லது, அவன் நாமத்தைச் சொல்லாதவர் இறந்தவர்க்குச் சமானம். பிறகு அவன் நாமத்தை அறிந்து சொன்னவர் மறுபடியும் பிழைப்பூட்டப்படுவதாகவும் பொருள் கொள்ளலாம்.



திருவஹீந்திரபுரம்
ஸ்ரீ தேவநாதன்

(திருப்பாப்புலியூர் ரயில் நிலையத்துக்கு 3 மைலில் உள்ள க்ஷேத்திரம்)

''ஆதிதேவோ மஹாதேவோ தேவேஶ:'' எனப்படுமவன்
(சுலோகம்-52)

''வைய மேழுமுண் டாலிலைவைகிய
மாயவன், அடியவர்க்கு,
மெய்யனுகிய தெய்வநா யகனிடம்
மெய்தகு வரைச் சாரல்,
மெய்கொள் மாதவி சண்பகம் முயங்கிய
முல்லையங் கொடியாட,
செய்ய தாமரைச் செழும்பனை திகழ்தரு
திருவயிந்திரபுரமே.''

—திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 3-1-3

## ஆயிரம் என்பது உபலக்ஷணமே

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்திலுள்ள பகவந் நாமங்கள் குணபரமானவைகளாயும், ரிஷிகளால் கீர்த்தனம் பண்ணப்படுபவனவாயும் உள்ளவைகளாம். அநந்தகல்யாண குணங்களையுடைய பகவானுடைய குணங்களை வரையறுக்க முடியாது. "ஸஹஸ்ரம்" என்பது உபலக்ஷணமே. (அதாவது சொல்லவேண்டிய பெரும்பகுதியில் ஒரு சிறு பகுதியே.) அந்த குணங்களுக்கு எல்லை காணலுமாகாது. வேதங்கள் பகவத் குணங்களைக் கூறத்தொடங்கி அவை முற்றுப் பெறுது திரும்பிவிட்டன. அப்படி இருந்தும் லோக ஹிதார்த்தமாக வேதவ்யாஸர் "ஸஹஸ்ரம்" என்று ஓர் அறுதியிட்டு பகவத் குணபரங்களான நாமங்களை வெளியிட்டருளினர். அதுகாண் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமாக அமைந்தது.

## பகவானிலும் சிறந்தது பகவந்நாமம்

பகவானைக் காட்டிலும் அவனது திருநாமத்திற்கு ப்ரபாவமதிக மென்பர் ஆன்றோர். ஈச்வரன் கட்டிப்பொன் போலவாம். அவனது திருநாமம் ஆணிப்பொன் போலவாம். "வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம். அவன் தூரஸ்தனானாலும், இது கிட்டி நின்றுதவும். த்ரௌபதிக்கு ஆபத்தில் புடவை சுரந்தது திருநாமமிறே" என்கிற திவ்யஸூக்தி காண்க. திருநாமம்தான் மஹாபாதகநாசகமென்பதையும், யமபாதையையும் நிவ்ருத்தி பண்ணுவது என்பதையும் அஜாமிள உபாக்யானம் மூலம் காணலாம். மதிநலமருளப் பெற்ற ஆழ்வார்களெல்லோரும் ஒருமிடராய்ப் பகவந் நாமங்கட்கே ஏற்ற மருளிச் செய்துள்ளார் காணீர்! "குலம் தரும், செல்வம் தந்திடும், அடியார் படு துயராயின வெல்லாம் நிலம் தரஞ்செய்யும்" என்றெல்லாம் பகவந் நாம மஹிமையைப் பேசுகிறார் திருமங்கையாழ்வார். "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே" என்றருளினர் நம்மாழ்வார். பகவானது ஆயிர நாமங்களைக் கொண்டு பாடுவீர் என்று பெரியாழ்வார் அருளிச் செயல் உளது. "தொண்டக் குலத்திலுள்ளீர் வந்தடி தொழுதாயிர நாமம் சொல்லி" என்றிருப்பது காணலாம்.

எனவே யக்ஞதான தபஸ்ஸுகளின்றியே திருநாமத்தைச் சொல்லி பேறு பெறலாமென்பது காண்கின்றன மன்றோ இவ்வரிய பெரிய வருளிச் செயல்களால்.

## ஸஹஸ்ரநாமத்தின் ஆரம்பமும் முடிவும்

வேதத்தில் புருஷஸூக்தம் ஸ்ரீமந் நாராயணனைக் கூறுகிறது. அந்த புருஷஸூக்தமே ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமமாய் அமைகிறது. "அந்தர் ப³ஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி²த:" என்று சொல்வது வேத வாக்யம். அதுவேதான் "விஶ்வம் விஷ்ணுர் வஷட்கார:" என்று ஆரம்பமாகும் அரும் பதங்களால் குறிப்பிடப்படுகிறது.

ஸ்ரீ பீஷ்மாசாரியரே, "தேவகீநந்தநஸ் ஸ்ரஷ்டா க்ஷிதீஶ: பாபநாஶந:" என்று சொல்லுகிறார்.

"தேவகீ மைந்தனாய், வாஸுதேவனாய், இங்கே என் சொல்லையும் கேட்டு மந்தஸ்மிதனாய் உட்கார்ந்து, என் உள்ளத்திலும் அமர்ந்து, என்சொல்லைக் கிளப்பி விட்டு, என்றென்றும் உலகிற்கு "க்ஷிதீஶ" னாய் விளங்கும் ப்ரபு இவன்தான்." பிறகு "ஸர்வப்ரஹரணாயுத:" என்று ஸஹஸ்ர நாமத்தை முடிக்கும் போது, "என் போன்ற அடியாரைக் காக்க, அன்று என்னுடன் போர் நடக்கும் போது தன் ப்ரதிக்ஞை மறந்து, என் ப்ரதிக்ஞைக்காகக் கையில் ஆயுதம் தாங்கி, "சக்ரி" யாகவும், "ஶங்கப்ருத்" சங்கத்தை செந்தாமரைக் கையில் ஏந்தி அருகில் வந்து, அருள் புரிந்து இருள் நீக்கிய என்னப்பனைப்போல் ஒப்பிய தெய்வம் இல்லை என்று தன் அனுபவத்தை மங்களமாய் முடிக்கிறார்.

## நாமம் ஒன்றுக்கு நூறு அர்த்தங்கள்

"பாரதம் ஸர்வஶாஸ்த்ரேஷு பாரதே கீதிகா வரா |
விஷ்ணோ: ஸஹஸ்ரநாமாபி ஜ்ஞேயம் பாட்யம் ச தத்த்வத: ||
த்ரயோர்த்தா: ஸர்வவேதேஷு தஶார்த்தா: ஸர்வபாரதே |
விஷ்ணோ: ஸஹஸ்ரநாமாபி நிரந்தர ஶதார்த்தகம் ||"

என்று கூர்ம புராணம் முதலியவைகளில், "மஹாபாரதம் சாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது; பாரதத்திலே பகவத்கீதையும் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமமும் சிறந்தவை; ஆகவே ஸ்ரீ பகவத் கீதையையும் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்தையும் ஒவ்வொருவரும் கற்றுக் கொள்ள வேண்டும்; பாராயணம் செய்ய வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

தவிர, "ஸகல வேதங்களுக்கும் மூன்று அர்த்தங்கள் உண்டு; மஹாபாரதம் முழுவதிற்கும் பத்து அர்த்தங்கள் உண்டு; விஷ்ணுஸஹஸ்ர நாமத்திலுள்ள ஒவ்வொரு நாமத்திற்கும் நூறு அர்த்தங்கள் உண்டு" என்றும் கூறப்பட்டுள்ளது. ஆகவே, ஒரு நாமத்திற்கு நூறு அர்த்தங்களைத் தரக்கூடிய அர்த்த புஷ்டியுள்ள ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்தின் மகிமை சொல்லிற்கடங்காததன்றோ!

## ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யங்கள்

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலுள்ள ஒவ்வொரு பகவந் நாமத்தாலும் குறிப்பிடப்படும் பகவத் கல்யாண குணங்களையும், அவதார குண சேஷ்டிதங்களையும் அந்த அந்த நாமத்தைக் கூறும் சொல் எந்த ஸம்ஸ்கிருத மூலச்சொல் (தாது) விலிருந்து என்ன பொருளில் எந்த சப்தங்களுடன் இணைந்து என்னென்ன அர்த்தங்களைக் கூறுகிறது என்ற விவரத்தையும் நன்கு எடுத்துக் காட்டுகின்ற "பாஷ்யங்கள்" என்று பெயர் கொண்ட வியாக்யானங்கள் சில உள்ளன.

பிரஸ்தான த்ரயங்களுக்கும் பாஷ்யம் எழுதிய ஸ்ரீ ஆதி சங்கரர் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு முதன் முதலாக விரிவாகத் தனியே பாஷ்யம் எழுதியிருக்கிறார். இந்த பாஷ்யத்தைக் கண்டு, மஹாபாரதம் முழுவதற்கும் பாஷ்யம் எழுதியுள்ள ஸ்ரீ நீலகண்டரும், ஸ்ரீவித்யாரண்யரும் மயிர்க்கூச்செறிந்து இதை வாயாரப் புகழ்ந்துள்ளார்கள்.

ஸ்ரீரங்கநாதனுடன் நேருக்கு நேர் பேசும் பிரபாவம் பெற்ற ஸ்ரீ பராசர பட்டர் "பகவத்குண தர்பணம்" என்ற பெயரில் அற்புதமாக விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு விசிஷ்டாத்வைத முறையில் பாஷ்யம் எழுதியிருக்கிறார்.

ஸ்ரீ மாத்வ ஸம்ப்ரதாயத்தில் மிகப் பிரஸித்தராக விளங்கிய மஹானன ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்திற்குப் பாஷ்யம் அருளிச் செய்துள்ளார்.

ஆகவே உலகத்தோர் உய்யவே வாழ்ந்த இப் பெரியோர்கள் இவ்விதம் ஒருமுகமாகப் புகழும் விஷ்ணு ஸஹஸ்ரநாமம், கோரிய பலனைத் தரும் என்பதற்கு எள்ளளவும் சந்தேகமில்லை.



**திருக்கோவலூர் த்ரிவிக்ரமன்**

*(திருக்கோயிலூர் ரயில் நிலையத்திற்கு 2 மைலில் உள்ள க்ஷேத்ரம்)*

"ஸத்யதர்மா த்ரிவிக்ரம:" எனப்படுமவன் (சுலோகம்-56)

" நீயும் திருமகளும் நின்றாயால், குன்றெடுத்துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா—வாயில்
கடைகழியா வுள்புகாக் காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றி யினி."

—பொய்கையாழ்வார் முதற்றிருவந்தாதி-86

இந்த பாஷ்யங்களை ஆதாரமாகக் கொண்டு பல மொழிகளில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு வியாக்யானங்கள் வெளிவந்துள்ளன.

மற்றும், இந்த பாஷ்யங்களின் மூலம் ஒவ்வொரு நாமத்தின் பொருளை அறிந்து, அந்த ஞாபகத்துடன் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஜபம் செய்பவர்களுக்கு நாமருசி நன்கு விளங்குமென்பதில் யாதொரு ஐயமுமில்லை.

## பாட பேதங்கள்

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் ஆங்காங்கு சில பாட பேதங்கள் பரம்பரையாக வந்துள்ளன. ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அநுஸந்திக்கப்படும் இத்தகைய ஸ்தோத்ரங்களில் பாட பேதங்கள் வருவது இயற்கையே. பாட பேதங்களால் சிறிதளவு அர்த்தத்தில் பேதம் ஏற்பட்டாலும் அவைகள் உண்மைப் பொருளை விளக்காமலில்லை. ஆகவே ஒவ்வொரு பாடமும் உயர்ந்ததே. ஆயினும் அவரவர்க்கென ஒரு ஸம்பிரதாயம் இருப்பதால் அந்த ஸம்பிரதாயத்துப் பெரியவர்கள் அநுஷ்டித்து உபதேசித்த பாடங்களைப் பின்பற்றுவதே சிறந்தது.

ஸஹஸ்ர நாமத்திற்கு முக்கியமாக **ஸ்ரீ சங்கரர்**, **ஸ்ரீபட்டர்**, **ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்** இம் மூவரும் பாஷ்யம் இயற்றியுள்ளார்கள். ஆகவே, ஸ்மார்த்தர்கள் **ஸ்ரீசங்கரர்** ஆதரித்த பாடத்தையும், ஸ்ரீவைஷ்ணவர்கள் **ஸ்ரீ பட்டர்** பாடத்தையும், மாத்வர்கள் **ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்** பாடத்தையும் அநுஸரித்துப் பாராயணம் செய்ய வேண்டும்.

இந்த கிரந்தத்தில் மூலம் ஸ்ரீ பட்டர் பாடப்படி தரப்பட்டிருக்கிறது. ஸ்ரீசங்கர, ஸ்ரீமாத்வ பாடங்கள் அடிக் குறிப்பாகத் தரப்பட்டுள்ளன. அந்த அந்த ஸம்பிரதாயத்தவர்கள் தம் தம் பாடப்படி அநுஸந்திக்க வேண்டும்.

## சதகங்களைக் கணக்கிடுதல்

ஸஹஸ்ர நாமத்திலுள்ள ஆயிரம் நாமங்களை நூறு நூறாகப் பிரித்து 'சதகம்' என்று கணக்கிட்டிருக்கிறார்கள். சற்று வித்தியாசத்துடன் கூடிய ஸ்ரீசங்கரர், ஸ்ரீபட்டர் இவர்களின் சதகக் குறிப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

## ஸ்ரீ சங்கர பாஷ்யப்படி சதகங்கள்

| சதக எண் | ஆரம்பம் | முடிவு |
|---|---|---|
| முதலாவது | விச்வம் | அச்யுத: |
| இரண்டாவது | வ்ருஷாகபி: | ஸிம்ஹ: |
| மூன்றாவது | ஸந்தாதா | யுகாதிக்ருத் |
| நான்காவது | யுகாவர்த்த: | அநய: |
| ஐந்தாவது | வீர: | போக்தா |
| ஆறாவது | கபீந்த்ர: | ஶிவ: |
| ஏழாவது | ஸ்ரீவத்ஸ வக்ஷா: | ஸத்க்ருதி: |
| எட்டாவது | ஸத்தா | ஸுவர்ணபிந்து: |
| ஒன்பதாவது | அக்ஷோப்ய: | அப்யய: |
| பத்தாவது | ஸ்வஸ்தித: | ஸர்வப்ரஹர ணாயுத: |

## ஸ்ரீ பராசர பட்டர் பாஷ்யப்படி சதகங்கள்

| சதக எண் | ஆரம்பம் | முடிவு | சதகப் பெயர் |
|---|---|---|---|
| முதலாவது | விச்வம் | ஸர்வாதி: | விச்வசதகம் |
| இரண்டாவது | அச்யுத: | அம்ருத்யு: | அச்யுத சதகம் |
| மூன்றாவது | ஸர்வத்ருக் | ப்ரபு: | ஸர்வத்ருக் சதகம் |
| நான்காவது | யுகாதிக்ருத் | நய: | யுகாதிக்ருத் சதகம் |
| ஐந்தாவது | அநய: | புராதந: | அநய சதகம் |
| ஆறாவது | ஶரீரபூத ப்ருத் | கோப்தா | ஶரீரபூதப்ருத் சதகம் |
| ஏழாவது | வ்ருஷபாக்ஷ: | வாஸுதேவ: | வாஸுதேவ சதகம் |
| எட்டாவது | வஸு: | ஸுலோசந: | ஸுலோசந சதகம் |
| ஒன்பதாவது | அர்க்க: | கபிரவ்யய: | அர்க்க சதகம் |
| பத்தாவது | ஸ்வஸ்தித: | ஸர்வப்ரஹ ரணாயுத: | ஸ்வஸ்தி சதகம் |

# ஸஹஸ்ரநாம நிர்வசனம்

ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ வரதராஜப் பெருமாளை உபாஸனு தெய்வமாகக் கொண்டவரும் கௌசிக கோத்திரத்தில் அவதரித்தவருமான ஸ்ரீ வரதாச்சாரியார் ஸ்வாமி என்ற மஹான் ஸஹஸ்ரநாம நிர்வசனம் செய்தார். இந்த நிர்வசனம் சுலோக ரூபத்தில் நாமங்களின் அர்த்தத்தை நன்கு விளக்குகிறது.

இந்த ஸ்வாமி, நாம நிர்வசனம் செய்தபிறகு நிர்வசன சேஷம் என்ற பெயரில் 52 சுலோகங்களை இயற்றியிருக்கிருர். இவைகளின் மூலம் ஸஹஸ்ர நாமங்களைச் சதகம் சதகமாகப் பிரித்து ஒவ்வொரு சதகத்தின் ஆதி அந்தங்களை விளக்கிக் காட்டியிருக்கிருர்.

தவிர, நாமங்களை மூன்று வகையாகப் பிரித்திருக்கிருர். அதாவது:

## 1. ஏகாநேக நாமங்கள்

ஒரு சமயம் ஒரு நாமமாகவும், மற்ருெரு சமயம் இரண்டு நாமங்களாகவும் கொள்ளப்படுபவை:

1. த்ரிககுத்தாம
2. ஹவிர்ஹரி:
3. ஸதக்ஷரம்
4. அஸதக்ஷரம்
5. ஸவ:
6. சதுர்வேதவிதேகபாத்

'விரஜோமார்க்க:' என்பதையும் பாடபேதத்தால் இதில் சேர்ப்பர்.

## 2. ஏக நாமங்கள்

ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களிருப்பினும் ஒரே நாமமாகக் கொள்பவை :—

1. முக்தாநாம் பரமாகதி:
2. நிதிரவ்யய:
3. மங்களம்பரம்
4. ஶாஶ்வதஸ்ஸ்தாணு:
5. குருர்க்குருதம:
6. அஹஸ் ஸம்வர்த்தக:
7. விஶ்வபுக்விபு:
8. ஓஜஸ்தேஜோத்யுதிதர:
9. இஷ்டோவிஶிஷ்ட:
10. பரமஸ்பஷ்ட:
11. தர்மவிதுத்தம:
12. ஸ்தாவரஸ் ஸ்தாணு:
13. பீஜமவ்யயம்
14. ஜ்ஞாநமுத்தமம்
15. ஜ்யோதிராதித்ய:
16. ஶ்ரேய: ஸ்ரீமாந்
17. ஜ்யோதிர் கணேஶ்வர:
18. ஶாஶ்வதஸ்ஸ்திர:



திருப்பதி, திருவேங்கடமுடையான்

(திருப்பதி திருமலையில் உள்ள க்ஷேத்ரம்)

“ ஸ்ரீத: ஸ்ரீஶ: ஸ்ரீநிவாஸ: ” எனப்படுமவன். (சுலோகம்-65)

“ அகல கில்லே னிறையுமென்
 றலர்மேல் மங்கை யுறைமார்பா !
நிகரில் புகழாய் ! உலகமூன்
 றுடையாய் ! என்னை ஆள்வானே !
நிகரி லமரர் முனிக்கணங்கள்
 விரும்பும் திருவேங் கடத்தானே !
புகலொன் றில்லா அடியேனுன்
 அடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே.”

—நம்மாழ்வார் திருவாய்மொழி 6-10-10

19. ப்ரஹ்மக்ருத்ப்ரஹ்மா
20. பதமநுத்தமம்
21. தேஜோவ்ருஷ:
22. ஸர்வவிஜ்ஜயீ
23. ஸர்வவாகீஶ்வரேஶ்வர:
24. ஶத்ருஜித் ஶத்ருதாபந:
25. ந்யக்ரோதோதும்பர:
26. ஹுதபுக்விபு:
27. அநந்தஹுதபுக்போக்தா
28. கபிரவ்யய:
29. பூர்ப்புவ:
30. பூர்ப்புவஸ் ஸ்வஸ்தரு:

ஆக மொத்தம் 30

### 3. ஸ்புட நாமங்கள்

மேற்கண்ட வகையில் சேராமல் வெளிப்படையான மற்ற 960 நாமங்கள். ஆக மொத்தம் 996 மட்டுமே ஆகின்றன. ஆனால் ஏகாநேக நாமங்களில் முதல் இரண்டைத் தவிர மற்றவைகளை பிரஸ்தார முறையில் இரண்டிரண்டாகச் செய்து நான்கு நாமங்கள் சம்பாதித்துச் சேர்த்து 1000 ஆக்கி பாஷ்யம் செய்திருக்கின்றனர்.

## ஸ்ரீ மாத்வ ஸம்ப்ரதாய பாடம்

ஸ்ரீ மத்வஸித்தாந்த ஸ்தாபனாசார்யரான ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த ஸ்ரீபாதருக்குப் பிறகு, இந்த ஸம்ப்ரதாயத்தில் மஹாஜ்ஞானியாகவும், யோகீச்வரராகவும் விளங்கிய ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளால் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு மத்வஸித்தாந்த ரீதியாக பாஷ்யம் இயற்றப்பட்டுள்ளது. அதில் ஸஹஸ்ரநாமங்களிலுள்ள சில நாமங்களுக்குப் பாடாந்தரங்கள் காணப்படுகின்றன. ஆயினும், அநேகமாக மாத்வ பாடம் சங்கரபாடத்தையே ஒத்திருக்கிறது. சங்கர பாடத்தைக் காட்டிலும் வித்தியாஸமுள்ள பாடங்களை மட்டும் கீழே காணலாம். இவைகளைத் திருத்தம் செய்து கொண்டால் மத்வ ஸம்ப்ரதாய ரீதியான பாடத்தைப் பாராயணம் செய்யலாம்.

| ஸ்ரீ சங்கர பாடம் | | ஸ்ரீ மத்வ பாடம் |
|---|---|---|
| 1. நாரஸிம்ஹவபு: | (சு. 3) | நரஸிம்ஹவபு: |
| 2. யஜ்ஞ இஜ்ய: | (சு. 48) | யஜ்ஞ ஈஜ்ய: |
| 3. க்ருதாஶீ: | (சு. 79) | த்ருதாஶீ: |
| 4. அம்ருதாஶ: | (சு. 87) | அம்ருதாம்ஶ: |
| 5. ஸவிதா | (சு. 104) | ஸபிதா |
| 6. பஜந்தி யே புஷ்கராக்ஷம் | (சு. 129) | பஜந்தி புண்டரீகாக்ஷம் |

(இவைகளைத் தவிர்த்து மற்ற இடங்களில் ஸ்ரீ சங்கர பாடமே ஸ்ரீ மத்வ பாடமும் ஆகும்.)

# 44 தளங்களில் ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாமம் (பர, வ்யூஹ, விபவங்கள்)

அநந்த கோடி நாம ரூப கல்யாண குணங்களையுடைய ஆதி பகவான், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்ற முத்தொழில்களை நடத்துவதற்காகவும், துஷ்ட சிக்ஷண சிஷ்ட ரக்ஷண கார்யத்திற்காகவும், அதர்மத்தை நீக்கி தர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவும் பல உருவங்களில் அவதரிக்கிறான். அத்தகைய பகவானுடைய அவதார ரூபங்களைப் பொதுவாக (1) பரம், (2) வ்யூஹம், (3) விபவம் என்று மூன்று விதமாகப் பிரித்துச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## 1. பரம்

பரம் என்பது பகவானுடைய பரவாஸுதேவ ரூபமாகும். இதுவே மூலப் பொருளென்றும், முழுமுதற் கடவுளென்றும் கூறப்படுகின்றது. இந்த உலகம் வாஸுதேவமயம் என்பதை,

" வாஸநாத் வாஸுதேவஸ்ய
வாஸிதம் தே ஜகத் த்ரயம் |
ஸர்வபூத நிவாஸோஸி
வாஸுதேவ நமோஸ்து தே ||"

என்ற சுலோகம் உறுதிப்படுத்தும். பரவாஸுதேவன் ஞானம், பலம், ஐசுவரியம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஆறு விசேஷ குணங்கள் நிறையப் பெற்றவன். அதனால் ஷாட்குண்ய பரிபூர்ணன் எனப்படுகிறான்.

## 2. வ்யூஹம்

இந்தப் பரவாஸுதேவனே சிருஷ்டி முதலான காரியங்களைச் செய்வதற்காக வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்ற நான்கு உருவில் பிரிந்து விளங்கு

கிருன். ஒரு தீபத்தில் பற்றவைத்த நான்கு தீபங்களைப் போல் இந்த நான்கு உருவங்களும் பரவாஸுதேவ ரூபங்களே என்று சாஸ்திரம் கூறும். இதற்கு வ்யூஹம் என்று பெயர். இந்த நான்கு உருவங்களில் முதலாவதான வாஸுதேவ ரூபதிற்கும் பரவாஸுதேவ ரூபத்திற்கும் பேதமில்லை; இரண்டும் ஒன்றே.

ஆகவே மற்ற மூன்று ரூபங்கள் பகவானுடைய ஆறு குணங்களில் இரண்டிரண்டு குணங்களைத் தாங்கிச் செயல் படுகின்றன. அதாவது :

| பெயர் | குணங்கள் | யாருக்கு அந்தர்யாமி | செயல் |
|---|---|---|---|
| 1. ப்ரத்யும்நன் | ஐச்வர்யம், வீர்யம் | ப்ரஹ்மா | சிருஷ்டி |
| 2. அநிருத்தன் | சக்தி, தேஜஸ் | மனு, காலம், விஷ்ணு முதலியன | ஸ்திதி |
| 3. ஸங்கர்ஷணன் | ஞானம், பலம் | ருத்ரன், காலம் | ஸம்ஹாரம் |

ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளுக்கும் முறையே ப்ரத்யும்நன், அநிருத்தன், ஸங்கர்ஷணன் என்னும் ரூபங்களில் பரவாஸுதேவனே அந்தர்யாமியாக இருக்கிருர் என்பதைச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## 3. விபவம்

மத்ஸ்யம், கூர்மம் முதலான ஸாக்ஷாத்தான அவதாரங்களும், பரசுராமர், வ்யாஸர் முதலான ரிஷி ரூபமான அவதாரங்களும், புரஞ்ஜயன் முதலானவர்களில் ஆவேச ரூபமான அவதாரங்களும், விக்ரஹ ரூபங்களான அர்ச்சாவதாரங்களும் விபவாவதாரங்களெனப்படுகின்றன.

ஆகவே, மேற்கண்ட பரம், வ்யூஹம், விபவம் என்ற பொதுப் பிரிவுகளும் உட்பிரிவுகளும் சேர்ந்து 44 தளங்களில், அதாவது 44 தலைப்புக்களில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலுள்ள ஆயிர நாமங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

மற்றும் பரவாஸுதேவனென்ற பர ரூபத்திலும், ப்ரத்யும்நாதி வ்யூஹ ரூபங்களிலும், ராமகிருஷ்ணாதி அவதார ரூபங்



**திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜன்**

*(நன்னிலத்திற்கு 4½ மைலில் உள்ள திவ்ய தேசம்)*

"ஶௌரி: ஶூரஜநேஶ்வர:" எனப்படுமவன். (சுலோகம்-69)

" தாமரைமே லயனவனைப் படைத்தவனே, தசரதன்றன்
மாமதலாய்! மைதிலிதன் மணவாளா, வண்டினங்கள்
காமரங்க ளிசை பாடும் கணபுரத்தென் கருமணியே,
ஏமருவும் சிலைவலவா! இராகவனே! தாலேலோ."

—குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி 8-4

களிலும், மற்ற அர்ச்சா ரூபங்கள் முதலியவற்றிலும் பகவானுடைய கல்யாண குணங்கள் 44 தளங்களாகிற கண்ணுடிகளில் தெள்ளென விளங்குவதற்கு இந்தப் பிரிவினை மிகவும் பயன்படும்.

ஒவ்வொரு தளத்திலும் உள்ள நாமங்களுக்கேற்ப ஆங்காங்கு படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. ஆகவே, அந்த அந்த நாமங்களைப் பாராயணம் செய்யும்போது அந்த அந்த மூர்த்திகளை மனத்தில் இருத்திக்கொள்ளவேண்டும்.

## 44 தளங்கள்

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் அடங்கியுள்ள ஆயிரம் நாமங்களும் மனம் போனபடி ஏதோ ஒரு வரிசையில் அடுக்கிட்டுத் தரப்படவில்லை. அவைகளை 44 தளங்களாக (உட்பிரிவுகளாக)ப் பிரித்து அடுக்கிட்டுத் தந்திருக்கிறுர் ஸ்ரீ வியாஸபகவான்.

தளங்கள் என்பதற்கு இதழ்கள் என்று பொருள் உண்டு. ஒரு தாமரைப் பூவை எடுத்துக்கொண்டோமானுல், இதழ்கள் ஒன்றின்மேலொன்ருக — அடுக்காக இருக்கும். இவைகளைத் தளங்கள் என்பதுண்டு.

பல மாடிகள் உள்ள ஒரு வீட்டில் ஒரு மாடிமீது மற்ரெரு மாடி என்று அடித்தளம் முதல் கடைசி மாடி வரை அடுக்கிட்டிருப்பதை அந்தஸ்துகள் அல்லது தளங்கள் என்பது வழக்கம்.

அம்மாதிரியே பகவானுடைய நாமங்கள் ஒன்றின்மேலொன்று வரிசைப்படுத்தி அடுக்கிட்டுத் தரப்பட்டுள்ளன.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்குப் பாஷ்யம் எழுதிய ஸ்ரீ பராசர பட்டர் தம்முடைய வியாக்யானத்தில், அந் நாமங்களுக்குப் பொருள் கூறுவதற்குமுன் அந்த நாமங்கள் வரிசையாக எதைக் கூறுகின்றன என்பதைக் குறிப்பிட்டுள்ளார். அந்த ஆதாரத்தைக் கொண்டு, ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலுள்ள ஆயிரம் நாமங்கள் 44 தளங்களாக வகுக்கப்பட்டுள்ளன. அந்த தளங்களின் பெயர்களும், ஒவ்வொரு தளத்திலும் சேர்ந்துள்ள நாமங்களின் ஆரம்ப முடிவுகளும், ஒவ்வொரு தளத்திலும் எத்தனை நாமங்கள் உள்ளன என்பதும் கீழ்க்கண்ட பட்டியலில் தரப்பட்டிருப்பதைக் காணலாம்.

# 44 தளங்களின் பட்டியல்

| வரிசை எண் | தளங்களின் பெயர் | நாமங்கள் ஆரம்பம் | நாமங்கள் முடிவு | மொத்த நாமங்கள் |
|---|---|---|---|---|
| 1 | பரவாஸுதேவன் | விஶ்வம் (1) | வராரோஹ : (122) | 122 |
| 2 | ஸங்கர்ஷணன் | மஹாதபா : | ஸர்வக : (124) | 2 |
| 3 | ப்ரத்யும்நன் | ஸர்வவித் | பாநு : (126) | 2 |
| 4 | அநிருத்தன் | விஷ்வக்ஸேந : | ஜநார்த்தந : (128) | 2 |
| | (2) ஸங்கர்ஷணன் | வேத : | வேதாங்க : (132) | 4 |
| | (3) ப்ரத்யும்நன் | வேதவித் | கவி : (134) | 2 |
| | (4) அநிருத்தன் | லோகாத்யக்ஷ : | க்ருதாக்ருத : (138) | 4 |
| | (1) வாஸுதேவன் | சதுராத்மா | ஸஹிஷ்ணு : (146) | 8 |
| 5 | விஷ்ணு : | ஜகதாதிஜ : | மது : (170) | 24 |
| 6 | ஷாட்குண்யம் | அதீந்த்ரிய : | அநிருத்த : (187) | 17 |
| 7 | ஹம்ஸாவதாரம் | ஸுராநந்த : | ஸுபர்ண : (194) | 7 |
| 8 | பத்மநாபன் | புஜகோத்தம : | ப்ரஜாபதி : (199) | 5 |
| 9 | நரஸிம்ஹாவதாரம் | அம்ருத்யு : | ஸுராரிஹா (210) | 11 |
| 10 | மத்ஸ்யாவதாரம் | குருர்குருதம : | ஸமீரண : (225) | 15 |
| 11 | உபநிஷந்நாமங்கள் | ஸஹஸ்ரமூர்த்தா | நாராயண : (246) | 21 |
| 12 | நாராயணசப்தார்த்தம் | நர : | வஸு : (271) | 25 |
| 13 | விச்வரூபன் | நைகரூப : | ப்ரபு : (300) | 29 |
| 14 | வடபத்ரஶாயீ | யுகாதிக்ருத் | வ்ருஷ : (313) | 13 |

| வரிசை எண் | தளங்களின் பெயர் | நாமங்கள் ஆரம்பம் | நாமங்கள் முடிவு | மொத்த நாமங்கள் |
|---|---|---|---|---|
| 15 | பரசுராமாவதாரம் | க்ரோதஹா | ப்ராண : (321) | 8 |
| 16 | கூர்மாவதாரம் | ப்ராணத : | வாயுவாஹந : (332) | 11 |
| 17 | வாஸுதேவ சப்தார்த்தம் | வாஸுதேவ : | ஶதாவர்த்த : (344) | 12 |
| 18 | திவ்யமங்கள விக்ரஹம் | பத்மீ | ஶரீரப்ருத் (350) | 6 |
| 19 | பகவானுடைய ஐசுவரியம் | மஹர்த்தி : | ஹவிர்ஹரி : (360) | 10 |
| 20 | லக்ஷ்மீபதி | ஸர்வலக்ஷண லக்ஷண்ய : | குஹ : (384) | 24 |
| 21 | த்ருவ நாராயணன் | வ்யவஸாய : | த்ருவ : (389) | 5 |
| 22 | ஸ்ரீ ராமாவதாரம் | பரர்த்தி : | பரிக்ரஹ : (421) | 32 |
| 23 | கல்கி அவதாரம் | உக்ர : | மஹாதந : (435) | 14 |
| 24 | பகவானின் முயற்சி | அநிர்விண்ண : | ஸர்வதர்ஶீ (452) | 17 |
| 25 | நரன் | நிவ்ருத்தாத்மா | ஸுவ்ரத : (456) | 4 |
| 26 | அம்ருத மதனம் | ஸுமுக : | நைககர்மக்ருத் (470) | 14 |
| 27 | தர்ம ஸ்வரூபி | வத்ஸர : | ப்ரமோதந : (528) | 58 |
| 28 | கபிலன் | ஆநந்த : | கோவிந்த : (543) | 15 |
| 29 | சுத்தஸத்த்வம் | ஸுஷேண : | மஹாமநா : (562) | 19 |
| 30 | மஹநீய குணங்கள் . | பகவாந் | ஆதித்ய : (568) | 6 |
| | நாராயணன் | ஜ்யோதிராதித்ய : | தாருண : (574) | 6 |
| 31 | வ்யாஸர் | த்ரவிணப்ரத : | ஶிவ : (607) | 33 |
| 32 | பகவானின் சுபத்தன்மை | ஸ்ரீவத்ஸவக்ஷா : | ஜ்யோதிர் கணேஶ்வர : (625) | 18 |
| 33 | அர்ச்சாவதாரம் | விஜிதாத்மா | விஶோதந : (643) | 18 |



திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி
(சென்னைக் கடற்கரைக்கு அருகிலுள்ள திவ்ய தேசம்)

" ஶூரஸேநோ யதுஶ்ரேஷ்ட: " எனப்படுமவன்
(சுலோகம்-75)

" வன்துணை, பஞ்ச பாண்டவர்க் காகி
வாயுரை தூதுசென் றியங்கும்
என்துணை, எந்தை தந்தைதம் மானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே."

—திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 2-3-5

| வரிசை எண் | தளங்களின் பெயர் | நாமங்கள் ஆரம்பம் | நாமங்கள் முடிவு | மொத்த நாமங்கள் |
|---|---|---|---|---|
| 34 | புண்ய க்ஷேத்திரங்கள் | அநிருத்த : | காந்த : (660) | 17 |
| 35 | பகவானின் பராசக்தி | க்ருதாகம : | தீர்த்தகர : (696) | 36 |
| 36 | ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் | வஸுரேதா : | துராவாஸ : (786) | 90 |
| 37 | புத்தாவதாரம் | துராரிஹா | மஹாகர்த்த : (810) | 24 |
| 38 | சாஸ்த்ர வச்யர்களை அநுக்ரஹித்தல் | மஹாபூத: | ந்யக்ரோதோதும்பர: (827) | 17 |
| 39 | வேறு விபவங்கள் | அஶ்வத்த : | பயநாஶந : (837) | 10 |
| 40 | அணிமாதி அஷ்டமாஸித்திகள் | அணு : | யம : (870) | 33 |
| 41 | மோக்ஷமளித்தல் | ஸத்வவாந் | ஶப்தாதிக : (911) | 41 |
| 42 | கஜேந்த்ரவரதன் | ஶப்தஸஹ : | ருசிராங்கத : (945) | 34 |
| 43 | ஜகத்வ்யாபார ப்ரயோஜனம் | ஜநந : | பாபநாஶந : (992) | 47 |
| 44 | திவ்யாயுததாரீ | ஶங்கப்ருத் | ஸர்வப்ரஹரணாயுத : (1000) | 8 |
| | | | ஆகமொத்தம் | 1000 |

## தசாபுக்திகளில் பாராயணம்

அவரவர்கள் ஜாதக ரீதியாக நடக்கும் தசாபுக்தி காலங்களில் கிரஹங்களின் ப்ரீதிக்காகவும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் செய்வதுண்டு.

நவக்ரஹங்களில் ஒருவரான புத பகவான் விஷ்ணுவின் அம்சம். ஆகவே ஒருவருக்கு ஜாதகரீதியாக புதனுடைய தசையிலோ புக்தியிலோ சிரமம் ஏற்படுவதானல் புதக்ரஹத்திற்குப் பிரீதியாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தால் க்ரஹ சாந்தியும், இஷ்ட கார்ய ஸித்தியும் உண்டாகும்.

ஜனன காலத்தில் புதன் லக்னத்திலிருந்து நல்ல இடத்திலிருந்தாலும், தசாநாதனிலிருந்து நல்ல இடத்திலிருந்தாலும் நல்ல பலன் கிடைக்கும். அப்படியில்லாமல், புதன் நீசனுக இருந்தாலும், கெட்ட ஸ்தானங்களில் இருந்தாலும், பாவ க்ரஹங்களுடன் சேர்ந்திருந்தாலும் கெட்ட பலன்கள் நடக்கும். லக்னத்திலிருந்து 6, 8, 12 ஸ்தானங்கள் கெட்ட இடங்கள். 2, 7, 8 ஸ்தானங்கள் மாரக ஸ்தானங்கள். ஆசவே, இந்த நிலையில் ஏற்படும் கெடுதல்கள் வராமல் சாந்தியாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யவேண்டுமென்று தசாபல **தர்ப்பணம்**, வ்ருத்த பாராசரம் முதலிய கிரந்தங்கள் கூறுகின்றன. எந்த எந்த தசையில் எந்த எந்த புக்திகளில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யவேண்டுமென்பதைக் கீழே காண்க :—

| தசை | புக்தி | தசை | புக்தி |
|---|---|---|---|
| சூரியன் | புதன் | புதன் | புதன் |
| செவ்வாய் | புதன், சனி | கேது | புதன் |
| ராகு | புதன் | சுக்கிரன் | புதன் |
| குரு | சனி, புதன் | | |
| சனி | புதன் | | |

## லோக க்ஷேமத்திற்காகப் பாராயணம்

கிராமங்களில் மழையே இல்லாமல் துர்பிக்ஷம், வைசூரி, காலரா முதலிய தொத்து நோய்கள் இருக்கும்பொழுது

மாகிற படியை அமைத்தவன். 261. வ்ருஷோதர :—தர்ம மயமான வயிற்றையுடையவன். 262. வர்த்தந :—எல்லாவற்றையும் வளர்ப்பவன். 263. வர்த்தமாந :—தானும் வளர்கிறவன். 264. விவிக்த :—(ஒன்றிலும் சேராமல்)தனித்திருப்பவன். 265. ஶ்ருதி ஸாகர :—சுருதிகளாகிய நதிகளுக்குக் கடல் போன்றவன். 266. ஸுபுஜ :—(பக்தர்களைக் காக்கும் வல்லமை கொண்ட) சிறந்த கைகளையுடையவன். 267. துர்த்தர :—பிறரால் தாங்கமுடியாதவன். 268. வாக்மீ—(வேத ரூபமான) சிறந்த வாக்கையுடையவன். 269. மஹேந்த்ர :—ஈசர்களுக்கும் ஈசன். 270. வஸுத :—செல்வத்தையளிப்பவன். 271. வஸு :—தானே தனமாக இருப்பவன்.

## 13. விச்வரூபன்



272. நைகரூப :—பல வகையான ரூபமுள்ளவன். 273. ப்ருஹத்ரூப :—எவ்வுருவமும் பேருருவமாக எடுப்பவன். 274. ஶிபிவிஷ்ட :—கிரணங்களில் பரவியுள்ளவன். 275. ப்ரகாஶந :—எல்லாவற்றையும் விளங்கச் செய்பவன். 276. ஓஜஸ்தேஜோத்யுதிதர :—பலம், பராக்ரமம், ஒளி என்பவைகளை உடையவன். 277. ப்ரகாஶாத்மா—எல்லோருக்கும் விளங்கக்கூடிய மகிமையுள்ளவன். 278. ப்ரதாபந :—எல்லாவற்றையும் தபிக்கச் செய்பவன். 279. ரித்த :—ஸகலமும் நிறையப் பெற்றவன். 280. ஸ்பஷ்டாக்ஷர :—வேதாக்ஷரங்களை வெளியிட்டவன். 281. மந்த்ர :—தியானிப்பவர்களைக் காப்பவன். 282. சந்த்ராம்ஶு :—சந்திர கிரணம்போல் குளிரச் செய்பவன். 283. பாஸ்கரத்யுதி :—சூரியனது ஒளிபோன்ற ஒளியுள்ளவன். 284. அம்ருதாம்ஶூத்பவ :—அமுத கிரணனை சந்திரனுக்குக்

காரணமானவன். 285. பாநு :—தானே பிரகாசிப்பவன். 286. ஶஶபிந்து :—களங்கமுற்றவர்களை அழிப்பவன். 287. ஸுரேஶ்வர :—நல்லோர்களுக்குத் தலைவன். 288. ஔஷதம்—ஸம்ஸாரமென்னும் வியாதிக்கு மருந்தாயிருப்பவன். 289. ஜகதஸ்ஸேது :—உலகத்தைக் கரையேற்றுபவன். 290. ஸத்யதர்ம பராக்ரம :—தன் குணங்களும், பராக்ரமங்களும் வீணாகாதவன். 291. பூதபவ்ய பவந்நாத :—முக்காலத்தவர்க்கும் நாதன். 292. பவந :—காற்றுபோல் (எங்கும்) இயற்கையாகச் செல்பவன். 293. பாவந :—(தன் சம்பந்தத்தால்) கங்கைக்கும் பரிசுத்தமாக்கும் தன்மையை அளித்தவன். 294. அநல :—தன் பக்தரை நன்கு காப்பாற்றியும், காப்பாற்றியது போதாது என்று நினைப்பவன். 295. காமஹா—தன்னிடம் விருப்பம் கொண்டவர்களின், மற்ற விருப்பங்களை அழிப்பவன். 296. காமக்ருத்—விரும்பிய பலன்களை அளிப்பவன். 297. காந்த :—மிக்க அழகானவன். 298. காம :—தன் குணங்களினால் யாவராலும் விரும்பப்படுகிறவன். 299. காமப்ரத :—விரும்பினவை யனைத்தையும் அதிகமாகக் கொடுப்பவன். 300. ப்ரபு :—எல்லோர் மனத்தையும் கவரும் சக்தியுள்ளவன்.

## 14. வடபத்ரசாயீ



301. யுகாதிக்ருத்—யுகங்களின் தொடக்கமான சிருஷ்டியைச் செய்தவன். 302. யுகாவர்த்த :—யுகங்களைச் சுழற்றுகிறவன். 303. நைகமாய :—பல விதமான ஆச்சரியங்களையுடையவன். 304. மஹாஶந :—ஸம்ஹார காலத்தில் (உலகமாகிற) பெருந்தீனியை விழுங்குபவன். 305. அத்ருஶ்ய :—ஒன்றுக்கும் புலப்படாத செய்கையுள்ளவன். 306. வ்யக்த ரூப :—தெளிவாகப் புலப்படும் திருமேனியுள்ளவன். 307. ஸஹஸ்ரஜித்—ஆயிரக் கணக்கான அசுரர்களை ஜயித்தவன். 308. அநந்தஜித்—யாரும் காணாதமுடிவையுள்ளவன். 309. இஷ்டோऽவிஶிஷ்ட :—பிரளய காலத்தில் தன் வயிற்றில் தங்கும் ஜீவன்களைப் பேதமின்றித் தாய்போல் காப்பவன். 310. ஶிஷ்டேஷ்ட :—ஞானிகளால் விரும்பப்படுபவன். 311. ஶிகண்டீ—ஜயிக்க முடியாத, அளவற்ற தன் மகிமையைச் சிரோபூஷணமாகக்

கொண்டவன். 312. நஹுஷ :—தன் மாயையினால் ஜீவன்களைக் கட்டுபவன். 313. வ்ருஷ :—அன்பர்களுக்குக் கோரிக்கைகளைப் பொழிபவன்.

## 15. பரசுராமாவதாரம்



314. க்ரோதஹா—(பரசுராமனாக க்ஷத்திரியர்களை அழித்தபின்) கோபத்தை ஒழித்தவன். 315. க்ரோதக்ருத்—அதற்கு முன் துஷ்ட க்ஷத்ரியர்கள்மீது கோபம் கொண்டவன். 316. கர்த்தா—கார்த்த வீரியனைத் துணித்தவன். 317. விஶ்வ பாஹு :—உலகத்துக்கு நன்மை செய்யும் கைகளையுடையவன். 318. மஹீதர :—பூமியைத் தாங்குபவன். 319. அச்யுத :—தன் நிலை தவறாதவன். 320. ப்ரதித :—புகழ்பெற்றவன். 321. ப்ராண :—ஜீவ ராசிகட்கு உயிராக இருப்பவன்.

## 16. கூர்மாவதாரம்



322. ப்ராணத :—(கூர்மாவதாரத்தில்) தேவர்களுக்குப் பலமளித்தவன். 323. வாஸவாநுஜ :—இந்திரனுக்கு இளையவனாகப் பிறந்தவன். 324. அபாந்நிதி :—கடலைக் கடையும்போது அதைத் தாங்கினவன். 325. அதிஷ்டாநம்—மந்தர மலைக்கும் ஆதாரமானவன். 326 அப்ரமத்த :—பக்தர்களைக் காப்பதில் எப்பொழுதும் ஜாக்கிரதையாக இருப்பவன். 327. ப்ரதிஷ்டித :—தன் மகிமையையே ஆதாரமாகக் கொண்டவன். 328. ஸ்கந்த :—அஸுரர்களை வற்றச் செய்பவன். 329. ஸ்கந்ததர :—அஸுரர்களை அழிப்பவனான ஸ்கந்தனையும் தாங்குபவன். 330. துர்ய :—உலகங்களைத் தரிப்பவன். 331. வரத :—வரன்களை அளிப்பவன். 332. வாயுவாஹந :—உலகத்திற்கு உயிரான காற்றையும் நடத்துபவன்.

## 17. வாஸுதேவ சப்தார்த்தம்



333. வாஸுதேவ: —விளையாட்டாகவே எல்லாவற்றையும் ரக்ஷிப்பவன். 334. ப்ருஹத்பாநு :— எங்கும் பரந்த பேரொளியுள்ளவன். 335. ஆதிதேவ: —உலகத்திற்கு மூல காரணமானவன். 336. புரந்தர: —அஸுரர்களின் பட்டணங்களைப் பிளப்பவன். 337. அசோக: —துன்பங்களைத் துடைப்பவன். 338. தாரண: —ஸம்ஸார பயங்களைத் தாண்டுவிப்பவன். 339. தார: —ஸம்ஸாரமாகிற கடலைக் கடக்கச் செய்பவன். 340. ஶூர: —பராக்கிரமம் கொண்டவன். 341. ஶௌரி: —சூரனென்னும் வஸுதேவனின் புதல்வன். 342. ஜநேஶ்வர: —பிறவி எடுத்த மக்களுக்குத் தலைவன். 343. அநுகூல: —பக்தர்களுக்கு வசமாக இருப்பவன். 344. ஶதாவர்த்த: —சுழல் கொண்ட நதிபோல் பெருகக்கூடிய தன் ஐசுவரியம் நிரம்பப்பெற்றவன்.

## 18. திவ்யமங்கள விக்ரஹம்



345. பத்மீ—கையில் லீலாரவிந்தத்தை யுடையவன். 346. பத்ம நிபேக்ஷண: —பத்மம் போல் மலர்ந்த திருக்கண் கடாக்ஷமுள்ளவன். 347. பத்மநாப: —தாமரையைத் தாங்கும் நாபியை உடையவன். 348. அரவிந்தாக்ஷ: —தாமரை மலர்போன்ற கண்களை யுடையவன். 349. பத்மகர்ப்ப: —உள்ளத் தாமரையில் உபாஸனை செய்யப்படுபவன். 350. ஶரீரப்ருத்—பிராணிகளின் தேகங்களைக் காப்பவன்.

## 19. பகவானுடைய ஐசுவரியம்



351. மஹர்த்தி:—பெருஞ் செல்வமுடையவன். 352. ரித்த:—பக்தர்கள் வளரத் தானும் வளர்ந்தவன். 353. வ்ருத்தாத்மா—பெரிய சொரூபமுள்ளவன். 354. மஹாக்ஷ:—வேதமூர்த்தியான கருடனை வாகனமாகக் கொண்டவன். 355. கருடத்வஜ:—கருடனையே கொடியாகக் கொண்டவன். 356. அதுல:—தன்னையொத்தவனில்லாதவன். 357. ஶரப:—வரம்பு மீறுபவர்களை அழிப்பவன். 358. பீம:—தன் ஆணையை மீறியவர்களுக்குப் பயம் தருபவன். 359. ஸமயஜ்ஞ:—காலத்தை அறிந்தவன். 360. ஹவிர்ஹரி:—யாகங்களில் அளிக்கும் ஹவிஸைப் பெற்றுக்கொள்பவன்.

## 20. லக்ஷ்மீபதி

361. ஸர்வலக்ஷண லக்ஷண்ய:—மஹா புருஷ லக்ஷணங்களால் ஸ்ரீபதியென அறியத்தக்கவன். 362. லக்ஷ்மீவாந்—எப்பொழுதும் பிரியாத லக்ஷ்மியுடன் சேர்ந்திருப்பவன். 363. ஸமிதிஞ்ஜய:—சண்டைகளில் ஜயிப்பவன். 364. விக்ஷர:—பக்தர்களிடம் நீங்காத அன்புள்ளவன். 365. ரோஹித:—தாமரை மலரின் உட்புறம் போன்று சிவந்த வர்ணமுள்ளவன். 366. மார்க்க:—பக்தர்களால் தேடப்படுபவன். 367. ஹேது:—எல்லாவற்றிற்கும் காரணமானவன். 368. தாமோதர:—யசோதையால் கயிற்றினல் கட்டப்பட்ட வயிறுள்ளவன். 369. ஸஹ:—எதையும் பொறுத்துக் கொள்பவன். 370. மஹீதர:—பூமியை நிலைநிறுத்துகிறவன். 371. மஹாபாக:—சிறந்த போகங்களை அநுபவிப்பவன். 372. வேகவாந்—மிக்க வேகமுள்ளவன். 373. அமிதாஶந:—(இந்திரனுக்களித்த) அதிகமான அன்னங்களைத் தான் உண்டவன். 374. உத்பவ:—ஸம்ஸாரப்பற்றை விலகச் செய்பவன்.



375 க்ஷோபண:—ப்ரளயம் உண்டாகி, பிறகு படைக்கும் போது ஜீவராசிகளையும் ப்ரக்ருதியையும் கலக்குபவன்.
376. தேவ:—சிருஷ்டி முதலியவைகளால் விளையாடுபவன்.
377. ஸ்ரீகர்ப்ப:—திருவைக் கர்ப்பத்தைப் போல் காப்பவன்.
378. பரமேஶ்வர:—எல்லாவற்றிற்கும் மேலான ஈசுவரன்.
379. கரணம்—பக்தர்கள் தம்மையடைவதற்குத் தானே கருவியானவன்.
380. காரணம்—தானே மூல காரணமானவன். 381. கர்த்தா—தானே சுதந்திரமாகச் செய்பவன். 382. விகர்த்தா—பிறர் இன்ப துன்பங்களை அனுபவிக்கும்போது தானும் அனுபவித்து மாறுதலடைபவன். 383. கஹந:—தன் மஹா குணம் பிறரால் அறிய முடியாமல் இருப்பவன். 384. குஹ:—உலகத்தைக் காப்பவன்.



## 21. த்ருவ நாராயணன்

385. வ்யவஸாய:—எல்லாம் தன்னிடம் கட்டுப்பட்டிருக்கப் பெற்றவன். 386. வ்யவஸ்த்தாந:—எல்லா வரையறைகளுக்கும் ஆதாரமானவன். 387. ஸம்ஸ்த்தாந:—எல்லாம் தன்னிடம் இறுதியில் சேரப் பெற்றவன். 388. ஸ்த்தாநத:—த்ருவன் முதலானோர்க்குத் தக்க பதமளிப்பவன். 389. த்ருவ:—அழியாத மூர்த்தி.



## 22. ஸ்ரீ ராமாவதாரம்

390. பரர்த்தி:—கல்யாண குணச் செழிப்புள்ளவன். 391. பரமஸ்பஷ்ட:—வெளிப்படையாகக் காணும்படி அவதரிப்பவன். 392. துஷ்ட:—அவதாரங்களை எடுப்பதில் மகிழ்ச்சியுள்ளவன். 393. புஷ்ட:—மஹா குணங்கள் நிரம்பியவன். 394. ஶுபேக்ஷண:—மங்களகரமான கடாக்ஷ வீக்ஷணமுள்ளவன். 395. ராம:—தன் வடிவழகையும் குணங்களையும்

கண்டு எல்லோரும் மயங்கவும் மகிழவும் செய்பவன். 396. **விராம:**—எல்லோரும் தம் பெருமைகள் இழந்து ஓய்ந்து போகும் இடமாக இருப்பவன். 397. **விரத:**—எந்த சுகத்திலும் ஆசையற்றவன். 398. **மார்க்க:**—முனிவர்களால் தேடப்படுபவன். 399. **நேய:**—முனிவர்கள் கட்டளைக்குட்படுபவன். 400. **நய:**—எதையும் நடத்திக்கொண்டு போகிறவன். 401. **அநய:**—பகைவர்களால் நடத்திச் செல்ல முடியாதவன். 402 **வீர:**—பகைவர்களை நடுங்கச் செய்பவன். 403. **ஶக்திமதாம் ஶ்ரேஷ்ட:**—சக்திமான்களான தேவர்களைக் காட்டிலும் சிறந்தவன். 404. **தர்ம:**—தர்மமே உருவானவன். 405. **தர்மவிதுத்தம:**—தர்மம் தெரிந்தவர்களில் சிறந்தவன். 406. **வைகுண்ட:**—இடையூறுகளை அகற்றி பக்தர்களைத் தம்மிடம் சேர்த்துக் கொள்பவன். 407. **புருஷ:**—உலகத்தின் முதல்வன். 408. **ப்ராண:**—எல்லாவற்றையும் உயிர்ப்பிக்கிறவன். 409. **ப்ராணத:**—உயிரை அளிப்பவன். 410. **ப்ரணம:**—சராசரங்கள் வணங்கும்படி இருப்பவன். 411. **ப்ருது:**—பெரும்புகழ் பெற்றவன். 412. **ஹிரண்யகர்ப்ப:**—பொற்புதையல் போன்றவன். 413. **ஶத்ருக்ந:**—உட்பகை வெளிப்பகைகளை அழிப்பவன். 414. **வ்யாப்த:**—எல்லோரிடமும் சமமாகப் பரவியுள்ளவன். 415. **வாயு:**—தம்மைத் தியானிப்பவர்களைத் தேடிச் செல்பவன். 416. **அதோக்ஷஜ:**—எவ்வளவு அநுபவித்தாலும் குன்றாத மஹிமையுள்ளவன். 417. **ருது:**—அனைவரையும் மகிழ்விக்கும் குணங்களுள்ளவன். 418. **ஸுதர்ஶந:**—அழகிய திருமேனி ஸேவையுள்ளவன். 419. **கால:**—எல்லாவற்றையும் தன்னிடம் சேர்த்துக் கொள்பவன். 420. **பரமேஷ்டீ**—பரமபதத்திலிருப்பவன். 421. **பரிக்ரஹ:**—பக்தர்களைத் தம்மிடம் ஏற்றுக் கொள்பவன்.

## 23. கல்கி அவதாரம்

422 **உக்ர:**—தர்ம விரோதிகளிடம் கடுமையாக இருப்பவன். 423. **ஸம்வத்ஸர:**—ஆயுதங்களைப் பூண்டு காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு இருப்பவன். 424. **தக்ஷ:**—மிலேச்சரென்னும் கொள்ளையர்களை அழிக்கவல்லவன். 425. **விஶ்ராம:**—கஷ்டங்களை அநுபவித்தவர்கள் களைப்பாறும் இடமானவன். 426. **விஶ்வதக்ஷிண:**—



அசுவமேத யாகம் செய்து பூமியை அந்தணர்களுக்குத் தக்ஷிணையாக அளித்தவன். 427. **விஸ்தார:**—வேத முறைகளை விரிவாக வெளிப்படுத்துகிறவன். 428. **ஸ்தாவரஸ்தாணு:**—தர்மத்தை நிலை நிறுத்தி ஓய்ந்திருப்பவன். 429. **ப்ரமாணம்**—நன்மை தீமைகளைப் பகுத்து அறிவிப்பவன். 430. **பீஜமவ்யயம்**—அழியாத விதையாக இருப்பவன். 431. **அர்த்த:**—எல்லோராலும் விரும்பப்படுபவன். 432. **அநர்த்த:**—எல்லாம் நிரம்பியவனுதலால் தான் விரும்புவது ஏதுமில்லாதவன். 433. **மஹாகோஶ:**—கொடுக்கக் கொடுக்கக் குறையாத பெரிய பொக்கிஷமுள்ளவன். 434. **மஹாபோக:**—சிறந்த போகங்களையளிப்பவன். 435. **மஹாதந:**—அளவற்ற பொருள்களையுடையவன்.

## 24. பகவானின் முயற்சி

436. **அநிர்விண்ண:**—சிறிதும் சோர்வோ வெறுப்போ இல்லாதவன். 437. **ஸ்தவிஷ்ட:**—மிகவும் விரிவாக இருப்பவன். 438. **பூ:**—அனைத்தையும் தாங்குபவன். 439. **தர்மயூப:**—தர்மத்தைத் தலைமையானதாக வைத்திருப்பவன். 440. **மஹாமக:**—யாகத்தைத் தன் அங்கமாகக் கொண்டவன். 441. **நக்ஷத்ரநேமி:**—நக்ஷத்திர மண்டலத்தை நடத்துபவன். 442 **நக்ஷத்ரீ**—நக்ஷத்திர மண்டலத்தைத் தாங்குகிறவன். 443. **க்ஷம:**—உலக பாரங்களைத் தாங்கும் பொறுமையாளன். 444. **க்ஷாம:**—பிரளய காலத்தில் சற்று இளைத்திருப்பவன். 445 **ஸமீஹந:**—ஸ்ருஷ்டி காலத்தில் எல்லோரையும் செயல்படத் தூண்டுகிறவன். 446. **யக்ஞ:**—யாகஸ்வரூபி. 447. **இஜ்ய:**—இந்திராதி தேவதாரூபியாக ஆராதிக்கப்படுபவன். 448. **மஹேஜ்ய:**—தன்னை ஆராதிப்பதையே சிறந்ததாக ஏற்பவன். 449. **க்ரது:**—ஸகல யக்ஞங்களால் ஆராதிக்கப்படுபவன். 450. **ஸத்ரம்**—நீண்ட காலம் செய்யப்படும் ஸத்ரம் என்ற யாகத்தாலும் ஆராதிக்கப்படுபவன். 451. **ஸதாம்கதி:**—நல்லோர்களுக்குப் புகலிடமானவன். 452. **ஸர்வதர்ஶீ**—ஸகலதர்மங்களையும் நேரில் காண்பவன்.



## 25. நரன்



453. நிவ்ருத்தாத்மா—இந்திரிய விஷயங்களிலிருந்து மனத்தைத் திருப்பியவன். 454. ஸர்வஜ்ஞ:—பலவகையிலும் தன்னை அறிந்தவன். 455. ஜ்ஞாநமுத்தமம்—பரம வைஷ்ணவ தர்மத்திற்கு உறைவிடமானவன். 456. ஸுவ்ரத:—உயர்ந்த விரதம் பூண்டவன்.

## 26. அமிருத மதனம்

457. ஸுமுக:—(அமிருதகலசம் தாங்கியபோது) மகிழ்ச்சியுடனிருந்தவன். 458. ஸூக்ஷ்ம:—அசுரர்கள் விஷயத்தில் புரியாத எண்ணம் கொண்டவன். 459. ஸுகோஷ:—தேவாசுரர் கோஷம் செய்யும் அமிருதமதனத்தின் அத்புதமானவன். 460. ஸுகத:—அமிருத சுகத்தை தேவர்க்கு அளித்தவன். 461. ஸுஹ்ருத்—அதற்குக் காரணமான அன்பு கொண்டவன். 462. மநோஹர:—அசுரரை மயங்கச் செய்த மோகினி ரூபன். 463. ஜிதக்ரோத:—(தன் மோஹன ரூபத்தைக் கண்டு) ஆச்சரியத்தில் திளைத்த அசுரர்களுடைய கோபத்தை ஜயித்தவன். 464. வீரபாஹு:—வீரம் மிக்க ஆயிரம் தோள்களையுடையவன். 465. விதாரண:—ஆயுதங்களால் ராகு முதலானவரைப் பிளந்தவன். 466. ஸ்வாபந:மற்றவரைப் பரவசப்படுத்தியவன். 467. ஸ்வவஶ:—தன்னவருடன் இஷ்டப்படி விளையாடி வசமானவன். 468. வ்யாபீ—அமிருதம் கடைந்த தேவர், அசுரர், மலை, வாசுகிகளில் தான் வியாபித்திருந்தவன். 469. நைகாத்மா—(அப்பொழுது பிரம்மா, கூர்மம், மோகினி முதலிய) பல உருவத்திருந்தவன். 470. நைககர்மக்ருத்—கடைதல். தாங்குதல், பகைவரைப் பிளத்தல், அமிருதம் தருதல் என்ற பல செயல்களைப் புரிந்தவன்.



## 27. தர்ம ஸ்வரூபி

471. **வத்ஸர:**—எங்கும் பரந்துள்ளவன். 472. **வத்ஸல:**—பக்தர்களிடம் அன்பு கொண்டவன். 473. **வத்ஸீ**—காப்பாற்றப் படவேண்டிய கன்றுகள் போன்ற ஜீவகோடிகளை யுடையவன். 474. **ரத்நகர்ப்ப:**—விரும்புவோர்க்குக் கொடுக்குமளவு செல்வச் செழிப்புள்ளவன். 475. **தநேஸ்வர:**—விரும்புவோர்க்கு உடனே கொடுக்கும் செல்வச் சீமான். 476. **தர்மகுப்**—பொருள் இன்பங்களைத் தீய வழியிற் செல்லாமல் தடுத்து, தர்மத்தைக் காப்பவன். 477. **தர்மக்ருத்**—எல்லோரையும் தர்மிஷ்டர்களாகச் செய்தலென்ற தர்மத்தைச் செய்பவன். 478. **தர்மீ**—மிகச் சிறந்த தர்மத்தையும் சாதாரண தர்மமாகக் கொண்டவன். 479. **ஸத்**—'ஸத்' எனப்படுபவன். 480. **அக்ஷரஸத்**—அழிதலும் குறைதலும் இல்லாத, இருக்கும் பொருளானவன். 481. **அஸத்**—தீயவர்களுக்கு எண்ணற்ற பிறவியை அளிப்பவன். 482. **அஸத்க்ஷரம்**—அதனலே அஸத்தெனவும் க்ஷரம் எனவும் கூறப்படுபவன். 483. **அவிஜ்ஞாதா**—சாதுக்களின் தவறுகளைக் கவனிக்காதவன். 484. **ஸஹஸ்ராம்ஶு:**—ஆயிரம் ஞானம் படைத்தவன். 485. **விதாதா**—தண்டிக்கும் யமனையும் தன் வசத்தில் கொண்டவன். 486. **க்ருதலக்ஷண:**—தான் எடுத்துக் கொள்ளத் தக்கவர்களிடம் தன் சின்னத்தை அமைப்பவன். 487. **கபஸ்திநேமி:**—ஒளி வீசும் சக்ராயுதத்தைத் தரித்தவன். 488. **ஸத்த்வஸ்த:**—இதயத்தில் உள்ளவன். 489. **ஸிம்ஹ:**—பக்தர்களென அறியாமல் தண்டிக்கும் யமனையும் இம்சிப்பவன். 490. **பூதமஹேஶ்வர:**—படைப்புத் தலைவர்களான பிரம்மாதிகளுக்கும் தலைவன். 491. **ஆதிதேவ:**—பிரம்மாதிகளுக்கும் முதல்வன். 492. **மஹாதேவ:**—பிரம்மாதிகளைக் கொண்டு விளையாடுபவன். 493. **தேவேஶ:**—பிரம்மாதிகளுக்குத் தக்க அதிகாரங்களைப் பிரித்துத் தருபவன். 494. **தேவப்ருத்**—தேவர்களையும் தாங்கி ரக்ஷிப்பவன். 495. **குரு:**—பிரம்மாதிகளுக்கும் வேதங்களை உபதேசித்த குருவானவன். 496. **உத்தர:**—பிரம்மாதிகளின் விபத்துக்களையும் கடக்கச் செய்பவன்.



497. **கோபதி:**—வேதம், பாஷை, வேஷம், வாக்கு இவைகளை நிர்வகிப்பவன். 498. **கோப்தா**—ஸகல வித்தைகளையும் காப்பவன். 499. **ஜ்ஞாநகம்ய:**—உயரிய ஞானத்தால் அறியப்படுபவன். 500. **புராதந:**—ஞானத்தை வெளியிடுவதால் ஒவ்வொரு கல்பத்திலும் புராதனன். 501. **ஶரீரபூதப்ருத்**—தனக்குச் சரீரமான ஸகல பூதங்களையும் தாங்குபவன். 502. **போக்தா**—ஹவ்யகவ்யங்களைப் புசிப்பவன். 503. **கபீந்த்ர:**—வானர உருவத்திலிருந்த தேவர்களுக்குத் தலைவன். 504. **பூரிதக்ஷிண:**—பல யாகங்களை நடத்தி அதிகமான தக்ஷிணை யளித்தவன். 505. **ஸோமப:**—யாகத்தில் ஸோமபானம் செய்தவன். 506. **அம்ருதப:**—அமிருதத்தைப் பருகுபவன். 507. **ஸோம:**—பக்தர்களுக்குத் தானே அமிருதமாக இருப்பவன். 508. **புருஜித்**—பலரை வென்றவன். 509. **புருஸத்தம:**—தன் பக்தர்களிடம் என்றென்றும் இருப்பவன். 510. **விநய:**—தீயவரைத் தன் பராக்கிரமத்தால் வணங்கும்படி செய்தவன். 511. **ஜய:**—அடியார்களிடம் தோற்றவன். 512. **ஸத்யஸந்த:**—பக்தர்களுக்களித்த பிரதிக்ஞை தவருதவன். 513. **தாஶார்ஹ:**—யாதவகுலத்தில் கண்ணனாக அவதரித்தவன். 514. **ஸாத்வதாம்பதி:**—பாகவதர்களின் தலைவன். 515. **ஜீவ:**—பாகவதர்களைத் தனக்கு ஸேவை செய்வித்துக் காப்பவன். 516. **விநயிதா**—பாகவதர்களை அரச குமாரர்களைப்போல் ரக்ஷிப்பவன். 517. **ஸாக்ஷீ**—பாகவதர்களின் நடத்தைகளைக் கவனிப்பவன். 518. **முகுந்த:**—முக்தியை அளிப்பவன். 519. **அமிதவிக்ரம:**—அளவில்லாத பராக்கிரமமுள்ளவன். 520. **அம்போநிதி:**—பாதாள ஜலத்தில் கூர்மமாக நின்று உலகைத் தாங்குபவன். 521. **அநந்தாத்மா**—ஆதிசேஷனுக்கு ஆத்மாவாக இருப்பவன். 522. **மஹோததிஶய:**—பெருங்கடலில் சயனித்திருப்பவன். 523. **அந்தக:**—பிரளயத்தில் உலகை அழிப்பவன். 524. **அஜ:**—அகாரத்தின் பொருளாகத் தோன்றியவன். 525. **மஹார்ஹ:**—ஆத்மாவை அர்ப்பித்துப் பூஜிக்கத் தக்கவன். 526. **ஸ்வாபாவ்ய:**—ஸ்வாமியாக அமைந்தவன். 527. **ஜிதாமித்ர:**—பகைவர்களை வென்றவன். 528. **ப்ரமோதந:**—தன் அடியார்களை மகிழ்வித்து, அதைக் கண்டு தான் மகிழ்பவன்.

## 28. கபிலர்

529. ஆநந்த:—பேரானந்தமுள்ளவன். 530. நந்தந:—முக்தியில் பேராநந்தத்தை அளிப்பவன். 531. நந்த:—ஆநந்த சாதனமான பொருள்களனைத்தும் நிரம்பியவன். 532. ஸத்யதர்மா—முதலிலிருந்து கடைசியில் தன்னை அடையும் வரை நேர்மையுடையவன். 533. த்ரிவிக்ரம:—மூன்று வேதங்களிலும் பரவியவன். 534. மஹர்ஷி:—வேதங்களைக் கண்டவன். 535. கபிலாசார்ய:—கபிலர் என்ற ஆசாரியராகத் தோன்றியவன். 536. க்ருதஜ்ஞ:—தவறுகளைத் தவிர்த்து நல்லவைகளையே அறிபவன். 537. மேதிநீபதி:—பூமிநாயகன். 538. த்ரிபத:—அகர, உகர, மகரமென்ற மூன்று பதங்களானவன். 539. த்ரிதஶாத்யக்ஷ:—பிரம்மாதி தேவர்களைக் காத்தவன். 540. மஹாஶ்ருங்க:—பூமியை நுனியில் தாங்கும் கோரப் பற்களையுடையவன். 541. க்ருதாந்தக்ருத்—யமன் போன்ற இரணியனை அழித்தவன். 542. மஹாவராஹ:—மகத்தான வராஹரூபம் கொண்டவன். 543. கோவிந்த:—பூமியை (வராஹ ரூபத்தில்) அடைந்தவன்.



## 29. சுத்த ஸத்வம்

544. ஸுஷேண:—சுத்தஸத்வமயமான சரீரமுள்ளவன். 545. கநகாங்கதீ—தோள்வளைகளைப் போன்ற திவ்யாபரணங்களை எப்பொழுதும் அணிபவன். 546. குஹ்ய:—உபநிஷத்துக்களுக்கு மட்டும் புரியக்கூடிய திருமேனியுடையவன். 547. கபீர:—ஆழமான மகிமையுள்ளவன். 548. கஹந:—அறிய முடியாதவன். 549. குப்த:—அவன் மகிமையறிந்த பூர்வாசாரியர்களால் காக்கப்பட்டவன். 550. சக்ரகதாதர:—சக்கரம், கதை முதலிய ஆயுதங்களைத் தரிப்பவன். 551. வேதா:—எண்ணற்ற பல லீலைகளைச் செய்பவன் 552. ஸ்வாங்க:—சத்ரசாமரங்கள் போன்ற பரிச்சின்னங்களையுடையவன். 553. அஜித:—'அஜிதா' என்ற



வைகுந்த நகருள்ளான். 554. க்ருஷ்ண:—நீலமேக ச்யாமளன். 555. த்ருட:—அசைக்க முடியாதபடி கெட்டியானவன். 556. ஸங்கர்ஷண:—சேதநாசேதனங்களைத் தன்னிடம் இழுப்பவன். 557. அச்யுத:—தன் நிலையிலிருந்து நழுவாதவன். 558. வருண:—எல்லாவற்றையும் மறைத்திருப்பவன். 559. வாருண:—தன்னை விரும்பும் பக்தர்களிடம் இருப்பவன். 560. வ்ருக்ஷ:—அன்பர்களுக்கு நிழல் தரும் மரம் போன்றவன். 561. புஷ்கராக்ஷ:—கருணை பொழியும் செந்தாமரைக் கண்ணன். 562. மஹாமநா:—பக்தர்களிடம் பரந்த மனமுள்ளவன்.

## 30. மஹநீய குணங்கள்



563. பகவாந்—ஸகல தோஷமற்ற கல்யாண ரூபன். 564. பகஹா—கல்யாண குணங்களை உடையவன். 565. நந்தி—நந்தனைத் தந்தையாக உடையவன். 566. வநமாலீ—வைஜயந்தி என்னும் வனமாலையை அணிந்தவன். 567. ஹலாயுத:—பலராமனுகிக் கலப்பையை ஆயுதமாகத் தரித்தவன். 568. ஆதித்ய:—கடந்த ஜன்மத்தில் அதிதியான தேவகியின் மைந்தன்.

### நாராயணன்

569. ஜ்யோதிராதித்ய:—திவ்ய ஜோதியான ஒரு விசித்திர சூரியன். 570. ஸஹிஷ்ணு:—பக்தர்களின் தவற்றைப் பொறுப்பவன். 571. கதிஸத்தம:—நல்ல தர்ம வழியைக் காட்டுபவன். 572. ஸுதந்வா—சிறந்த வில்லையுடையவன். 573. கண்டபரசு:—கோடாறியைத் தாங்கியவன். 574. தாருண:—வெளிப் பகைவரையும், உட்பகைவரையும் அழிப்பவன்.

## 31. வ்யாஸர்

575. த்ரவிணப்ரத:—வியாஸனுகி, சாஸ்திரார்த்தங்களென்னும் தனத்தை அளிப்பவன். 576. திவிஸ்ப்ருக்—பரவித்தையினுல் தன்னைத்தொடுபவன். 577. ஸர்வத்ருக்—

எல்லாவற்றையும் காண்பவன். 578. வ்யாஸ: —வேதங்களை நான்காக வகுத்தவன். 579. வாசஸ்பதி: —ஐந்தாம் வேத மான பாரதமென்னும் ஸரஸ்வதிக்கு ஸ்வாமியானவன். 580. அயோநிஜ: — யோனிப் பிறப்பில்லாதவன். 581. த்ரி ஸாமா—ப்ருஹத், ரதந்தரம், வாமதேவ்யம் என்ற மூன்று ஸாம ரூபன். 582. ஸாமக: —தானும் ஸாமங்களைப் பாடு பவன். 583. ஸாம—ஸாமவேத ரூபி. 584. நிர்வாணம்—மோக்ஷ ஸ்வரூபமான வன். 585. பேஷஜம்—பிறவிப் பிணி மருந்து. 586. பிஷக்—பிறவிப் பிணிக்குக் காரணமறிந்தவன் 587. ஸந்யாஸக்ருத்— பிறவிப் பிணி நீங்கக் காரணமான ஸாத்விக த்யாகத்தைச் செய்விப்பவன்.



588. ஶம: —காமக் குரோதாதிகளை அடக்கியவன். 589. ஶாந்த: —அமைதியான சாந்த நிலையில் உள்ளவன். 590 நிஷ்டா—விரும்புகிறவர்களின் மனத்தில் அமருகிற வன். 591. ஶாந்தி: —பரம ஸமாதி நிலையில் எல்லா அதி காரமும் அடங்கியிருப்பவன். 592. பராயணம்—மோக்ஷ பாயமான பக்தியை அளிப்பவன். 593. ஶுபாங்க: — யோகாங்கங்களான யமநியமாதிகளையுடையவன். 594. ஶாந்தித: —ஸாயுஜ்யமென்ற சாந்தி நிலையைத் தருபவன். 595. ஸ்ரஷ்டா—பற்பல ஸிருஷ்டிகளைப் புரிபவன். 596. குமுத: — பூலோக மக்களுக்குச் சுகமளித்து மகிழ்பவன். 597. குவலே ஶய: —ஜீவர்களின் உள்ளே புகுந்து நடத்துபவன். 598. கோஹித: —பூமிக்கு நன்மை செய்பவன். 599. கோபதி: — சொர்க்கத்திற்கும் பதி. 600. கோப்தா—கர்மபலன்களைத் தையும் காப்பவன். 601. வ்ருஷபாக்ஷ: —தருமத்தை கண் ணாக உடையவன். 602 வ்ருஷப்ரிய: —தருமத்தில் அன்பு கொண்டவன். 603. அநிவர்த்தீ—ப்ரவ்ருத்தி தர்மத்திலிருப் பவர்களை ஸம்ஸாரத்திலிருந்து திருப்பாமலிருப்பவன். 604. நிவ்ருத்தாத்மா—நிவ்ருத்தி தர்மத்திலிருப்பவர் களுக்கு ஆத்மாவானவன். 605. ஸம்க்ஷேப்தா—ப்ரவிருத்தி தர்மத்திலிருப்போர்க்கு அறிவும் மகிமையும் குறையும்படி செய்பவன். 606. க்ஷேமக்ருத்—நிவ்ருத்தி தர்மத்திலிருப் போர்க்கு மோக்ஷமாகிய க்ஷேமமளிப்பவன். 607. ஶிவ: — நன்மைகளை அளிப்பவன்.

## 32. பகவானின் சுபத்தன்மை

608. ஸ்ரீவத்ஸவக்ஷா:—ஸ்ரீவத்ஸமென்ற மருவைத் திரு மார்பிலுடையவன். 609. ஸ்ரீவாஸ:—திருவின் விளையாடுமிடம். 610. ஸ்ரீபதி:—திருவின் பதி. 611. ஸ்ரீமதாம்வர:—ஸ்ரீமான்களான தேவர்களிற் சிறந்தவன். 612. ஸ்ரீத:—லக்ஷ்மிக்குத் தன் அன்பையளிப்பவன். 613. ஸ்ரீஸ:—லக்ஷ்மிக்கு ஈசன். 614. ஸ்ரீநிவாஸ:—லக்ஷ்மியின் நிலையான உறைவிடம். 615. ஸ்ரீநிதி:—லக்ஷ்மிக்கு நிதி போன்றவன். 616 ஸ்ரீவிபாவந:—லக்ஷ்மியினுல் தனக்குச் சிறப்புள்ளவன். 617. ஸ்ரீதர:—என்றென்றும் லக்ஷ்மியைத் தரிப்பவன். 618. ஸ்ரீகர:—தன் அவதாரங்களுக்கேற்ப லக்ஷ்மியை அவதரிக்கச் செய்பவன். 619 ஶ்ரேய: ஸ்ரீமான்—நன்மைக்கெல்லாம் உறைவிடமான லக்ஷ்மியைப் பிரியாது சேர்ந்திருப்பவன். 620. லோகத்ரயாஶ்ரய:—தாய் தந்தை போல் லக்ஷ்மியுடன் தானும் உலகத்திற்குப் புகலிடமானவன். 621. ஸ்வக்ஷ:—அழகிய திருக்கண்கள் முதலியவைகளையுடையவன். 622. ஸ்வங்க :—அழகிய திருமேனியுள்ளவன். 623. ஶதாநந்த:—ஸகலவிதமான ஆநந்தங்களையும் உடையவன். 624. நந்தி:—எப்பொழுதும் மகிழ்ச்சியுடனிருப்பவன். 625. ஜ்யோதிர்கணேஶ்வர:—நித்தியசூரிகளின் கூட்டத்திற்குத் தலைவன்.



## 33. அர்ச்சாவதாரம்

626. விஜிதாத்மா—பக்தர்களால் ஜயிக்கப்பட்ட மனத்தையுடையவன். 627. விதேயாத்மா—பக்தர்களுக்கு அடங்கி நடக்கும் ரூபமுள்ளவன். 628. ஸத்கீர்த்தி:—இத்தகைய நல்ல ஸ்வபாவமுள்ளவனுகையால், நற்கீர்த்தியுள்ளவன். 629. ச்சிந்ந ஸம்ஶய:—தன் ஸௌலப்ய குணத்தால் சந்தேகங்களை நீக்குபவன். 630. உதீர்ண:—ஊனக் கண்ணேரும் காணும்படி அவதரிப்பவன். 631. ஸர்வதஶ்சக்ஷு:—



எல்லோருடைய கண்களுக்கும் புலப்படும்படி அவதரிப்பவன். 632. அநீஶ:—சுதந்திரமில்லாத பக்த பராதீனன். 633. ஶாஶ்வதஸ்திர:—அர்ச்சாமூர்த்திகளில் நிலையாக இருப்பவன். 634. பூஶய:—ஸ்வயம் வ்யக்தாதி ரூபங்களோடு பூமியில் பள்ளி கொண்டவன். 635. பூஷண:—தன்னை அலங்கரித்துக் கொள்பவன். 636. பூதி:—பக்தர்களுக்குச் செல்வமாக இருப்பவன். 637. அஶோக:—எல்லோருக்கும் நாதனாதலால் சோகமற்றவன். 638. ஶோகநாஶந:—பக்தர்களுக்குத் தன்னைப் பிரிவதாலுண்டாகும் சோகத்தை நீக்குபவன். 639. அர்ச்சிஷ்மாந்—திவ்யமான பேரொளியுள்ளவன். 640. அர்ச்சித:—திருக் கோயில்களில் அர்ச்சனை செய்யப்படுபவன். 641. கும்ப:—பக்தர்களால் விரும்பப்படுகிறவன். 642. விஶுத்தாத்மா—பக்தர்களிடம் ஸகலத்தையும் அர்ப்பித்தவனாதலால் சுத்தாத்மா. 643. விஶோதந:—பக்தர்களைப் பரிசுத்தமாக்குபவன்.

## 34. புண்ய க்ஷேத்திரங்கள்

644. அநிருத்த:—அநிருத்தாவதாரமான ஜநார்த்தநனாக வாஸுபாண்ட க்ஷேத்திரத்திலிருப்பவன். 645. அப்ரதிரத:—துஷ்டர்களைத் தண்டிப்பதில் தடுப்பாரில்லாதவன். 646. ப்ரத்யும்ந:—ஆத்மாவை விளங்கச் செய்பவனான ப்ரத்யும்நன். 647. அமிதவிக்ரம:—மூவுலகும் போதாத திருவடிப் பதிப்பையுடையவன். 648. காலநேமிநிஹா—கால சக்கரத்தின் வட்டையாகிய அவித்யையை அழித்தவன். 649. ஶௌரி:—திருக்கண்ணபுர க்ஷேத்திரத்து ஸ்ரீ சௌரிராஜப் பெருமாளாக நின்றவன். 650. ஶூர:—சூரனான இராமபிரான். 651. ஶூரஜநேஶ்வர:—சூர ஜனங்களுக்குத் தலைவன். 652. த்ரிலோகாத்மா—மூவுலகிலும் செல்பவன். 653. த்ரிலோகேஶ:—மூவுலகுக்கும் தலைவன். 654. கேஶவ:—பிரமனுக்கும் சிவனுக்கும் ஈசன். 655. கேஶிஹா—கேசி என்ற அசுரனை அழித்தவன். 656. ஹரி:—துக்கங்களை அரிப்பவன். 657. காமதேவ:—இஷ்டங்களை அளிப்பவன். 658. காமபால:—கொடுத்தவைகளைக் காப்பவன். 659. காமீ—கொடுக்கக் கூடிய பொருள்கள் நிரம்பியவன். 660. காந்த:—மிக்க அழகானவன்.



## 35. பகவானின் பராசக்தி

661. க்ருதாகம: —ஆகமங்களை அருளிச் செய்தவன். 662. அநிர்தேச்யவபு: —யுகந்தோறும் பல உருவங்களுள்ள வனுகையால் நிருபிக்க முடியாத திருமேனிகளுள்ளவன். 663. விஷ்ணு: —எங்கும் பரந்துள்ளவன். 664. விர: —சாதுக் களின் இன்னல்களைக் களைபவன். 665. அநந்த: —காலதேச குணங்களால் வரையறுத்துக் கூற முடியாதவன். 666. தநஞ்ஜய: —தனத்தைத் தாழ்த்தியவன். 667. ப்ரஹ்மண்ய: —சேதநாசேதநங்களுக்கு அநுகூலமானவன். 668. ப்ரஹ்மக்ருத்ப்ரஹ்மா—பரந்த உலகைப் படைத்த



பிரமனுக்கும் தலைவன். 669. ப்ரஹ்ம— ப்ரஹ்மம் எனப்படுபவன். 670. ப்ரஹ்ம விவர்த்தந: —தவத்தை வளர்ப்பவன். 671. ப்ரஹ்மவித்—வேதங்களை நன்கறிந்த வன். 672. ப்ராஹ்மண: —தத்தாத்ரேய ளுக அவதரித்தவன். 673. ப்ரஹ்மீ—ப்ர மாண, ப்ரமேயங்களின் உருவமானவன். 674. ப்ரஹ்மஜ்ஞ: —வேதங்களின் பொரு ளறிந்தவன். 675. ப்ராஹ்மணப்ரிய: — வேதமறிந்த அந்தணர்களுக்கு அன் பன். 676. மஹாக்ரம: —ஜீவர்கள் மேன்மையடைய ஞானம் பக்தி முதலியவைகளைப் படிப்படியாகக் காட்டியவன். 677. மஹாகர்மா—சிறந்த செயல்களை யுடையவன். 678. மஹாதேஜா: —அவித்யையென்னும் இருள் நீக்கும் பேரொளியானவன். 679. மஹோரக: —சித்தத்தின் மூலம் பிரவேசிப்பவன். 680. மஹாக்ரது: —பெரிய யாகங்களால் பூஜிக்கப்படுபவன். 681. மஹாயஜ்வா—தன்னை ஆராதிப் பவர்களைச் சிறந்தவர்களாக்குபவன். 682. மஹாயஜ்ஞ: — தன்னை ஆராதிப்பதையே சிறந்த யஜ்ஞமாகக் கொண்ட வன். 683. மஹாஹவி: —ஆத்மா என்ற பெரிய ஹவிஸை உடையவன். 684. ஸ்தவ்ய: —ஸ்தோத்திரம் செய்யத்தக்க வன். 685. ஸ்தவப்ரிய: —ஸ்தோத்திரத்தில் பிரியமுள்ள வன். 686. ஸ்தோத்ரம்—ஸ்தோத்திரமாகவே ஆனவன். 687. ஸ்துத: —எல்லோராலும் ஸ்தோத்ரம் செய்யப் பட்டவன். 688. ஸ்தோதா—தன்னை ஸ்தோத்ரம் செய்பவ னைப் புகழ்பவன். 689. ரணப்ரிய :—தன் அன்பனுக்காக யுத்தம் செய்வதில் ஆசையுள்ளவன். 690. பூர்ண :—எல் லாம் நிறையப் பெற்றவன். 691. பூரயிதா—பக்தர்களின்

இஷ்டங்களை நிரப்புபவன். 692. புண்ய:—பாவிகளை அழிக்கும் புண்ணியன். 693. புண்யகீர்த்தி:—புண்ணியமான புகழுள்ளவன். 694. அநாமய:—பிறவி நோய்க்கு எதிரியானவன். 695. மநோஜவ:—மனோவேகமாக பக்தர்களுக்குச் செல்வமளிப்பவன். 696. தீர்த்தகர:—கங்கை முதலான தீர்த்தங்களைப் படைத்தவன்.

## 36. ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்

697. வஸுரேதா:—தன் திவ்ய ஜோதியையே தன் அவதாரத்திற்குக் காரணமாக உடையவன். 698. வஸுப்ரத:—தேவகீ வஸுதேவர்களுக்குத்தான் புத்திரனாதலென்ற செல்வத்தையளித்தவன். 699. வஸுப்ரத:—தேவகீ வஸுதேவர்களுக்குத் தனக்குப் பெற்றோர்களாகும் செல்வத்தை அளித்தவன். 700. வாஸுதேவ:—வஸுதேவன் மகனான வாஸுதேவன். 701. வஸு:—திருப்பாற்கடலில் வஸிப்பவன். 702. வஸுமநா:—வஸுதேவனிடம் தன்மனத்தைச் செலுத்தியவன். 703. ஹவி:—நந்தகோபனிடம் விருந்தினனாக வந்தவன். 704. ஸத்கதி:—நல்லோர்களுக்குப் புகலிடமானவன். 705 ஸத்க்ருதி:—(வெண்ணெய் திருடியது, உரலில் கட்டுண்டது போன்ற) திவ்வியச் செயல்களையுடையவன். 706. ஸத்தா—நல்லோர்களுக்குத்தான் ஒருவனே இருப்புப்பொருளானவன். 707. ஸத்பூதி:—நல்லோர்களுக்கு எல்லாவகை உதவிகளாக இருப்பவன். 708. ஸத்பராயண:—நல்லோர்களையே முக்கிய ஆதாரமாகக் கொண்டவன். 709. ஶூரஸேந:—சூரர்களை சேனையாகக் கொண்டவன். 710. யதுஶ்ரேஷ்ட:—யதுகுலத்தில் சிறந்தவன். 711. ஸந்நிவாஸ:—நல்லோர் ஓய்வு பெறுவதற்காகத் தங்குமிடமானவன். 712. ஸுயாமுந:—தான் யமுனையில் செய்த ஜலக்ரீடை போன்றவைகளை நற்செயலாகக் கொண்டவன். 713. பூதாவாஸ:—உயிரினங்கள் தன்னிடம் எளிதில் அடையும்படி இருப்பவன். 714. வாஸுதேவ:—வாஸுதேவனென்ற வ்யூஹரூபத்திலிருப்பவன். 715. ஸர்வாஸுநிலய:—உயிரினங்களுக்கெல்லாம் புகலிடமானவன். 716. அநல:—பக்தர்களுக்கு எவ்வளவு செய்



தாலும் போதாதென்று நினைப்பவன். 717. தர்பஹா—தன் அற்புதச் செயல்களால் இந்திரன் முதலானோரின் செருக்கை அழித்தவன். 718. தர்ப்பத:—தன்னை நன்கு அனுபவித்துக் களிப்புற்றுப் பேசும்படி பக்தர்களுக்குச் செருக்கை அளிப்பவன். 719. அத்ருப்த:—அனைத்துமிருந்தும் செருக்கில்லாதவன். 720. துர்தர:—துஷ்டர்களால் பிடிக்க முடியாதவன். 721. அபராஜித:—தன் அடியார் தோல்வியடையாமற் செய்பவன். 722. விஶ்வமூர்த்தி:—உலகங்களனைத்தையும் தன் உடலாகக் கொண்டவன். 723. மஹாமூர்த்தி:—(உலகமெல்லாம் ஒரு மூலையில் இருக்கும்படி) விசுவரூபமெடுத்தவன். 724. தீப்தமூர்த்தி:—மிக்க ஒளியுள்ள பொருள்களைத் தன் உடலமாகக் கொண்டவன். 725. அமூர்த்திமாந்—உருவமற்றவைகளுக்கும் தலைவனாக இருப்பவன். 726. அநேகமூர்த்தி:—பல உருவங்களைத் தாங்குபவன். 727. அவ்யக்த:—அவதாரம் செய்யும்போது தன் மகிமை புரியாதவண்ணமிருப்பவன். 728. ஶதமூர்த்தி:—எண்ணற்ற உருவங்களையுடையவன். 729. ஶதாநந:—எண்ணற்ற திருமுகங்களையுடையவன். 730. ஏக:—இணையில்லாத ஒன்றானவன். 731. நைக:—அனேகமாகவும் இருப்பவன். 732. ஸ:—அவ்வாறு போற்றத்தக்கவன். 733. வ:—எல்லாவுயிரினங்களிலும் வசிப்பவன். 734. க:—எங்கும் விளங்குபவன். 735. கிம்—எவனெனத் தேடத் தக்கவன். 736. யத்—எப்பொழுதும் பக்தர்களைக் காக்க முயன்று கொண்டிருப்பவன். 737. தத்—பக்தர்கட்கு பக்தியை வளர்ப்பவன். 738. அநுத்தமம்பதம்—தனக்கு மேற்பட்ட புகலிடமில்லாமல் தானே சிறந்த புகலிடமானவன். 739. லோகபந்து:—எல்லோரிடமும் உறவு கொண்டவன். 740. லோகநாத:—உலகங்களுக்குத் தலைவன். 741. மாதவ:—லக்ஷ்மீபதி. 742. பக்தவத்ஸல:—பக்தர்களிடம் மிக்க அன்பு கொண்டவன். 743. ஸுவர்ணவர்ண:—பொன்போன்ற திருமேனி வண்ணமுள்ளவன். 744. ஹேமாங்க:—பொன்னிறமான உருவங் கொண்டவன். 745. வராங்க:—சிறந்த திருமேனியுடையவன். 746. சந்தநாங்கதி—மகிழ்ச்சியளிக்கும் திருவாபரணங்களை அணிந்தவன். 747. வீரஹா—அசுர வீரர்களை அழித்தவன். 748. விஷம:—தீயோரைத் தண்டித்தல் நல்லோரைக் காத்தலென்ற வேற்றுமை கொண்டவன். 749. ஶூந்ய:—குற்றமெல்லாம் நீங்கியவன். 750. க்ருதாஶீ:—உலகை மகிழ்விக்க விருப்பமுள்ளவன். 751. அசல:—தீயவர்களால் அசைக்க முடியாதவன். 752. சல:—பக்தர்களுக்காகத் தன்

பிரதிக்ஞையையும் மீறுபவன். 753. அமாநீ—பக்தர்கள் எதிரில் தன் உயர்வை நினையாதவன். 754. மாநத: —அடியார்களுக்கு நன்மதிப்பளிப்பவன். 755. மாந்ய: —கௌரவிக்கத் தகுந்தவன். 756. லோகஸ்வாமீ—அகில உலகையும் தனது பொருளாக உடையவன். 757. த்ரிலோகத்ருத்—மூவுலகையும் தாங்குபவன். 758. ஸுமேதா: —நல்ல எண்ணமுடையவன். 759 மேதஜ: —யாகபலனாகத் தோன்றியவன். 760. தந்ய: —தான் அவதரிப்பதையே பெரும் பேறாக நினைப்பவன். 761. ஸத்யமேதா: —தன் அவதாரங்களில் காட்டுபவைகள் உண்மையில் இருக்கப்பெற்றவன். 762. தராதர: —கோவர்த்தன மலையைத் தரித்தவன். 763. தேஜோவ்ருஷ: —(பக்தர்களைக் காக்க) தன் சக்தியை அதிகமாகப் பயன்படுத்துபவன். 764. த்யுதிதர: —திவ்யசக்தியை உடையவன். 765. ஸர்வஶஸ்த்ரப்ருதாம்வர: —ஆயுதம் பயின்றவர்களிற் சிறந்தவன். 766. ப்ரக்ரஹ: —பக்தர்களைத் தன் ஆணைப்படி நடத்துபவன். 767. நிக்ரஹ: —பகைவர்களை அடக்குபவன். 768. வ்யக்ர: —அடியார்களின் விரோதிகளைத் தொலைப்பதில் பரபரப்புள்ளவன். 769. நைகஶ்ருங்க: —பகைவர்களை அழிக்கப் பல யுக்திகளைக் கையாளுபவன். 770. கதாக்ரஜ: —கதனென்ற யாதவனுக்கு முன் பிறந்த அண்ணன். 771. சதுர்மூர்த்தி: —பலபத்ர, வாஸுதேவ, ப்ரத்யும்ந, அநிருத்தர்களென்ற நான்கு மூர்த்திகளாக (யது குலத்தில்) அவதரித்தவன். 772. சதுர்பாஹு: —நான்கு புஜங்களுடன் தேவகி வயிற்றில் தோன்றியவன். 773.. சதுர்வ்யூஹ: —வாஸுதேவ, ப்ரத்யும்ந, ஸங்கர்ஷண, அநிருத்தரென்ற நான்கு வ்யூஹாவதாரங்களையுடையவன். 774. சதுர்கதி: —இந்திர, ப்ரஹ்ம, கைவல்ய, மோக்ஷமென்ற நான்கு ஸ்தானங்களை அளிப்பவன். 775. சதுராத்மா—ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி, துரீயம் என்ற நான்கு நிலைகளில் நான்கு உருவங்களாக இருப்பவன். 776. சதுர்பாவ: —வாசுதேவன் முதலான நான்கு உருவங்களில் சிருஷ்டி முதலிய நான்கு செயல்களை வெளிப்படுத்தியவன். 777. சதுர்வேதவித்—நான்கு வேதங்களை அறிந்தவர்களும் தன் பெருமையைச் சிறிதளவே அறியும்படி இருப்பவன். 778. ஏகபாத்—தன் பாகங்களில் ஒரு பாகத்துடன் மட்டும் அவதாரமெடுப்பவன். 779. ஸமாவர்த்த: —திரும்பத் திரும்ப அவதாரமெடுப்பவன். 780 நிவ்ருத்தாத்மா—எல்லாவற்றுடனும் ஒன்றியும், ஒன்றாத மனமுள்ளவன். 781. துர்ஜய: —யாராலும் வசப்படுத்த முடியாதவன்.

782. **துரதிக்ரம:**—எல்லோர்க்கும் புகலிடமானபடியால் கடக்க முடியாத திருவடிகளையுடையவன். 783. **துர்லப:**—புலன்களை வெல்லாதவர்கட்கு எட்டாதவன். 784. **துர்கம:**—மிகச் சிரமப்பட்டு அடையத் தக்கவன். 785. **துர்க:**—(கோட்டை போன்ற அவித்யை முதலியவைகளால் சூழப் பட்டிருப்பதால்) பிரவேசிக்க முடியாதவன். 786. **துரா வாஸ:**—எட்டாத இருப்பிடமுடையவன்.

## 37. புத்தாவதாரம்

787. **துராரிஹா**—புத்தாவதாரத்தில் கெட்ட வழியிற் செல்பவர்களைப் பல உபாயங்களால் கெடுத்தவன். 788. **ஶுபாங்க:**—அழகிய திருமேனியுள்ளவன். 789. **லோக ஸாரங்க:**—உலகத்தினர் புகழும்படி போக மோக்ஷமார்க்கங்களை உபதேசித்தவன். 790. **ஸுதந்து:**—அசுரரை வசீகரிக்கும் தன் எழிலாகிய வலையை உறுதியாக வைத்திருப்பவன். 791. **தந்துவர்த்தந:**—(ஸம்ஸாரமென்ற கயிற்றை, பாப பாசங்களாகிய) நூலிழைகளால் வளர்ப்பவன். 792. **இந்த்ரகர்மா**—இந்திரனுக்காகச் செயல் புரிபவன். 793. **மஹாகர்மா**—பெருஞ் செயல்களைச் செய்பவன். 794. **க்ருதகர்மா**—அசுரர்களின் நாஸ்திக ஆசாரங்களையும் (அவர்களின் அழிவுக்காக) அநுஷ்டித்தவன்.



795. **க்ருதாகம:**—புத்தாகமம் போன்ற) சமய நூல்களை இயற்றியவன். 796 **உத்பவ:**—ஸம்ஸாரத்தைக் கடந்தவன் போல் உள்ளவன். 797. **ஸுந்தர:**—(அசுரரை ஆகர்ஷிக்கும்) அழகிய உருவமுள்ளவன். 798. **ஸுந்த:**—தன் அழகினால் அசுரர் மனத்தை மென்மைப்படுத்துபவன். 799. **ரத்நநாப:**—ரத்தினம்போல் ஜொலிக்கும் நாபியையுடையவன். 800. **ஸுலோசந:**—அழகிய கண்களையுடையவன். 801. **அர்க:**—(பௌத்தாவதாரத்தில்) மஹாத்மா எனத் துதிக்கப்பட்டவன். 802. **வாஜஸநி:**—(பௌத்தாவதாரத்தில்) இம்மைப் பயனான அன்னத்திலேயே ருசியை உண்டாக்கியவன். 803. **ஶ்ருங்கீ**—கொம்பு போன்ற மயில் தோகையைக் கையில் தரித்தவன். 804. **ஜயந்த:**—(புத்தனாகி) நாஸ்திக வாதத்தால் ஆஸ்திகர்களை வென்றவன். 805. **ஸர்வவிஜ்ஜயீ**—அனைத்து

மறிந்தவரையும் வெல்லும் திறமையுள்ளவன். 806. ஸுவர்ண பிந்து: —தன் உறுதியான பேச்சினுல் ஆஸ்திக வாதத்தைக் கண்டிப்பவன். 807. அக்ஷோப்ய: —எவராலும் கலக்க முடியாதவன். 808. ஸர்வவாகீஶ்வரேஶ்வர: —பேச்சாளர்களில் சிறந்தவன். 809. மஹாஹ்ரத: —பெரிய தடாகம் போன்றவன். 810. மஹாகர்த்த: —(நாஸ்திக வாதங்களால் ஆத்மாவைக் கெடுத்துக் கொண்டவர்களை) நரகக் குழியில் வீழ்த்துபவன்.

## 38. சாஸ்திரவச்யர்களை அநுக்ரஹித்தல்

811. மஹாபூத: —மகான்களை அன்பராகக் கொண்டவன். 812. மஹாநிதி: —மகான்களை நிதியைப் போல் ஆதரிப்பவன். 813. குமுத: —பூலோக வாழ்க்கையில் மிக்க மகிழ்ச்சியுள்ளவன். 814. குந்தர: —'கும்' என்னும் பாவத்தை நீக்குபவன். 815. குந்த: —அழிக்கப்பட்ட பாவம் மறுபடி அணுகாமல் விலக்குபவன். 816 பர்ஜந்ய: —பக்தர்களைக் குளிரச் செய்பவன். 817. பவந: —தானே பக்தர்களிடம் செல்பவன். 818. அநில: —(பக்தர்களை அநுக்ரஹிக்க) தனக்குத் தூண்டுதல் வேண்டாதவன். 819. அம்ருதாஶ: —பக்தர்களுக்குத் தன் குணங்களாகிற அமுதையூட்டுபவன். 820. அம்ருதவபு: —அமுதம் போன்ற இனிய திருமேனியுடையோன். 821. ஸர்வஜ்ஞ: —அனைத்து மறிந்தவன். 822. ஸர்வதோமுக: —பக்தர்கள் தன்னையடையும்படி பலவழிகளையுடையவன். 823. ஸுலப: —எளிமைக் குணமுடையவன். 824. ஸுவ்ரத: —(சரணடைந்தவரைக் கைவிடாமையென்ற) சிறந்த விரதமுடையவன். 825. ஸித்த: —ஸாதிக்க வேண்டிய அவசியமின்றி ஸித்தமாக உள்ளவன். 826. ஶத்ருஜிச்சத்ருதாபந: —பகைவரை வெல்லும் ககுத்ஸ்தன் முதலியோர் மூலம் பகைவரை வென்றவன். 827. ந்யக்ரோதோதும்பர: —கீழே நின்று வணங்கப்படுபவர்களால் நிறுத்தப்பட்டவனுகவும், உயர்ந்த பரமபதத்தைச் சேர்ந்தவனுகவும் இருப்பவன்.



## 39. வேறு விபவங்கள்

828. **அர்வத்த:**—நிலையில்லாப் பதவிபெற்ற இந்திராதியருள் பிரவேசித்து நடத்துபவன். 829. **சாணூராந்த்ரநிஷூதந:**—சாணூரனென்ற அந்திரனாகிய மல்லனை அழித்தவன். 830. **ஸஹஸ்ரார்ச்சி:**—எண்ணற்ற கிரணங்களையுடையவன். 831. **ஸப்தஜிஹ்வ:**—ஏழு நாக்குகளையுடைய அக்னியாக இருப்பவன். 832. **ஸப்தைதா:**—ஏழு வைதிகக் கிரியைகளால் பூஜிக்கப்படுபவன். 833. **ஸப்தவாஹந:**—ஏழு சந்தஸ்ஸுக்களை ஏழு குதிரைகளாக உடைய சூரியனை நடத்துபவன். 834. **அமூர்த்தி:**—அப்ராக்ருத திவ்யமங்கள மூர்த்தியுள்ளவன். 835. **அநக:**—கர்ம வசர்களான ஜீவாத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவன். 836. **அசிந்த்ய:**—எதையும் தனக்கு உவமையாக நினைக்கத்தகாதவன். 837. **பயக்ருத்**—தன் ஆணையை மீறுபவர்கட்கு அச்சமுண்டாக்குபவன். 838. **பயநாஶந:**—தன் ஆணையில் நிற்பவர்களின் அச்சத்தை அகற்றுபவன்.



## 40. அணிமாதி அஷ்டமாசித்திகள்

839. **அணு:**—மிகவும் நுண்ணியவன் (அணிமா என்ற ஐசுவரியமுள்ளவன்). 840. **ப்ருஹத்**—மஹிமா என்னும் ஐசுவரியமுள்ளவன். 841. **க்ருஶ:**—மிகவும் லேசானவன் (லகிமா என்ற ஐசுவரியமுள்ளவன்). 842. **ஸ்தூல:**—பருமனாக இருப்பவன் (ப்ராப்தி என்னும் ஐசுவரியமுள்ளவன்) 843. **குணப்ருத்**—தன் குணங்களைப் போல் எல்லாப் பொருள்களையும் தாங்குபவன் (ஈசித்வமென்ற ஐசுவரியம்). 844. **நிர்குண:**—ப்ராக்ருத குணங்கள் எதுவும் பற்றாதவன் (வசித்வமென்ற ஐசுவரியம்). 845. **மஹாந்**—எல்லாவற்றிலும் மிகச் சிறந்தவன் (ப்ராகாம்யமென்ற ஐசுவரியம்). 846. **அத்ருத:**—(விச்வரூபமாயிருப்பதால்) எதிலும் கட்டுப்படாதவன். 847. **ஸ்வத்ருத:**—தன்னாலேயே தான் தாங்கப்படுபவன். 848. **ஸ்வாஸ்ய:**—சிறந்த இருப்பை உடையவன். 849. **ப்ராக்வம்ஶ:**—நிலைப்



பொருள்களுக்கும் நிலையான ஆதாரம். 850. **வம்ஶவர்த்தந** :—நித்திய சூரிகளை மகிழச் செய்பவன். 851. **பாரப்ருத்**— உயிர்களைக் காக்கும் பாரத்தைத் தாங்குபவன். 852. **கதித**: — (ஸகல கல்யாண குணங்கள் நிரம்பியவனாக) இதிஹாஸ புராணாதிகளில் சொல்லப்பட்டவன். 853. **யோகீ**—அகடிதகடநா ஸாமர்த்தியம் பொருந்தியவன். 854. **யோகீஶ**: — (யோகிகளின்) யோகத்தை நிறைவேற்றுபவன். 855. **ஸர்வ காமத**: —அணிமாதிகளையும் யோகப் பயனாக அளிப்பவன். 856 **ஆஶ்ரம**: —சிரமங்களை நீக்குபவன். 857. **ஶ்ரமண**: — (முன் ஜன்மத்தில் விட்ட) யோகத்தை இந்த ஜன்மத்தில் பயிலச் செய்பவன். 858. **க்ஷாம**: —(யோகப்ரஷ்டர்களையும்) முக்தியடையச் செய்பவன். 859. **ஸுபர்ண**: —பிறவிக் கடலின் கரை சேர்ப்பவன். 860. **வாயுவாஹந**: —கீழே நழுவியவர்களையும் மேலே தூக்கி விடுபவன். 861. **தநுர்தர**: — சார்ங்கமென்ற வில்லைத் தரிப்பவன். 862. **தநுர்வேத**: — வில்வித்தையை உலகில் முதன்முதலாகத் தோன்றச் செய்தவன். 863. **தண்ட**: —அரசர் மூலம் தண்டனையைச் செலுத்துபவன். 864 **தமயிதா**—தானே நேராகவும் தண்டிப்பவன். 865. **அதம**: —யாராலும் அடக்க முடியாதவன். 866. **அபராஜித**: —தன் ஆணை எவ்வகையிலும் தடைபடாதவன். 867. **ஸர்வஸஹ**: —எல்லோரையும் தானே தாங்குபவன். 868. **நியந்தா**—பிற தேவதைகளிடம் பக்தி கொண்டவர்களையும் தானே நடத்துபவன். 869. **நியம**: —பிற தேவதைகள் மூலம் பலன்களைத் தானே அளிப்பவன். 870. **யம**: — (தேவர்களுக்கும்) அதிகாரம் தந்து நடத்துபவன்.

## 41. மோக்ஷமளித்தல்

871. **ஸத்வவாந்**—சுத்தஸத்வமென்ற குணமுடையவன். 872. **ஸாத்த்விக**: —ஸத்த்வகுணத்தின் பலன்களை அளிப்பவன். 873. **ஸத்ய**: —ஸத்தியத்தில் நிற்பவன். 874. **ஸத்ய தர்மபராயண**: —நல்லோர் செய்யும் தர்மங்களை அன்புடன் ஏற்பவன். 875. **அபிப்ராய**: —நல்லோரால் தானே இறுதிப் பயனாக நினைக்கப்படுபவன். 876. **ப்ரியார்ஹ**: —அன்பர்களுக்கு அருளும் தன்மையன். 877. **அர்ஹ**: —ஞானிகளுக்குத் தான் ஒருவனே தகுதியாக இருப்பவன். 878. **ப்ரியக்ருத்**—தன்னையே விரும்பும்படி செய்பவன். 879. **ப்ரீதிவர்த்தந**: —பக்தர்களின் பக்தியை அதிகமாக்குபவன். 880. **விஹாயஸகதி**: —. அடியார் பரமபதம் அடைய, தானே உபாயமானவன்

881. ஜ்யோதி: —(அர்ச்சிராதி மார்க்கத்தில்) தானே முதல் படியான ஒளியானவன். 882. ஸுருசி: —(இரண்டாம்படியான) பகலாக இருப்பவன். 883. ஹுதபுக்விபு: —(மூன்றும் படியான) அமிருதமாக மாறும் ஹோமப் பொருள்களைப் புசிக்கும் சந்திரன் வளரும் வளர்பிறையானவன். 884. ரவி: —(நான்காம்படியான) உத்தராயண காலமாக இருப்பவன். 885. விரோசந: —(ஐந்தாம்படியான) உத்தராயண தக்ஷிணாயன காலங்களில் சூரியன் ஒளிவீசும் வருடமானவன். 886. ஸூர்ய: —(ஆறும்படியான) வாயு லோகமாக உள்ளவன். 887. ஸவிதா—(ஏழாம்படியான) மழையையும் பயிரையும் தோற்றுவிப்பவன். 888. ரவிலோசந :—(8, 9, 10-வது படிகள்) சந்திரன், மின்னல், வருணன், இவர்களைச் சூரியன் மூலம் விளங்கச் செய்பவன். 889. அநந்தஹுதபுக்போக்தா—(11, 12-வது படிகள்) இந்திரனையும் பிரமனையும் வைத்திருப்பவன். 890. ஸுகத: —(13-வது படி) அமானவன் மூலம் ஸம்ஸாரமகற்றிய பின், தன் சுகத்தை யளிப்பவன். 891. நைகத: —ப்ரும்மாலங்காரங்களை முக்தனுக்கு அளிப்பவன். 892 அக்ரஜ: —முக்தர்களுக்கு ஸகல ஐசுவரியங்களுடன் தோற்றமளிப்பவன். 893. அநிர்விண்ண :—பக்தன் முக்தியடைந்த பின், எவ்விதக் கவலையுமின்றி இருப்பவன். 894. ஸதாமர்ஷீ—முக்தன் தனக்குச் செய்யும் சேவைகளை ஏற்பவன். 895. லோகாதிஷ்டாநம்—மேலுலகங்களுக்கு ஆதாரமானவன். 896. அத்புத: —புதிதாகக் காணும் அற்புதம் போன்றவன். 897. ஸநாத்—முக்தர்களால் பங்கு போட்டு அனுபவிக்கத் தக்கவன். 898. ஸநாதநதம: —என்றென்றும் மிகப் புதியவனாக இருப்பவன். 899. கபில :—நித்ய விபூதியின் இடையே விளங்குபவன். 900. கபிரவ்யய: —மாறுதலில்லாத சுகத்தை அநுபவிப்பவன். 901. ஸ்வஸ்தித: :—மஹா மங்களமளிப்பவன். 902. ஸ்வஸ்திக்ருத்—முக்தர்களை ஆசிர்வதிப்பவன். 903. ஸ்வஸ்தி—தானே மங்களமாக இருப்பவன். 904. ஸ்வஸ்திபுக்—மங்களமனைத்தும் காப்பவன். 905. ஸ்வஸ்திதக்ஷிண: —பக்தர்களுக்கு நன்மைகளையே தக்ஷிணையாக அளிப்பவன். 906. அரௌத்ர: —குரூரமற்ற சாந்த குணமுள்ளவன். 907. குண்டலீ—குண்டலம் முதலிய ஆபரணங்களை அணிந்தவன். 908. சக்ரீ—



சக்கரம் முதலிய ஆயுதங்களைத் தரிப்பவன். 909. **விக்ரமீ**—சிறந்த செயல்களையுடையவன். 910. **ஊர்ஜிதஶாஸந:**—அசையாத ஆணையுடையவன். 911. **ஶப்தாதிக:**—வேத வாக்குகளுக்கும் எட்டாதவன்.

## 42. கஜேந்த்ர வரதன்

912. **ஶப்தஸஹ:**—கஜேந்திரனின் கூக்குரலைக் கேட்டவன். 913. **ஶிஶிர:**—கஜேந்திரன் கூக்குரல் கேட்டு விரைந்தவன். 914. **ஶர்வரீகர:**—கஜேந்திரனைக் காக்க பஞ்சாயுதங்களைக் கைகளிலேந்தியவன். 915. **அக்ரூர:**—ஈர நெஞ்சம் படைத்தவன். 916. **பேஶல:**—கஜேந்திரனைக் காப்பாற்றும் வேகத்தில் ஆபரணாதிகள் கலைந்தும் அழகியவன். 917. **தக்ஷ:**—கஜேந்திரனை ரக்ஷிக்க விரைவாக வந்தவன். 918. **தக்ஷிண:**—கஜேந்திரனை இன்சொலால் தேற்றியவன். 919. **க்ஷமிணாம்வர:**—பொறுமையாளரில் சிறந்தவன். 920. **வித்வத்தம:**—கஜேந்திரனின் இங்கிதம் தெரிந்த அறிவாளன். 921. **வீதபய:**—கஜேந்திரனின் பயம் துடைத்தவன். 922. **புண்யஶ்ரவணகீர்த்தந:**—கஜேந்திரன் கதையைக் கேட்பவர்களையும் சொல்பவர்களையும் புனிதராக்குபவன். 923. **உத்தாரண:**—கஜேந்திரனைக் கரையேற்றியவன். 924. **துஷ்க்ருதிஹா**—கஜேந்திரனுக்குத் தீங்கு செய்த முதலையை அழித்தவன். 925. **புண்ய:**—நம் பாவங்களையும் நீக்குபவன். 926. **துஸ்ஸ்வப்நநாஶந:**—கெட்ட கனவுகள் ஏற்படாது செய்பவன். 927. **வீரஹா**—கஜேந்திரன் பகைவனை மிருத்யுவை விலக்கியவன். 928. **ரக்ஷண:**—கஜேந்திரனைக் காத்தவன். 929. **ஸந்த:**—பக்தர்களுக்கு உள்ளவன். 930. **ஜீவந:**—கஜேந்திரனைப் பிடித்த முதலையையும் மோக்ஷமடைவித்தவன். 931. **பர்யவஸ்தித:**—கஜேந்திரனைச் சுற்றிலும் நின்றவன். 932. **அநந்தரூப:**—எண்ணற்ற ரூபங்களையுடையவன். 933. **அநந்தஶ்ரீ:**—அளவற்ற செல்வங்களைத் தாங்குபவன். 934. **ஜிதமந்யு:**—கோபத்தை வென்றவன். 935. **பயாபஹ:**—பக்தர்களின் பயத்தைத் தீர்ப்பவன். 956. **சதுரஶ்ர:**—பழுதற பக்தர்களின் வேலைகளைச் செய்பவன். 937. **கபீராத்மா**—ஆழம் காண முடியாத சொரூபமுள்ளவன். 938. **விதிஶ:**—ஸ்தோத்திரங்களுக்கு எட்டாதவன். 939. **வ்யாதிஶ:**—விரும்புவோர்க்குப் பலன்



களை அளிப்பவன். 940. நிர: —தேவர்களை ஆணையிடுப வன். 941. அநாதி: —தனக்கு ஆதியில்லாதவன். 942. பூர் புவ :—அடியார்களுக்கு இருப்பிடமானவன். 943. லக்ஷ்மீ: — அடியார்களின் செல்வமானவன். 944. ஸுவீர: —பக்தர் களின் இன்னல் தீர்க்கும் நல்ல சக்தியுள்ளவன். 945. ருசி ராங்கத: —அழகிய திருமேனியை (அநுபவிக்க) அளிப்பவன்.

## 43. ஜகத்வ்யாபாரப் பிரயோஜனம்

946. ஜநந: —தன்னை அனுபவிப்பதற்கேற்ற கரண களேபரங்களுடன் படைப்பவன். 947. ஜநஜந்மாதி: —ஜனங் களின் பிறப்புக்கு நிமித்த காரணமானவன். 948. பீம: — தன்னை அநுபவிக்காதவர்க்குப் பயங்கர மானவன். 949. பீமபராக்ரம: —தன் பகை வர்க்குப் பயமளிக்கும் பராக்கிரமம் உள் ளவன். 950. ஆதாரநிலய: —பக்தர்களான பிரஹ்லாதாதிகளுக்கு ஆதாரமானவன். 951. தாதா—உபதேசிக்கும் ஆசாரியன். 952. புஷ்பஹாஸ: —புஷ்ப மலர்ச்சி போன்ற மிருது ஸ்வபாவமுள்ளவன். 953. ப்ரஜாகர: —பக்தர்களுக்காக இரவும் பகலும் விழித்திருப்பவன். 954. ஊர்த் வக: —உயர்ந்தவன். 955. ஸத்பதாசார: — தனக்கு அடிமை செய்வதாகிய நல்வழி யில் நடத்துபவன். 956. ப்ராணத: —ஆன்ம



ஞானமற்ற அஞ்ஞானிகளுக்கு ஆன்மஞானமளிப்பவன். 957. ப்ரணவ: —ஓங்கார ஸ்வரூபி. 958. பண: —பக்தர்களுக்கு அடிமையாகவும் இருப்பவன். 959. ப்ரமாணம்—உண்மையை உணர்த்துபவன். 960. ப்ராணநிலய: —உயிரினங்கள் தங்கும் இல்லம். 961. ப்ராணத்ருத்—உயிரினங்களைத் தாய் போல் தாங்குபவன். 962. ப்ராணஜீவந: —அன்னம் பானம் போல் இருந்து உயிரினங்களை உயிர்க்கச் செய்பவன். 963. தத்வம்— மிகச் சாரமான பொருள். 964. தத்வவித்—தன் உண் மையைத் தானே அறிந்தவன். 965. ஏகாத்மா—எல்லா உயிரினங்களுக்கும் அந்தர்யாமியான ஒரே ஆத்மா. 966. ஜந்ம ம்ருத்யுஜராதிக :—பிறப்பிறப்பு மூப்புக்களைக் கடந்தவன். 967. பூர்ப்புவஸ்ஸ்வஸ்தரு: —மூவுலகங்களிலுள்ள ஜீவர்களுக்கு நிழல் தரும் பாரிஜாத மரம் போன்றவன். 968. தார: — ஸம்ஸாரக் கடலைத் தாண்ட வைப்பவன். 969. ஸவிதா—

எல்லாவற்றையும் தானே நேரில் உண்டாக்குபவன். 970. **ப்ரபிதாமஹ:**—பிதாமஹனை பிரமனுக்கும் தந்தை. 971. **யஜ்ஞ:**—தானே யாகமானவன். 972. **யஜ்ஞபதி:**—தன் யஜ்ஞத்திற்கும் பலனளிப்பவன். 973. **யஜ்வா**—யாகம் செய்பவனாக இருப்பவன். 974. **யஜ்ஞாங்க:**—பிறர் செய்த யாகம் தன் யாகத்திற்குக் கீழ்ப்பட்டதாகச் செய்பவன். 975. **யஜ்ஞவாஹந:**—யஜ்ஞங்களை ஏற்று நடத்துபவன். 976. **யஜ்ஞப்ருத்**—யஜ்ஞத்தில் குறை நேரிடினும் அதைப் பூர்த்தியுறச் செய்பவன். 977 **யஜ்ஞக்ருத்**—ஆதியில் யஜ்ஞங்களைப் படைத்தவன். 978. **யஜ்ஞீ**—யஜ்ஞங்களால் ஆராதிக்கப் படுபவன். 979. **யஜ்ஞபுக்**—யஜ்ஞங்களை அநுபவிப்பவன். 980. **யஜ்ஞஸாதந:**—யஜ்ஞங்கள் மூலம் தன்னையடையும் படி யுள்ளவன். 981. **யஜ்ஞாந்தக்ருத்**—யஜ்ஞபலனை தத்வ ஜ்ஞானத்தை யளிப்பவன். 982. **யஜ்ஞகுஹ்யம்**—யஜ்ஞத்தின் ரகசியமானவன். 983. **அந்நம்**—அன்னம்போல் பக்தர்களால் அநுபவிக்கப்படுபவன். 984. **அந்நாத:**—பக்தர்களைத் தானும் அனுபவிப்பவன். 985. **ஆத்மயோநி:**—தன்னை அநுபவிப்பவர்களைத் தன்னுடன் கலப்பவன். 986. **ஸ்வயம் ஜாத:**—தன் ஸங்கல்பத்தாலேயே அவதரிப்பவன். 987. **வைகாந:**—ஸம்ஸார துக்கத்தைக் களைபவன். 988. **ஸாமகாயந:**—முக்தன் தன்னை அடைந்து ஸாமகானம் செய்யும்படிச் செய்பவன். 989. **தேவகீநந்தந:**—தேவகியின் மைந்தன். 990. **ஸ்ரஷ்டா**—உலகங்களைப் படைத்தவன். 991. **க்ஷிதீஶ:**—பூமிக்குத் தலைவன். 992. **பாப நாஶந:**—பக்தர்களின் பாபங்களை நீக்குபவன்.



## 44. திவ்யாயுததாரீ

993. **ஶங்கப்ருத்**—பாஞ்சஜன்யமென்ற சங்கத்தை தரிப்பவன். 994. **நந்தகீ**—நந்தகமென்னும் வாளையுடையவன். 995. **சக்ரீ**—சக்ராயுதம் தாங்கியவன். 996. **ஶார்ங்க தந்வா**—சார்ங்கமென்னும் வில்லை ஏந்தியவன். 997. **கதாதர:**—கௌமோதகி என்னும் கதையைத் தரித்தவன். 998. **ரதாங்கபாணி:**—எப்பொழுதும் சக்கரத்தை உடையவன். 999. **அக்ஷோப்ய:**—யாராலும் வெல்லமுடியாதவன். 1000. **ஸர்வப்ரஹரணாயுத:**—துன்பங்களனைத்தும் துடைக்கும் ஸகல ஆயுதங்களை உடையவன்.

முற்றிற்று.

# ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம ஜபமும் பெரியோர்களின் அநுபவமும்

[ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம ஜபத்தால் ஸகல காரியங்களும் ஸித்திக்குமென்பதையும், ஸகல ரோகங்களும் நிவ்ருத்தியாகுமென் பதையும் பற்றி விரிவாக முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறோம். அதற்கேற்ப, ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்து பலனடைந்த பெரியோர்களின் அநுபவங்கள் சிலவற்றை அவர்கள் எழுதியனுப்பியபடியே அச்சிட்டிருக்கிறோம்.—பதிப்பாசிரியர்.]

## 1. ஊரில் கொடிய நோய் நீங்கியது !

அடியேனுடைய அனுபவத்தில் சுமார் 40 வருஷத்திற்கு முன் அடியேனுடைய கிருஹத்தில் அக்ரஹாரத்தை சூழ்ந்து ஒரு பெரிய கொடிய வியாதி ஒன்று ஸம்பவித்தது. அப்பொழுது எங்கள் ஊரில் உள்ள பெரியோர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து அடியேன் தகப்பனாரை,.........“இப்பொழுது ஊரில் கொடிய வியாதி இதுமாதிரி ஸம்பவித்திருக்கிறதே! என்ன பண்ணலாம் ?” என்று கேட்டார்கள். அதற்கு அடியேன் தகப்பனார், “நம்மால் ஆவது ஒன்றுமில்லை. ஆனாலும் ஒரு உபாயம் செய்து பார்ப்போம். ஒரு மண்டலம் ராத்ரியும் பகலுமாக பெருமாள் ஸன்னிதியில் (கோவிலில்) அகண்டம் விளக்கு ஏற்றி வைத்து பிரதிதினமும் மாலை 6 மணிக்கு ஸந்தியா வந்தனம் முடிந்ததும் எல்லோரும் கோவிலிலிருந்து ஸஹஸ்ர நாமம் ஆரம்பித்து சொல்லிக் கொண்டு அக்ரஹார வீதியில் நேரே தெருக்கோடி வரையிலும் வந்து மறுபடி திரும்பி கோவிலிலேயே கொண்டு ஸஹஸ்ர நாமத்தை முடிக்க வேண்டியது. இதுமாதிரி ஒரு மண்டலம் சொன்னால் பயம் ஒன்றும் இராது” என்று சொன்னார். இதைக்கேட்ட மஹனீயர்கள் ‘இதே பிரகாரம் இன்றே ஆரம்பித்துவிடலாம்’ என்று முடிவு செய்து ஸஹஸ்ர நாமத்தைச் சொல்லிக்கொண்டு வருகையில் ஸஹஸ்ரநாமம் ஆரம்பித்து 25 நாளுக்குள் ஊரிலிருந்து அந்தக் கொடிய வியாதி பயம் நிவ்ருத்தி ஆய்விட்டது.

## 2. வைத்தியர் கைவிட்ட ஜுரம் நீங்கியது !

இதே மாதிரியாக ஒரு பெரிய குடும்பத்தில் வயதில் ரொம்ப சின்னவர் ; நிறையக் குழந்தைகள். அவருடைய

பத்நியும் பால்யம் ஆனவள். அவருக்கு ஜ்ஈரத்தினல் ரொம்பவும் தொந்தரவு ஏற்பட்டு வைத்யர்கள் பார்த்து இந்த மனிதன் அநேகமாக இனி ஆயுளுடன் இருப்பது அரிது. இந்த ஜ்ஈரத்துக்குத் தகுந்த மருந்துகள் எங்களிடம் இல்லை. ஆகையால் நீங்கள் ஏதாவது வேறு இடங்களில் எங்கேயாவது போய் இவர் உடம்பை ஜாக்ரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள் என்று கைவிட்டு விட்டார்கள். அப்பொழுது அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர் (அவருக்கு அடியேன் தகப்பனரிடம் ரொம்ப பக்தி உண்டு) உடனே இந்த வைத்யர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, அடியேன் தகப்பனரிடம் வந்து தேவள் தான் அடியேன் தம்பியைக் காப்பாற்ற வேண்டும் என்று சொன்னர். அதைக்கேட்ட அடியேன் தகப்பனருக்குக் கண் கலங்கிவிட்டது. அன்றையதினமே, 'சரி என்னமோ ஸஹஸ்ரநாமம் சொல்லிப் பார்ப்போம்' என்று சொல்லி அரை மண்டலம் ஸஹஸ்ரநாமம் சொன்னர். ஒரு வாரத்தில் அந்த ஜ்ஈரக்காரர் பிரக்ஞை தெளிந்து கொஞ்சம் கொஞ்சமாகப் பேச ஆரம்பித்து 15-வது நாள் வீட்டிலேயே தடியை வைத்துக்கொண்டு நடக்க ஆரம்பித்து விட்டார்.

## 3. ஸமஷ்டி ப்ரஸாதம் ஸஹஸ்ர நாமமே!

ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுக்கு ஸஹஸ்ர நாமாவில் எவ்வளவு பக்தி என்பது நாடறிந்த உண்மை. ஒரு ஸமயம் பம்பாய் ஆஸ்திக ஸமாஜத்தில் உபந்யாஸத்திற்குக் கிளம்பும்போது ஸ்ரீ ஆசாரியாளை வந்தனம் செய்து விண்ணப்பித்துக் கொண்டேன்—ஸமஷ்டி ப்ரஸாதத்திற்காக. பதிலே ஒன்றும் கூறுமல் உடனே பெரியவாள் அங்குள்ள அனைவரையும் அமரச்செய்து, தானும் பரமேச்வரன் போல் வீற்றிருந்து, "சுக்லாம்பரதரம்" தொடங்கி ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமாவைத் தம் அம்ருத வாக்கால் அனைவருடன் முடிவுரை வரையில் அருளி, ஸமஷ்டி ப்ரஸாதம் அளித்து "பம்பாய் போய் வா" என்றுர்கள்.

## 4. ஆசார்யாளின் அற்புத முடிவு!

ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளைப் போன்ற மஹான்கள் பக்தர்களை இந்த ஸஹஸ்ரநாமத்தை ஜபிக்கும்படி ஆக்ஞாபிப்பதுண்டு. ஒருசமயம் சாதுர்மாஸ்ய ஸமயத்தில் முடிகொண்டான் என்னும் கிராமத்தில் ஆடி வெள்ளிக்கிழமை யன்று ஸ்ரீ ஜகத்குரு காஞ்சிப்பெரியவாளுக்கு

அளவிட முடியாத ஜ்ுரம் ஏற்பட்டு அங்கு வந்த வைத்ய நிபுணர்களான கரூர் ஸ்ரீராம சர்மா முதலியவர்கள் கலக்கத்தை அடைந்தனர். அப்பொழுது ஸ்ரீ ஆசார்யாள் திடீரென எழுந்து ஸ்நானம் செய்து பூஜைக்கு வந்து அமர்ந்து, அங்குள்ள பக்தர்களை ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை ஜபிக்கச் செய்தார்கள். சிறிது நேரத்தில் பூஜை ஆரம்பித்து, சரீரத்தில் ஜ்வரமோ, கம்பமோ சிறிதும் தெரியவில்லை. அதை நேரில் கண்ட நாங்கள் யாவரும் ஸ்ரீபரமேச்வரனே ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் மஹிமையை உபதேசித்தது போல் உணர்ந்தோம்.

## 5. ஸகல ரோக நிவாரணம் செய்யும்.

நித்யாக்னி ஹோத்ரிகளான எனது பிதா அவர்களும், தவத்தின் உருவம்போன்ற எனது பெரிய தகப்பனார் அவர்களும் அக்நிஹோத்திரம் முதலிய நித்ய கர்மாக்களைப் போல் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தை ஜபித்து வந்தனர். அவர்களுடைய வாழ்நாளில் தலைவலி, ஜ்ுரம், வயிற்றுவலி முதலிய வியாதிகளே அற்றவர்களாய் இருந்ததோடு சிறிது விபூதியை அவர்களது கையால் கொடுத்தால் வியாதிகள் யாவும் நீங்கவும் நீங்கிவிடும்.

## 6. ஸகல வியாதிகளும் நீங்கின.

ஒருவருக்கு ஜ்வரம் அடிக்கிறது. உடனே இதை அநுஸந்திப்பது வழக்கம். வியாதியின் தன்மைக் கேற்றவாறு ஒரு மண்டலம், அரை மண்டலம் அல்லது கால் மண்டலம் தினமும் சொல்வதாக ஸங்கல்பித்துக்கொண்டு, தகுந்த சிஷ்டர்களை (ஒருவர் அல்லது பலர்) ருத்விக்காக வரணம் பண்ணிக்கொண்டு வியாதிஸ்தன் கேட்கும் வண்ணம் ஸமீபத்தில் சொல்வது. ஒரு இடத்தில் சதுரமாக மெழுகிக் கோலம் போட்டு சுத்தமான ஜலம் ஒரு பாத்திரத்தில் (சிறு ஆல் அல்லது கும்பம்) வைத்து ஜபிக்கிறது. முடிந்ததும் அந்த தீர்த்தத்தால் வியாதிஸ்தர்களை ப்ரோக்ஷிப்பதும், சிறிது ஜலத்தை உட்கொள்ளச் செய்வதும் வழக்கம். கட்டாயம் தவறாமல் ஜ்வரம் நிவ்ருத்தியாகிறது. அடியேன் பலகாலும் இதை ப்ரத்யக்ஷமாக அனுபவித்திருக்கிறேன். அதாவது எனக்கு ஜ்வரம் வந்தபோது அடியேன் தகப்பனார் இவ்வாறு செய்திருக்கிறார். அடியேனும் சிலருக்குச் செய்திருக்கிறேன். இதைச் செய்வதனால் மற்ற மருந்து சாப்பிடு

வதை நிறுத்தக் கூடாது. பத்யங்களும் தவறக் கூடாது. "ஔஷதம் ஜாஹ்நவீ தோயம் வைத்யோ நாராயணோ ஹரி:" என்கிற ரீதியில் டாக்டர்களின் முயற்சியும், மருந்துகளின் வீர்யமும் எல்லாம் எம்பெருமானது அனுப்ரவேசத்தாலல்லது பயனளிக்காது என்ற நம்பிக்கையுடன் அநுஷ்டிக்க வேண்டும்.

## 7. ஸ்ரீரமண மகரிஷியின் ஆக்ஞை

சென்ற மஹா யுத்தத்தில் சென்னையைக் காலி செய்து எல்லோரும் சென்றபோது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை 8 பேர் சேர்ந்து பாராயணம் செய்தால் ஆபத்து வராதென ஸ்ரீரமணரிஷி கூறினர்.

## 8. பேராபத்துகள் விலகின.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் பெருமை பலச்ருதியில் பரக்கப் பேசப்பட்டிருப்பினும் எனது சொந்த அனுபவத்தில் கண்ட உண்மை சிலவற்றை விவரிக்க விரும்புகிறேன். வட தேசத்தில் இதைத் தினமொன்றுக்கு ஐந்து தடவை பாராயணம் செய்தால் அபம்ருத்யு, அகால மரணம், கண்ட தோஷம் முதலியவை நீங்கும் என்று பெரும் புலவர்கள் பாராயணம் செய்வது வழக்கம். அதன்படி அடியேனும் இரண்டு வருஷத்திற்கு முன்பு சென்னைமா நகரில் தங்க சாலைத்தெரு, நுங்கம்பாக்கம் முதலிய இடங்களில் சில நண்பர்களின் ஆயுராரோக்யத்திற்கும், அபம்ருத்யு தோஷம் விலகுவதற்கும் இந்த முறைப்படி விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்தேன்; ஸித்தியும் கிடைத்தது. ஆகவே **சுக்லாம்பரதரம்** என்று ஆரம்பித்து **ஆர்த்தா விஷண்ணா:** என்ற ச்லோகம் வரை ஒரு ச்லோகம் கூட விடாமல் நாள் ஒன்றுக்கு ஐந்து தடவையாக ஒரு மண்டலமோ அரை மண்டலமோ ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்ய, பேராபத்துகள் விலகும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

## 9. டைபாயிட் ஜுரம் நீங்கியது.

சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்னுல் எனது கிராமத்தின் (திருநெல்வேலி ஜில்லா) புரோஹிதர் அவர்களின் மூத்த புதல்வனுக்குக் கடுமையான ஜுரம் கண்டது. இது கிட்டத்தட்ட 'டைபாயிட்' வகையைச் சேர்ந்தது. ஏழு பிராமணர்கள் இருவேளைகளிலும் அவரது வீட்டில் ஸஹஸ்ர நாம பாராயணம் ஜபம் செய்ததில் ஒரு சில தினங்களில் மரணப்பிடியிலிருந்து விடுபட்டதை நான் நேரில் கண்டுள்ளேன். இப்பொழுது அவருக்கு சுமார் 50 வயதாகி திடகாத்திரராகத் தம் தகப்பனுருடைய அதே பௌரோஹித்ய ஜீவனம் நடத்தி வருகிருர்.

## 10. வேலை தேடித்தந்தது!

1930-ல் படித்து முடித்தேன். வேலையில்லாமல் திண்டாடினேன். **ஸ்ரீரங்கம்** சென்றேன். ஒருநாள் மாலையில் திருவரங்கன் முன்னிலையில் எனக்குத் தெரிந்த ஒரு ஸ்வாமி "சந்த்ர புஷ்கரணியில் ஸாயம் ஸந்த்யா வந்தனம் செய்துவிட்டு, ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் ஒரு மண்டலம் ஸ்ரீஸஹஸ்ரநாம பாராயணம் செய்தால் வேலை கிடைக்கும்" என்று ஸாதித்தார். அவ்வாறே ஆரம்பித்தேன். பத்தாவது நாள் வேலை என்னைத் தேடி வந்தது. **திருப்பதி**யில் வேலை. திவ்யதேசத்திலேயே வேலையைக் கொடுத்தான் ரங்கன். இன்னமும் அம்மண்டல பாராயணம் பூர்த்தியடையவில்லை.

ரிடையரானதும் மறுபடியும் வேலையைத் தேடித் திரிய வேண்டிய நிலை குடும்ப பாரம் காரணமாக ஏற்பட்டது. பழைய ருசி. ஸ்ரீரங்கம் போய் ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யத் தொடங்கினேன். ஏழாம் நாள் மறுபடியும் வேலை.

'பழைய பாராயணத்தையே இவன் முடிக்கவில்லை. இவனுக்குப் பயனளிக்கக் கூடாது' என்று ஸ்ரீரங்கன் (ஸ்ரீஸஹஸ்ரநாம தேவதை) திருவுள்ளம் சீறவில்லை.

"நேஹாபி⁴க்ரம நாஶோஸ்தி
ப்ரத்யவாயோ ந வித்³யதே |
ஸ்வல்ப மப்யஸ்ய த⁴ர்மஸ்ய
த்ராயதே மஹதோ ப⁴யாத் ||"

என்பதை ஸ்ரீஸஹஸ்ரநாம விஷயத்தில் நான் நன்குணர்ந்தேன்.

## 11. வீண் அபவாதம் நீங்கியது.

சுமார் 30 வருஷத்திற்கு முன் நான் ஒரு ஸ்ரீநிவாஸப் பெருமாள் சன்னிதியில் கைங்கரிய பரனுகப் பணியாற்றி வந்தேன். என்னுடன் ஒருவர் திருமடப்பள்ளி கைங்கரியம் செய்து வந்தார்—எனக்கு முன்னதாக 12 வருஷங்களாகவே அவர் கைங்கரியம் செய்தும் அவர் விஷயத்தில் தர்ம கர்த் தாக்களுக்கு நல்ல அபிப்ராயம் இல்லை. சன்னிதி கோபுரச் சாவி முதல் ஸன்னிதி சாவிகள் அனைத்தும் அடியேனிடம் ஒப்படைத்திருந்தார்கள். அதனுல் ஏற்பட்ட பொருமை காரணத்தினுல் அவர் உள் மடப்பள்ளி சாவியை உபயோகித்து 4 சன்னிதிகளில் சில உயர் பொருளை அபகரித்ததன்றி, "வேறு யார் எடுக்க முடியும்? பூட்டியது பூட்டியபடியே இருக்கிறது. இவன்தான் கொள்ளையடித்துவிட்டான்" என்ற அபவாதமும் சொல்லி வந்தார். அதிகாரிகள் என்னிடத்தில் வைத்த மதிப்பு மாறவில்லை. ஆயினும்—ஒருநாள் விசாரணை நடந்த அது சமயம் பட்டர் மேல் பகவான் ஆவேசித்து 'உள் மடப்பள்ளி சாவியால் திருடியவன் இவனே' என்று எதிரியின் கன்னத்தில் அறைந்தார். பிறகு சாவியைக் கொண்டு வரச் செய்து பரிசோதித்ததில் உண்மை வெளிப்பட்டது. அவருக்கு 90 ரூபாய் அபராதம் விதித்தார்கள். இதற்குக் காரணம், இந்த அபவாதம் ஏற்பட்டதும் நான் அஷ்ட திக்குகளையும் நோக்கி தினம் 8 தடவை ஸஹஸ்ரநாம பாராயணம் செய்து வந்தேன். அபவாதம் விலகியது பகவான் கருணையே. இது உண்மை.

———

# ஸ்ரீ பஞ்சாயுத ஸ்தோத்ரமும் ஐம்படைத்தாலியும்

அலர்மேல்மங்கை யுறை மார்பனுன எம்பெருமானுடைய பஞ்சாயுதங்கள்—ஸுதர்சனனென்ற சக்கரத்தாழ்வான், பாஞ்ச ஜன்யம் என்னும் சங்கம், கௌமோதகீ என்னும் கதை, நந்தகம் என்னும் கத்தி, சார்ங்கமென்னும் வில் என்பனவாகும். தன் ஸங்கல்பத்தாலேயே எல்லாவற்றையும் உண்டாக்கி, நிலைநிறுத்தி, காரியங்களில் ஈடுபடச் செய்யும் மதுசூதனனுக்கு ஆயுதங்கள் அவசியமா என்ற கேள்வி எழலாம். ஆனுல் நம் ஆழ்வார்கள் ஆயுதங்களையும் ஆபரணங்களாகவே கண்டு அவன் அழகில் ஈடுபடுகின்றனர்.

இவற்றுள் ஸுதர்சனுழ்வானுடைய மகிமையைப்பற்றிப் பேசவும் முடியுமோ? எம்பெருமானே சக்ராயுதமாக வடிவு கொண்டதாக ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்கிருர். "சக்ர ரூபஸ்ய சக்ரிண:" என்கிருர். தவிர, நாராயணனுடைய ஸங்கல்பமே திருவாழியானதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஜகந்நாதன் விபவாவதாரங்கள் எடுக்கும்போது தன் திருக்கையால் தாங்கிய அந்த ஆயுதங்கள் ஸுதர்சனுழ்வானே என்பர். உதாரணமாக, ராமாவதாரத்தில் அம்பாகவும், நரஸிம்ஹாவதாரத்தில் நகமாகவும், பரசுராமாவதாரத்தில் கோடரியாகவும் திருவாழியாழ்வானே வடிவெடுத்ததாக அன்றே பெரியோர் கூறுகின்றனர்!

வாணீ பௌராணிகீயம் ப்ரதயதி
மஹிதம் ப்ரேக்ஷணம் கைடபாரே:,
ஶக்திர் யஸ்யேஷு தம்ஷ்ட்ரா நக பரசு
முக வ்யாபிநீ தத்விபூத்யாம்|

—76-வது சுலோகம் (ஸுதர்சன சதகம்)

பாஞ்ச ஜன்யம் என்ற சங்கமோ ஞானத்தை அளிக்கவல்லது. எம்பெருமானுடைய திருப்பவளச் செவ்வாயுடன் எப்போதும் உறவு கொண்டாடுவது. "கற்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ" என்று மாதவன் தன்வாய்ச் சுவையைப்பற்றி **ஆண்டாள்** விருப்புற்றுக் கேட்கும் பெருமையுடையது. துருவனுடைய முகத்தில் ஸ்ரீபாஞ்ச ஜன்யம் பட்ட பின்பன்றே

அவனுக்கு ஞானம் உண்டாயிற்று என்று ஸ்ரீவிஷ்ணு புராணம் கோஷிக்கிறது.

மேலும், தத்வங்களே மாதவனுக்குப் பஞ்சாயுதங்களாக உள்ளன என்கிறார் ஸ்வாமி தேசிகன். மனம்தான் திருவாழி; ஸாத்விக, தாமஸ அஹங்காரங்கள் சங்கமும் சார்ங்கம் என்னும் வில்லுமாக உள்ளன; மஹான் என்னும் தத்வம் கதை; ஞானமே நந்தகம் என்னும் கத்தி என்கிறார் தூப்புல் வள்ளல். "...மான் தண்டாகத் தெருள் மருள் வாள் மறையாக, ஆங்காரங்கள் சார்ங்கம் சங்காக, மனம் திகிரியாக....." உள்ளன.

இப்படி ஐந்து ஆயுதங்களைப் பற்றியும் உள்ள பஞ்சாயுத ஸ்தோத்ரம் பெரியோர்களால் ஸ்ரீஸஹஸ்ரநாமத்துடன் சேர்த்து அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இந்த பஞ்சாயுத ஸ்தோத்ரத்தைப் படிப்பவன் எல்லா துக்கங்களிலிருந்தும் பயங்களிலிருந்தும் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். காட்டிலோ, சண்டையிலோ, வேறு எந்தவித ஆபத்திலோ இதைப் பாராயணம் செய்பவன் எம்பெருமானால் காப்பாற்றப் பட்டுச் சுகமடைகிறான் என்று இதன் பலச்ருதி கூறுகிறது.

ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்குரிய பஞ்சாயுதங்களும் இவ்வுலகைக் காப்பதற்கென்றே ஸ்ரீராமானுஜராக அவதரித்தன என்று திருவரங்கத்தமுதனார் தமது இராமானுச நூற்றந்தாதியில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் வருமாறு:—

"அடையார் கமலத்து அலர்மகள்
கேள்வன்கை யாழியென்னும்
படையோடு நாந்தக மும்படர்
தண்டும்ஒண் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங் கமும்இந்தப்
பூதலம் காப்பதற்கென்று
இடையே இராமா னுசமுனி
யாயின இந்நிலத்தே"

—இராமானுச நூற்றந்தாதி (33)

இதிலிருந்து பஞ்சாயுதங்களும் உலகைக் காக்கும் என்னும் உண்மையை நாம் உணரலாம். இதையே ஸ்வாமி தேசிகன், யதிராஜ ஸப்ததியில் "வவ்ருதே[4] பஞ்சபி[4]ராயுதை[4]ர் முராரே:" என்று அருளிச் செய்கிறார்.

L.—7

திருமாலுக்கு உரிய பஞ்சாயுதங்கள் எல்லோரையும் காக்கும் என்று நெடுங்காலமாகவே தமிழ் மக்கள் கருதி வருகின்றனர். குழந்தைகளுக்கு அணிவிக்கும் ஒருவகைப் பழைய அணிக்கு ஐம்படைத்தாலி என்றே பெயர். பஞ்சாயுதங்களின் உருவங்களில் அமைத்துச் செய்யப்படும் ஒருவகை ஆபரணமே ஐம்படைத்தாலியாகும்.

"செவ்வாய்க் குதலை மெய்பெரு மழலை
சிந்திபு சின்னீர் **ஐம்படை** நனைப்ப"
— மணிமேகலை-3 : 137, 138.

"அமளித் துஞ்சும் **ஐம்படைத் தாலிக்**
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்"
— மணிமேகலை-7 : 56, 57.

என்னும் மணிமேகலை வரிகளிலிருந்து ஐம்படைத்தாலி என்னும் ஆபரணத்தைப் பழந்தமிழர்கள் குழந்தைகளுக்கு அணிவித்தனர் என்பதை நாம் உணரலாம். மேலும் ஐம்படைத்தாலியை மாலைபோல் குழந்தைகளின் மார்பில் அணிவித்தனர் என்னும் செய்தியை,

"தாலி ஐம்படை தவழும் மார்பிடை"
— கம்பராமாயணம் நாட்டுப்படலம் (58)

என்னும் கம்பராமாயண அடியிலிருந்தும்,

"ஐம்படை **மார்பில்** காணேன்"
— திருவிளையாடற் புராணம் (மாமனாக வந்து வழக்குரைத்த படலம்.)

என்னும் திருவிளையாடற் புராண அடியிலிருந்தும் நாம் தெளிவாக உணரலாம்.

குழந்தை வளர்ந்தவுடன் ஐம்படைத்தாலியைக் களைந்து விடுவர் என்னும் செய்தியை,

"தாலி களைந்தன்றும் இலனே பால்விட்டு
அயினியும் இன்று அயின் றனனே"
— புறநானூறு (77)

என்னும் புறநானூற்று வரிகள் கூறுகின்றன. குழந்தை வளர்ந்து பாலப்பருவம் அடைந்தவுடன் குழந்தை நன்கு பேசும் திறனைப் பெற்று விடுகிறது. பேசும் திறமை பெற்று

விட்டால் ஸ்தோத்திரம் செய்யலாம் அன்றோ? பேசத் தெரியாத குழந்தைகளுக்குப் பஞ்சாயுதங்களை ரக்ஷையாக அணிவித்தனர். பேசத் தெரிந்தபின் குழந்தைகள் பஞ்சாயுத ஸ்தோத்திரம் சொல்லித் துதித்தல் தக்கதன்றோ! அவ்வாறு செய்தால் தீயவை நீங்கும்; நல்லவை வரும்; செல்வம் பெருகும்.



ஐம்படைத்தாலியணிந்த ஸ்ரீ கண்ணபிரான்

ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீகிருஷ்ணாவதாரம் எடுத்த காலத்தில் குழந்தைக் கண்ணனுடைய மார்பை ஐம்படைத்தாலி அழகு செய்ததாம்! இக்கருத்தினைப் பெரியாழ்வார்,

"பாலொடு நெய்தயிரொண் சாந்தொடு சண்பகமும்
பங்கயம் நல்லகருப் பூரமும் நாறிவர
கோலந றும்பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளிமுளைப் போல்சில பல்லிலக
நீலநி றத்தழகார் **ஐம்படை** யின்நடுவே
நின்கனி வாயமுதம் இற்றுமு றிந்துவிழ
ஏலும றைப்பொருளே ஆடுக செங்கிரை
ஏழுல கும்முடையாய் ஆடுக ஆடுகவே".

— பெரியாழ்வார் திருமொழி 1-5-9.

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். குழந்தைக் கண்ணனுடைய மார்பில் விளங்கிய ஐம்படைத்தாலி போன்ற மாலையை அவரவர் சக்திக்குத் தக்கவாறு பொன்னால் செய்வித்துத் தம் குழந்தைகளுக்கு அணிவித்தால், அக் குழந்தைகள் பாலாரிஷ்டம், யோகாரிஷ்டம், கிரகதோஷம் முதலியவைகள் நீங்கப்பெற்று அரோக த்ருட காத்திரர்களாக வளர்ந்து விளங்குவார்கள் என்பது திண்ணம்.

---



# பஞ்சாயுத ஸ்தோத்ரம்

ஸ்புரத்ஸஹஸ்ராரஶிகாதி தீவ்ரம்
ஸுதர்ஶநம் பாஸ்கரகோடி துல்யம் |
ஸுரத்விஷாம் ப்ராணவிநாஶி விஷ்ணோ:
சக்ரம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ||

விஷ்ணோர் முகோத்தாநில பூரிதஸ்ய
யஸ்ய த்வநிர் தாநவ தர்ப்பஹந்தா |
தம் பாஞ்சஜன்யம் ஶஶிகோடி ஶுப்ரம்
ஶங்கம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ||



ஹிரண்மயீம் மேருஸமாந ஸாராம்
கௌமோதகீம் தைத்ய குலைக ஹந்த்ரீம் |
வைகுண்ட வாமாக்ர கராபிம்ருஷ்டாம்
கதாம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ||

ரக்ஷோऽஸுராணும் கடிநோக்ர கண்டச்
சேத க்ஷரச் சோணித திக்ததாரம் |
தம் நந்தகம் நாம ஹரே: ப்ரதீப்தம்
கட்கம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ||



யஜ்ஜ்யாநிநாத ஶ்ரவணுத் ஸுராணும்
சேதாம்ஸி நிர்முக்தபயாநி ஸத்ய: |
பவந்தி தைத்யாஶநி பாணவர்ஷி
ஶார்ங்கம் ஸதாऽஹம் ஶரணம் ப்ரபத்யே ||

இமம் ஹரே: பஞ்சமஹாயுதாநாம்
ஸ்தவம் படேத் யோऽநுதிநம் ப்ரபாதே |
ஸமஸ்த து:காநி பயாநி ஸத்ய:
பாபாநி நஶ்யந்தி ஸுகாநி ஸந்தி ||



வநே ரணே ஶத்ருஜலாக்நிமத்யே
யத்ருச்சயாபத்ஸு மஹாபயேஷு |
இதம் படந் ஸ்தோத்ர மநாகுலாத்மா
ஸுகீ பவேத் தத்க்ருத ஸர்வரக்ஷ: ||



ஸ்ரீரஸ்து



# ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம வாரக்கோலங்கள்

## பெண்மணிகளுக்கொரு பாக்யம் !

[ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலுள்ள ஒவ்வொரு திருநாமமும் மிகச் சக்தி வாய்ந்தது. அவைகளை நாவால் உச்சரித்தாலும் கையால் எழுதினாலும் ஸகல பாவங்களையும் நீக்கி, ஸகல க்ஷேமங்களையும் அளிக்கக்கூடியவை. ஆயிரம் நாமங்களையும் பாராயணம் செய்வதற்கோ, எழுதுவதற்கோ அவகாசமில்லாத பெண்மணிகள் ஒரு எளிய—ஆனால் மிகச் சிறந்த முறையில் ஸஹஸ்ரநாம ஜபத்தின் பயனை அடைந்து விடலாம். இந்த முறையே ஸஹஸ்ரநாம வாரக்கோலமாக இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இங்கே தரப்பட்டிருக்கும் ஸஹஸ்ரநாமக் கோலங்கள் ஏழு. அதாவது, ஞாயிறு முதல் சனி வரையிலுள்ள ஏழு நாட்களிலும் முறையே ஒவ்வொன்றாக உபயோகப்படுத்த வேண்டும்.

ஆயிரம் நாமங்களை ஏழு நாட்களுக்குப் பங்கிட்டு, அப்படி வகுத்தால், வரக்கூடிய 143 நாமங்களில் முதல் நாமமும் கடைசி நாமமும் இக்கோலங்களின் உள்ளே அமைக்கப் பட்டிருக்கின்றன. ஆகவே, ஞாயிறன்று 1-வது நாமத்தையும் 143 நாமத்தையும் கோலத்திற்குள் எழுதினால் இந்த 143 நாமங்களையும் (புடீகரணம் என்ற முறையில்) முழுவதும் எழுதிய பலன் உண்டாகும். இம்மாதிரியே மற்றக் கிழமைகளிலும் அந்த அந்தக் கோலங்களையும் நாமங்களையும் எழுத வேண்டும். இந்தக் கோலங்களை பகவானுடைய சந்நிதியிலும், ஸஹஸ்ரநாம ஜபம் நடக்கும் இடத்திலும் காலால் மிதிக்காத இடங்களில் அரிசிமாவினால், அல்லது வர்ணக் குங்குமத்தால் போடவேண்டும். பெண்மணிகள், மிகவும் அரிதும் புண்ணியமுமான இந்த ஸஹஸ்ரநாம வாரக்கோலங்களை அழகாக அமைத்து ஸ்ரீமந்நாராயணனுடைய கிருபையால் சீரும் சிறப்பும் பெற்று இன்புறுவார்களாக! —பதிப்பாசிரியர்.]




ஞாயிற்றுக்கிழமை

திங்கட்கிழமை







செவ்வாய்க்கிழமை




புதன்கிழமை

வியாழக்கிழமை







வெள்ளிக்கிழமை




சனிக்கிழமை

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஆழ்வார்கள் போற்றிய ஆயிரநாமம்

## அல்லல்படும் மக்களைக் காக்க ஆழ்வார்கள் அருளியுள்ள மாபெரும் ரக்ஷை

நம் தினசரி வாழ்க்கையில் ஒரு பெரிய உத்தியோகஸ்தரையோ அல்லது ஒரு பெரிய மனிதரையோ முக்கியமாகக் காண விரும்பும்போது, நாம், அவரது நெருங்கிய உறவினர்களிடமிருந்தோ அல்லது ஆப்த நண்பர்களிடமிருந்தோ அல்லது அரசியல் கட்சியைச் சேர்ந்த பிரமுகர்களிடமிருந்தோ ஒரு சிபாரிசுக் கடிதத்துடன் போகிறோமல்லவா? அதேபோல் பகவானுடைய அனுக்ரஹத்தை நாடும்போதும் அவனுக்கு ஆப்தமானவர்களிடமிருந்து ஒரு சிபாரிசுக் கடிதம் கிடைக்குமானால் எவ்வளவு உதவிகரமாக இருக்கும்? இக்கலிகாலத்தில் இது ஸாத்தியமா என்று சிலர் ஐயமுறலாம். இது ஸாத்தியமே. எங்ஙனமெனில், அநேக விதங்களில் நம் மக்களைக் காப்பாற்றி உய்விக்கும்பொருட்டு பரமகாருணிகனான பகவானின் திருவுள்ளப்படி அவனுக்கு மிகவும் நெருங்கியவர்களும் ஆப்தர்களுமான ஸ்ரீ பூமிதேவியும் கருட, விஷ்வக்ஸேந, ஸ்ரீவத்ஸ, கௌஸ்துப, வைஜயந்தீ, வநமாலைகளும், சுதர்சனம், பாஞ்சஜன்யம், கௌடுமாதகீ, கதை, கட்கம் என்கிற பஞ்சாயுதங்களும் இப்பிரபஞ்சத்தில் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களாக அவதரித்து நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்கிற நிரந்தரமான பொக்கிஷத்தின் மூலம் நிச்சயமாகப் பயனளிக்கவல்லதும் யாவருக்கும் எப்போதும் எளிதில் கிடைக்கக் கூடியதுமான பொன்னான ஒரு சிபாரிசுக் கடிதத்தை நமக்கு அளித்துள்ளார்கள். இவைகளை உருக்கத்துடன் அநுஸந்திப்பது ஆழ்வார்கள் அருளியுள்ள சிபாரிசுக் கடிதங்களை பகவத் கடாக்ஷத்துக்கு ஸமர்ப்பிப்பதற்கு ஒப்பாகும். இதனால் பகவதனுக்ரஹம் விளம்பமின்றி கிடைக்கும் எனக் கூறத் தட்டில்லை.

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் பெருமை

பகவானுடைய நாமஸங்கீர்த்தனமே இந்தக் கலியுகத்தில் நம் உஜ்ஜீவனத்துக்கு உபாயம் என்பது சாஸ்த்ரங்களின் முடிவு; ரிஷிகளின் உபதேசம். ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ர நாமமே இதற்குப் பிரமாணம். அதற்குமுன் படிக்கப்படும் சுலோகங்களிலிருந்தும் பல சுருதியாகச் சொல்லப்படும் சுலோகங்களிலிருந்தும் ஸஹஸ்ரநாமம் ஸகலதுக்கத்தையும் போக்கவல்லது என்றும் ஸகல ஸௌகங்களையும் அளிக்கவல்லது என்பதும் தெரிகிறது. மஹாபாரதத்தின் ஆநுசாஸநிகபர்வத்தில் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் அவதரிக்கும் பிரகரணமே மிகச் சிறப்புள்ளது. இடம் தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்ரம்; கேட்பவர் தர்மத்திலேயே ருசியுள்ள யுதிஷ்டிரர்; அருளிச் செய்பவர் ஜ்ஞாநாதிகரான பீஷ்மர்; கூடியிருப்பவர்கள் தவத்தால் மிக்க மஹரிஷிகள்; எல்லாவற்றுக்கும் மேலாக, ஸஹஸ்ர நாமத்தால் போற்றப்படும் பேராயிரமுடையவனுன ஸ்ரீ கிருஷ்ணன் பீஷ்மர் சொல்வதைத் தானும் கூட இருந்து அவர் சொல்வது முற்றிலும் உண்மை என்று மேலெழுத்திட்டுக் கொடுப்பது போலக் கேட்டுக்கொண்டிருக்கிறுன். ஆக ஸஹஸ்ரநாமத்தில் சொல்வதெல்லாம் ஸத்யம் என்பதற்கு ஸர்வ ஸாக்ஷியான ஸ்ரீ கிருஷ்ண பகவானே ஸாக்ஷி.

மேலும், நாமம் பகவானுடையதாகவே இருந்தாலும் பகவானுக்குள்ள மஹிமையைக் காட்டிலும் நாமத்தின் மஹிமை மேற்பட்டது என்பதற்கு ஸ்ரீ கிருஷ்ணனே பிரமாணம். மஹாபாரதத்தில் மற்றொரு கட்டத்தைப் பார்ப்போம்: வணங்கலில் அரசனுன துர்யோதனனுடைய ராஜ ஸபை. பீஷ்மர் துரோணர் கிருபர் முதலான தார்மிகர்களான ஆசார்ய ச்ரேஷ்டர்கள் வீற்றிருக்கிறுர்கள். மஹா வீரர்களான பாண்டவர்கள் ஐவரும் தர்ம பாசத்தால் கட்டுண்டவர்களாய்ச் செயலற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறுர்கள். துர்யோதனனுடைய ஆஜ்ஞையால் தம்பி துச்சாஸநன் துரௌபதியை ஸபைநடுவே இழுத்து வந்து நிறுத்துகிறுன். அத்தோடு நிற்காமல் திரௌபதியை மானபங்கம் செய்ய அவள் துகிலை உரிய ஆரம்பிக்கிறுன். எல்லோருக்கும் இடி விழுந்ததுபோல ஒரே அதிர்ச்சி. அபலையான துரௌபதி தன் சக்தியால் தன்னைக் காத்துக்கொள்ள முயலுகிறுள். பலவானுன துச்சாசநனுடைய வலிமைக்கு முன் அவளுக்கு ஏது

வலிமை? தனக்கு ரக்ஷணம் ஏற்படுமா என்று மஹாத்மாக்களான பீஷ்மாதிகளைப் பார்க்கிறாள். சூரர்களான தன் பர்த்தாக்களைப் பார்க்கிறாள். தான் தனக்குத் தஞ்சமில்லாதது போலவே பிறரும் தனக்குத் தஞ்சமில்லை என்பதை உணர்கிறாள். இனிப்பரமனே கதி என்று அறுதியிட்டுப் புடவையைப் பிடித்திருந்த கைகளை உதறி, "ஹே கிருஷ்ணா! புகலற்ற எனக்கு நீயே சரண்" என்று அஞ்ஜலி செய்து நிற்கிறாள். மறு க்ஷணம் விந்தையிலும் விந்தையான நிகழ்ச்சி. உரிய உரியப் புடவை வளர்கிறது. பலிஷ்டனான துச்சாசநன் சோர்வுற்று விழுகிறான். திரௌபதியின் மானம் காக்கப் பட்டது. இப்படித் திரௌபதியை ரக்ஷித்தது ஸ்ரீ கிருஷ்ணனா? ஸ்ரீ கிருஷ்ண நாமமா? இதற்கு விடை ஸ்ரீ கிருஷ்ணன் வாக்காலேயே நமக்குக் கிடைக்கிறது. பாரத யுத்தம் முடித்து, துஷ்டர்களான துர்யோதனாதிகளை அழித்து, திரௌபதியின் குழலை முடித்து, பாண்டவர்களை ஸிம்ஹாஸநத்தில் அமர வைத்து எல்லாம் செய்த பிறகு ஸ்ரீகிருஷ்ணன் நினைக்கிறான் - ஸபையிலிருந்தவர்களையெல்லாம் விட்டுவிட்டு, வெகு தூரத்திலிருந்த என்னை, 'கிருஷ்ணா சரணம்' என்று திரௌபதி கூவியழைத்தது இன்னமும் என் நெஞ்சைவிட்டு அகலாது. தீராத கடன்பட்டவன் நெஞ்சப்போல் என்னை உறுத்திக்கொண்டேயிருக்கிறது.

"கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் |
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ||"

என்று நொந்த மனத்தனாய்க் கூறிக் கொள்ளுகிறான். இதனால் தன் நாமமே கார்யத்தைச் செய்ததேயொழிய நாமத்தையுடையவனான தான் இல்லை என்பது ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸித்தாந்தம் என்று ஏற்படுகிறது.

பிறகு அவதார கார்யம் முடிந்து தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளுகிறபோதும், 'இதை நினைத்து நினைத்துப் புண்பட்ட மனத்துடனேயே சென்றான்' ("நாதிஸ்வஸ்த - மநா : யயௌ") என்று மஹரிஷி கூறுகிறார். ஆக ஸ்ரீ கிருஷ்ணனே கையெழுத்துச் செய்து கொடுத்த மஹிமையையுடையவை ஸ்ரீ கிருஷ்ண நாமமும் ஸ்ரீ ஸஹஸ்ரநாமமும் என்பதை எண்ணி எண்ணி அவனைப் போற்றுவோமாக!

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்துடன் திவ்வியப் பிரபந்தாநுஸந்தானம் செய்ய வேண்டியதன் அவசியம்

இப்படிப் பெருமை வாய்ந்த பகவந் நாமங்களை ஆழ்வார்களும் தம் பிரபந்தங்களில் பலவாருகப் போற்றிப் பாடி இருக்கிருர்கள். நாமம் கொண்டு நாராயணனைப் பரவி அருளைப் பெற்ருர்கள்.

ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ள வேதஸாரமான திவ்வியப் பிரபந்தங்களில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தைப்பற்றி மேலே கூறியுள்ளபடி ஆங்காங்கு ப்ரஸ்தாவிக்கப்பட்டிருப்பதே அதனுடைய பெருமைக்கு மற்ருெரு மாபெரும் அத்தாட்சி ஆகும். அங்ஙனம் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் அல்லது பகவந் நாமாவின் பெருமையைக் குறிப்பிடும் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் சிலவற்றை இங்கே கொடுத்துள்ளோம். மேலும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் அல்லது பகவந்நாமாவைப் பற்றிய ப்ரஸ்தாவம் வரும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்த பாசுரங்களின் வரிசை எண்களையும் [அதாவது ஸ்ரீ மயிலை மாதவதாஸன் அவர்களால் பதிப்பிக்கப் பெற்று, ஸ்ரீ மணலி ராமகிருஷ்ண முதலியார், B. A., ஹெரிடிடரி ட்ரஸ்டி, தி மணலி லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ், 98/99, வரதாமுத்தையப்பன் தெரு, மதராஸ்-1 அவர்களால் 1962-ல் திருத்திய பதிப்பாக (விலை ரூ. 5தான்) வெளியிடப்பட்டுள்ள நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் * கொடுக்கப்பட்டுள்ள வரிசைக் கிரமப்படி] கொடுத்துள்ளோம். ஸ்ரீ விஷ்ணு ஸ்ஹஸ்ரநாம பாராயணம் செய்வதன் மூலம் பகவதனுக்ரஹத்தைக் கோரும் விஷ்ணு பக்தர்கள் இப்பாசுரங்கள் எல்லாவற்றையுமோ, சிலவற்றையோ அல்லது குறைந்த பக்ஷம் ஒன்றையோ அநுஸந்தித்தால் பகவான் ஸஹஸ்ரநாம பாராயணத்தால் திருப்தியடைவதற்கு அது சிபாரிசுக் கடிதமாக அமையும் என்பது எமது துணிவு.

* குறிப்பு : இப்புத்தகம் ஒரு அரிய பெரிய பொக்கிஷம். அடக்க விலைக்கு விற்கப்படும் மாபெரும் தர்மம். ஒவ்வொரு விஷ்ணு பக்தனும் வாங்கிப் போற்ற வேண்டிய தெய்வ அருள்பெற்ற தனமாகும் இது.

எனவே, ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம பாராயணத்துடன், ஆழ்வார்களுடைய பாசுரங்களையும் நம் பூர்வர்களுடைய அருளிச் செயல்களையும் அனுஸந்தித்து வந்தால் பகவதனுக்ர ஹமும் ஆழ்வாராசார்யர்களுடைய அனுக்ரஹமும் ஸித்திப் பது திண்ணம். ஆனல் மற்றெல்லாவற்றையும் விட,

'மாதவன்பேர் சொல்லுவதே ஒத்தின் சுருக்கு'
'அவன்பேர் ஈரைந்நூறும் எப்பொழுதும்
சாற்றியுரைத்தலே தவம்.'

'பள்ளியில் ஓதிவந்த சிறுவனை ப்ரஹ்லாதன்
வாயில் ஒள்ளியவாகித் திகழ்ந்தது இவ்வாயிர நாமமே.'

'களிறட்ட பிரான் திருநாமத்தால்
தவளப் பொடிக்கொண்டு இட்டால் இடர் நீங்கும்.'

'ஓதியாயிர நாமங்கள் உணர்ந்தவர்க்கு உறுதுயரடையாமல்
ஏதமின்றி நின்றருளும் நம் பெருந்தகை'

'வினையால் அடர்ப்படார் வெந்நரகில் சேரார்,
தினையேனும் தீக்கதிக்கட் செல்லார்—நினைதற்கு
அரியானைச் சேயானை, ஆயிரம் பேர்ச் செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்.'

'அயர் வென்ற தீர்ப்பான் பேர்பாடி—செயல்தீரச்
சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்'

என்பன போன்ற ஆழ்வார்களுடைய திருவாக்குகளை பக்தர் கள் நினைவிற்கொண்டு, அவற்றையும் உள்ளம் உருக அநுஸந்தித்து, ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணத்தைத் தினந்தோறும் தவருமல் செய்து வருவார்களாக. அதனுல், பக்தர்கள் மக்கள், காணிமனையறம் செழித்து, ஆல்போல் தழைத்து, அரசு போல் உயர்ந்து பல்லாண்டு பல்லாண்டு வாழ்வார் என்பது திண்ணம்.

"ஸ்ரீரங்கம்",
8, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-17.

தி லிட்டில் பிளவர் கம்பெனி,
(லிப்கோ)
பதிப்பகத்தார்.

ஸ்ரீ:

# ஆயிரநாமம் பற்றிய பாசுரங்கள்

"கண்ணன் கழலிணை—நண்ணும் மனமுடையீர்,
எண்ணும் **திருநாமம்**, திண்ணம் நாரணமே"

— (நம்மாழ்வார்) திருவாய்மொழி 10-5-1.

அண்டக் குலத்துக் கதிபதி யாகி
அசுரரி ராக்கதரை,
இண்டைக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடீகே சன்தனக்கு,
தொண்டக் குலத்திலுள் ளீர்வந் தடிதொழு
தாயிர நாமம்சொல்லி,
பண்டைக் குலத்தைத் தவிர்த்துப்பல் லாண்டுபல்
லாயிரத் தாண்டென்மினே.

— (பெரியாழ்வார்) திருப்பல்லாண்டு 5.

எல்லையில் வாசல் குறுகச் சென்றால்
எற்றி நமன்றமர் பற்றும் போது,
நில்லுமி னென்னு முபாய மில்லை
நேமியும் சங்கமு மேந்தி னானே,
சொல்லலாம் போதேயுன் நாம மெல்லாம்
சொல்லினே னென்னைக் குறிக்கொண் டென்றும்,
அல்லற் படாவண்ணங் காக்க வேண்டும்
அரங்கத் தரவணைப் பள்ளி யானே!

— (பெரியாழ்வார்) திருமொழி, 4-10-3.

தண்ணென வில்லை நமன்ற மர்கள்
சாலக் கொடுமைகள் செய்யா நிற்பர்,
மண்ணொடு நீரு மெரியும் காலும்
மற்றுமா காசமு மாகி நின்றாய்,
எண்ணலாம் போதேயுன் நாம மெல்லாம்
எண்ணினே னென்னைக் குறிக்கொண் டென்றும்,
அண்ணலே! நீயென்னைக் காக்க வேண்டும்
அரங்கத் தரவணைப் பள்ளி யானே!

— (பெரியாழ்வார்) திருமொழி, 4-10-6.

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி,
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்,
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து,
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகள,
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப,
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்க, குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்,
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.

— (ஆண்டாள்) திருப்பாவை, 3.

நாமமாயிர மேத்தநின்ற
நாராயணாநர னே, உன்னை
மாமிதன்மக னாகப்பெற்றா
லெமக்குவாதை தவிருமே,
காமன் போதரு காலமென்றுபங்
குனிநாள்கடை பாரித்தோம்,
தீமைசெய்யும் சிரீதரா ! எங்கள்
சிற்றில்வந்து சிதையேலே.

— (ஆண்டாள்) நாச்சியார் திருமொழி, 2-1.

பேய ரேயெனக் கியாவரும், யானுமோர்
பேய னேயெவர்க் கும்இது பேசியென்,
'ஆய னே! அரங் கா!' என்ற ழைக்கின்றேன்
பேய னாயொழிந் தேனெம்பி ரானுக்கே.

— (குலசேகராழ்வார்) பெருமாள் திருமொழி, 3-8.

அறிந்தறிந்து வாமனன டியிணைவ ணங்கினால்,
செறிந்தெழுந்த ஞானமோடு செல்வமும்சி றந்திடும்,
மறிந்தெழுந்த தெண்டிரையுள் மன்னுமாலை வாழ்த்தினால்,
பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல் பான்மையே.

(திருமழிசைப்பிரான்) திருச்சந்த விருத்தம், 74.

காவலிற் புலனை வைத்துக்
கலிதனைக் கடக்கப் பாய்ந்து
நாவலிட் டுழிதரு கின்றோம்
நமன்தமர் தலைகள் மீதே,

மூவுல குண்டு மிழ்ந்த
முதல்வ! நின் நாமம் கற்ற,
ஆவலிப் புடைமை கண்டாய்
அரங்கமா நகரு ளானே!

— (தொண்டரடிப்பொடியாழ்வார்) திருமாலை 1.

'பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேறே!
ஆயர்தம் கொழுந்தே!' என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோக மாளும்,
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே!

— (தொண்டரடிப்பொடியாழ்வார்) திருமாலை 2.

நமனும்முற் கலனும் பேச
நரகில்நின் றார்கள் கேட்க,
நரகமே சுவர்க்க மாகும்
நாமங்க ளுடைய நம்பி,
அவனது ரரங்க மென்னாது
அயர்த்துவீழ்ந் தளிய மாந்தர்,
கவலையுள் படுகின் றாரென்
றதனுக்கே கவல்கின் றேனே!

— (தொண்டரடிப்பொடியாழ்வார்) திருமாலை 12.

கார்கொள் வேங்கைகள் கனவரை தழுவிய
கறிவளர் கொடிதுன்னி,
போர்கொள் வேங்கைகள் புனவரை தழுவிய
பூம்பொழி லிமயத்துள்,
ஏர்கொள் பூஞ்சுனைத் தடம்படிந் தினமலர்
எட்டுமிட் டிமையோர்கள்,
பேர்க ளாயிரம் பரவிநின் றடிதொழும்
பிருதிசென் றடைநெஞ்சே!

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-2-7.

ஓதி ஆயிர நாமங்க ளுணர்ந்தவர்க்
குறுதுய ரடையாமல்,
ஏத மின்றிநின் றருளும்நம் பெருந்தகை
இருந்தந விமயத்து,
தாது மல்கிய பிண்டிவிண் டலர்கின்ற
தழல்புரை யெழில்நோக்கி,
பேதை வண்டுக ளெரியென வெருவரு
பிருதிசென் றடைநெஞ்சே!

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-2-9.

உறிகள் போல்மெய்ந் நரம்பெ ழுந்தூன் தளர்ந்துள்
ளமெள்கி,
நெறியை நோக்கிக் கண்சு ழன்று நின்று நடுங்கா முன்,
அறிதி யாகில் நெஞ்சம் அன்பா யாயிர நாமஞ்சொல்லி,
வெறிகொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-3-3.

புலன்கள் நைய மெய்யில் மூத்துப் போந்திருத்
துள்ளமெள்கி,
கலங்க ஐக்கள் போத வுந்திக் கண்ட பிதற்றுமுன்,
அலங்க லாய தண்டு ழாய்கொண் டாயிர நாமஞ்சொல்லி,
வலங்கொள் தொண்டர் பாடி யாடும் வதரி வணங்குதுமே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-3-

ஊரான் குடந்தை யுத்தமன்
ஒருகா லிருகால் சிலைவளைய,
தேரா வரக்கர் தேர்வெள்ளம்
செற்றான் வற்றா வருபுனல்சூழ்
பேரான், பேரா யிரமுடையான்
பிறங்கு சிறைவண் டறைகின்ற
தாரான், தாரா வயல்சூழ்ந்த
சாளக் கிராம மடைநெஞ்சே!

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-5-4

பாரு நீரெரி காற்றி னோடா
காச முமிவை யாயினான்,
பேரு மாயிரம் பேச நின்றபி—
றப்பி லிபெரு குமிடம்,

காரும் வார்பனி நீள்வி சும்பிடைச்
சோரு மாமுகில் தோய்தர,
சேரும் வார்பொழில் சூழெ ழில்திரு
வேங்க டமடை நெஞ்சமே!

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 1-8-7.

பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயிலோ ராயிர நாமம்,
ஒள்ளிய வாகிப் போதவாங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகி,
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்,
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 2-3-8.

புகராருரு வாகிமு னிந்தவனைப்
புகழ்வீட முனிந்துயி ருண்டு, அசுரன்
நகராயின பாழ்பட நாமமெறிந்—
ததுவன்றியும் வென்றிகொள் வாளவுணன்,
பகராதவ னாயிர நாமமடிப்
பணியாதவ னைப்பணி யாலமரில்,
நிகராயவன் நெஞ்சிடந் தானவனுக்
கிடம்மாமலை யாவது நீர்மலையே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 2-4-7.

பண்டிவன் வெண்ணெயுண் டானெனன் றுய்ச்சியர் கூடி யிழிப்ப
எண்டிசை யோரும்வ ணங்க இணைமரு தூடு நடந்திட்டு,
அண்டரும் வானத் தவரு மாயிர நாமங்க ளோடு,
திண்டிறல் பாட வருவான் சித்திரக் கூடத்துள் ளானே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 3-3-3.

ஓதி யாயிர நாமமும் பணிந்தேத்தி
நின்னடைந் தேற்குஒரு பொருள்
வேதியா! அரையா! உரையாய் ஒருமாற்ற மெந்தாய்,
நீதி யாகிய வேதமா முனியாளர்
தோற்ற முரைத்து, மற்றவர்க்
காதியாய் இருந்தாய்! அணியாலி யம்மானே!

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 3-5-9.

ஆயிரம் குன்றம் சென்றுதொக் கனைய
அடல்புரை யெழில்திகழ் திரள்தோள்,
ஆயிரந் துணிய அடல்மழுப் பற்றி
மற்றவன் அகல்விசும் பணைய,
ஆயிரம் பெயரா லமரர்சென் றிறைஞ்ச
அறிதுயி லலைகடல் நடுவே,
ஆயிரம் சுடர்வா யரவணைத் துயின்றான்
அரங்கமா நகரமர்ந் தானே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 5-7-6.

தாராளன் தண்ணரங்க வாளன் பூமேல்
தனியாளன் முனியாள ரேத்தநின்ற
பேராளன், ஆயிரம்பே ருடைய வாளன்
பின்னைக்கு மணவாளன் பெருமைகேட்பீர்,
பாராள ரவரிவரென் றழுந்தை யேற்ற
படைமன்ன ருடல்துணியப் பரிமாவுய்த்த,
தேராளன் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 6-6-9.

'பேரா யிரமுடைய பேராளன்
பேராளன்' என்கின் றாளால்.
'ஏரார் கனமகர குண்டலத்தன்
எண்தோளன்' என்கின் றாளால்,
'நீரார் மழைமுகிலே நீள்வரையே
ஒக்குமால்' என்கின் றாளால்,
காரார் வயலமரும் கண்ணபுரத்
தம்மானைக் கண்டாள் கொல்லோ !

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 8-1-6.

வாராளு மிளங்கொங்கை நெடும்பணைத்தோள் மடப்பாவை,
சீராளும் வரைமார்வன் திருக்கண்ண புரத்துறையும்,
பேராள னாயிரம்பே ராயிரவா யரவணைமேல்,
பேராளர் பெருமானுக் கிழந்தேனென் பெய்வளையே.

— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 8-3-9.

பாடோமே யெந்தை பெருமானை ?, பாடிநின்று
ஆடோமே யாயிரம் பேரானை ?, பேர்நினைந்து

சூடோமே சூடும் துழாயலங்கல்?, சூடி, நாம்
கூடோமே கூடக் குறிப்பாகில்? நன்னெஞ்சே!
— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 11-3-8.

பெற்றாரார் ஆயிரம் பேரானைப், பேர்பாடப்
பெற்றான் கலிய னொலிசெய் தமிழ்மாலை,
கற்றாரோ முற்றுல காள்வ ரிவைகேட்க—
லுற்றார்க்கு, உறுதுய ரில்லை யுலகத்தே.
— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 11-3-10.

பாராரும் காணுமே பரவைமா
நெடுங்கடலே யானகாலம்,
ஆரானும் அவனுடைய திருவயிற்றில்
நெடுங்காலம் கிடந்தது, உள்ளத்
தோராத வுணர்விலீர்! உணருதிரேல்
உலகளந்த வும்பர்கோமான்,
பேராளன் பேரான பேர்களா
யிரங்களுமே பேசீர்களே.
— (திருமங்கையாழ்வார்) பெரிய திருமொழி 11-6-5.

வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார்,
தினையேனும் தீக்கதிக்கட் செல்லார்,—நினைதற்
கரியானைச் சேயானை, ஆயிரம்பேர்ச் செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால்!
— (பொய்கையாழ்வார்) இயற்பா—முதற்றிருவந்தாதி 65.

காலை யெழுந்துலகம் கற்பனவும், கற்றுணர்ந்த
மேலைத் தலைமறையோர் வேட்பனவும்,—வேலைக்கண்
ஓராழி யானடியே ஓதுவதும் ஓர்ப்பனவும்,
பேராழி கொண்டான் பெயர்.
— (பொய்கையாழ்வார்) இயற்பா—முதற்றிருவந்தாதி 66.

சொல்லுந் தனையும் தொழுமின் விழுமுடம்பு,
செல்லுந் தனையும் திருமாலை,—நல்லிதழ்த்
தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்,
நாமத்தால் ஏத்துதிரேல் நன்று.
— (பொய்கையாழ்வார்) இயற்பா—முதற்றிருவந்தாதி 70.

ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள்,
தானத்தால் மற்றவன்பேர் சாற்றினுல்,—வானத்
தணியமர ராக்குவிக்கு மஃதன்றே, நங்கள்
பணியமரர் கோமான் பரிசு ?

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி

அறிந்தைந்து முள்ளடக்கி ஆய்மலர்கொண்டு, ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் சேவ்வே,—அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே,
காரோத வண்ணன் கழல்.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 6.

ஓத்தின் பொருள்முடிவும் இத்தனையே, உத்தமன்பேர்
ஏத்தும் திறமறிமி னேழைகாள்,—ஓத்ததனை
வல்லீரேல் நன்றதனை மாட்டீரேல், மாதவன்பேர்
சொல்லுவதே ஓத்தின் சுருக்கு.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 39.

இதுகண்டாய் நன்னெஞ்சே ! இப்பிறவி யாவது,
இதுகண்டா யெல்லாம்நா முற்றது,—இதுகண்டாய்
நாரணன்பே ரோதி நரகத் தருகணையா,
காரணமும் வல்லையேல் காண்.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 66.

ஆய்ந்துரைப்ப ஞயிரம்பேர் ஆதிநடு வந்திவாய்,
வாய்ந்த மலர்தூவி வைகலும்,—ஏய்ந்த
பிறைக்கோட்டுச் செங்கண் கரிவிடுத்த பெம்மான்,
இறைக்காட் படத்துணிந்த யான்.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 73.

உறுங்கண்டாய் நன்னெஞ்சே ! உத்தமன்நற் பாதம்,
உறுங்கண்டாய் ஒண்கமலந் தன்னால், —உறுங்கண்டாய்
ஏத்திப் பணிந்தவன்பேர் ஈரைஞ்ஞூ றெப்பொழுதும்,
சாற்றி யுரைத்தல் தவம்.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 77.

தவம்செய்து நான்முகனே பெற்ருன், தரணி
நிவந்தளப்ப நீட்டியபொற் பாதம், — சிவந்ததன்
கையனைத்து மாரக் கழுவினன், கங்கைநீர்
பெய்தனைத்துப் பேர்மொழிந்து பின்.

— (பூதத்தாழ்வார்) இயற்பா—இரண்டாந்திருவந்தாதி 78.

நாமம் பலசொல்லி நாராய ணுவென்று,
நாமங்கை யால்தொழுதும் நன்னெஞ்சே ! —வா,மருவி
மண்ணுலக முண்டுமிழ்ந்த வண்டறையும் தண்டுழாய்,
கண்ணனையே காண்கநங் கண்.

— (பேயாழ்வார்) இயற்பா—மூன்ருந்திருவந்தாதி 8.

தேசும் திறலும் திருவும் உருவமும்,
மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில்
வலம்புரிந்த வான்சங்கம் கொண்டான்பே ரோத,
நலம்புரிந்து சென்றடையும் நன்கு.

— (பேயாழ்வார்) இயற்பா—மூன்ருந்திருவந்தாதி 10.

செவிக்கின்பம் ஆவதுவும் செங்கண்மால் நாமம்,
புவிக்கும் புவியதுவே கண்டீர்,— கவிக்கு
நிறைபொருளாய் நின்ருனை நேர்பட்டேன், பார்க்கில்
மறைப்பொருளும் அத்தனையே தான்.

— (திருமழிசையாழ்வார்) இயற்பா—நான்முகன் திருவந்தாதி 69.

இருக்கார் மொழியால் நெறியிழுக் காமை, உலகளந்த
திருத்தா ளிணைநிலத் தேவர் வணங்குவர், யாமும்அவா
ஒருக்கா வினையொடும் எம்மொடும் நொந்து கனியின்மையின்
கருக்காய் கடிப்பவர் போல்,திரு நாமச்சொல் கற்றனமே.

— (நம்மாழ்வார்) இயற்பா—திருவிருத்தம் 65.

விளரிக் குரலன்றில் மென்பெடை மேகின்ற
முன்றில்பெண்ணை,
முளரிக் குரம்பை யிதுவிது வாக, முகில்வண்ணன்பேர்
கிளரிக் கிளரிப் பிதற்றும்மெல் லாவியும்
நைவுமெல்லாம்
தளரில் கொலோவறி யேன்,உய்ய லாவதித்
தையலுக்கே !

— (நம்மாழ்வார்) இயற்பா — திருவிருத்தம் 84.

அடர்பொன் முடியானை யாயிரம்பே ரானை,
சுடர்கொள் சுடராழி யானை, -இடர்கடியும்
மாதா பிதுவாக வைத்தேன் எனதுள்ளே,
யாதாகில் யாதே இனி ?

— (நம்மாழ்வார்) இயற்பா — பெரிய திருவந்தாதி 70.

'பேரா யிரமுடையான்' என்றாள், பெயர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள்.

— (திருமங்கையாழ்வார்) இயற்பா — சிறிய திருமடல் 22.

ஈரா அதனை இடர்கடிந்தான் எம்பெருமான்,
பேரா யிரமுடையான் பேய்ப்பெண்டீர் ! நும்மகளை,
தீராநோய் செய்தான் எனவுரைத்தாள்.

— (திருமங்கையாழ்வார்) இயற்பா — சிறிய திருமடல் 51-52.

.........தேன்துழாய்த்
தாரானை, தாமரைபோல் கண்ணனை, எண்ணருஞ்சீர்
பேரா யிரமும் பிதற்றி, பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊரா தொழியேன்நான்.

— (திருமங்கையாழ்வார்) இயற்பா — சிறிய திருமடல் 76-77.

யாருமோர் நிலைமைய னெனவறி வரியவெம் பெருமான்,
யாருமோர் நிலைமைய னெனவறி வெளியவெம் பெருமான்,
பேருமோ ராயிரம் பிறபல வுடையவெம் பெருமான்,
பேருமோ ருருவமு முளதில்லை யிலதில்லை பிணக்கே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 1-3-4.

சேரும் கொடைபுகழ் எல்லையி லானை,ஓ ராயிரம்
பேரும் உடைய பிரானையல் லால்மற்று யான்கிலேன்,
மாரி யனையகை மால்வரை யொக்கும்திண் டோளென்று,
பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும்பொய்கள் வேயவே.

—நம்மாழ்வார் திருவாய்மொழி 3-9-7.

பணிமின் திருவருள் என்னும்அஞ் சீதப்பைம் பூம்பள்ளி,
அணிமென் குழலார் இன்பக் கலவி அமுதுண்டார்,
துணிமுன்பு நாலப்பல் லேழையர் தாமிழிப் பச்செல்வர்,
மணிமின்னு மேனிநம் மாயவன் பேர்சொல்லி வாழ்மினோ.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 4-1-5.

 

குணங்கொள் நிறைபுகழ் மன்னர் கொடைக்கடன்
பூண்டிருந்து,
இணங்கி யுலகுட னாக்கிலும் ஆங்கவ னையில்லார்,
மணங்கொண்ட போகத்து மன்னியு மீள்வர்கள்
மீள்வில்லை,
பணங்கொள் அரவணை யான்திரு நாமம் படிமினோ.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 4-1-8.

மருந்தாகும் என்றங்கோர் மாய வலவைசொற்
கொண்டு,நீர்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் களனிழைத்
தென்பயன்?,
ஒருங்காக வேயுல கேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட,
பெருந்தேவன் பேர்சொல்ல கிற்கில் இவளைப் பெறுதிரே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 4-6-4.

தொல்லருள் நல்வினையால் சொல்லக்கூடுங்கொல்
தோழிமீர்காள்,
தொல்லருள் மண்ணும்விண்ணும் தொழநின்ற
திருநகரம்,
நல்லரு ளாயிரவர் நலனேந்தும் திருவல்லவாழ்,
நல்லருள் நம்பெருமான் நாராயணன் நாமங்களே?

— நம்மாழ்வார் திருவாய்மொழி 5-9-10.

நாமங்க ளாயிரமு டையநம்பெரு மானடிமேல்,
சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்
தெரிந்துரைத்த,
நாமங்க ளாயிரத்துள் இவைபத்தும் திருவல்லவாழ்,
சேமங்கொள் தென்னகர்மேல் செப்புவார்சிறந்
தார்பிறந்தே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 5-9-11.

தாள்களை யெனக்கே தலைத்தலை சிறப்பத்
தந்தபே ருதவிக்கைம் மாறு,
தோள்களை யாரத் தழுவியென் னுயிரை
அறவிலை செய்தனன் சோதீ,

தோள்களா யிரத்தாய் ! முடிகளா யிரத்தாய் !
துணைமலர்க் கண்களா யிரத்தாய்,
தாள்களா யிரத்தாய்! பேர்களா யிரத்தாய் !
தமியனேன் பெரிய அப்பனே !

— நம்மாழ்வார் திருவாய்மொழி 8-1-10.

மடவரல் அன்னைமீர்கட் கென்சொல்லிச்
சொல்லுகேன் ? மல்லைச்செல்வ
வடமொழி மறைவாணர் வேள்வியுள்
நெய்யழல் வான்புகைபோய்
திடவிசும் பிலமரர் நாட்டை
மறைக்கும்தண் திருப்புலியூர்,
படவர வணையான் றன்நாமம்
அல்லால் பரவா ளிவளே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 8-9-8.

ஓரா யிரமாய் உலகேழ் அளிக்கும்
பேரா யிரம்கொண் டதோர்பீ டுடையன்
காரா யினகா ளநன்மே னியினன்,
நாரா யணன்நங் கள்பிரான் அவனே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 9-3-1.

இலங்கதி மற்றொன் றெம்மைக்கும் ஈன்தண் டுழாயின்,
அலங்கலங் கண்ணி ஆயிரம் பேருடை அம்மான்,
நலங்கொள் நான்மறை வாணர்கள் வாழ்திரு மோகூர்,
நலங்க ழலவன் அடிநிழல் தடமன்றி யாமே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 10-1-2.

துயர்கெ டும்கடி தடைந்துவந் தடியவர் தொழுமின், .
உயர்கொள் சோலையொண் தடமணி யொளிதிரு
மோகூர்,
பெயர்கள் ஆயிர முடையவல் லரக்கர்புக் கழுந்த,
தயர தன்பெற்ற மரகத மணித்தடத் தினையே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 10-1-8.

ஊரும்புட் கொடியுமஃதே யுலகெல்லா முண்டுமிழ்ந்தான்,
சேரும்தண் ணனந்தபுரம் சிக்கெனப் புகுதிராகில்,
தீரும்நோய் வினைகளெல்லாம் திண்ணநாம்
அறியச்சொன்னோம்
பேரும்ஓ ராயிரத்துள் ஒன்றுநீர் பேசுமினே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 10-2-3

நாடீர் நாடோறும், —வாடா மலர்கொண்டு,
பாடீர் அவன்நாமம், —வீடே பெறலாமே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 10-5-5.

சாரா ஏதங்கள்,—நீரார் முகில்வண்ணன்,
பேரா ரோதுவார், — ஆரார் அமரரே.

— நம்மாழ்வார் திருவாய்மொழி 10-5-8

## பகவந் நாம விஷயமான பாசுரங்கள்

(ஸ்ரீ மயிலை மாதவதாஸன் பதிப்பில் உள்ள பாசுர எண்கள்)

5, 11, 293, 345, 362, 372, 381 முதல் 390, 425, 428, 435, 438, 476, 482, 484, 491, 506, 514, 675, 765, 854, 872, 873, 875, 883, 964 966, 970, 976, 991, 997, 1024, 1026, 1075, 1084, 1112, 1161, 1170, 1196, 1394, 1413, 1431, 1434, 1435, 1506, 1581, 1653, 1676, 1776, 1925, 1979, 1981, 2006, 2071, 2114, 2132, 2137, 2146, 2147, 2151, 2162, 2176, 2183, 2187, 2195, 2201, 2219, 2220, 2225, 2231, 2232, 2238, 2247, 2253, 2254, 2258, 2259, 2273, 2289, 2291, 2387, 2430, 2449, 2450, 2459, 2466, 2469, 2521, 2541, 2560, 2643, 2654, 2673—22, 52, 64 & 77, 2700, 2834, 2948, 2991, 3011, 3014, 3065, 3066, 3214, 3215, 3276, 3277, 3294, 3295, 3369, 3448, 3456, 3535, 3538, 3542, 3579, 3608, 3668, 3674, 3676, 3680, 3682, 3700, 3711, 3715, 3718, 3724.

———

# மானம் காக்க

பெரும் புகழும் எல்லையிலாச் செல்வமும் வருமாயினும் அவற்றை அடைய மேற்கொள்ளும் வழி நேர்மையும் நீதியும் கொண்டதாய் இருக்கவேண்டும். நேர்மையைக் கடைப்பிடிக்காமல் இருப்பவன் பெருமையை இழக்கிறான். அந்நிலையிலிருந்து இழிந்தவன் மானம் இழந்தவன் ஆவான். மானம் பெரிதோ? உயிர் பெரிதோ? யாவரும் மானமே பெரிது என்பர். கவரி மான் என்றொரு மான் உண்டு. அது தன் உடம்பிலிருந்து ஒரு மயிர் நீக்கப்படுமாயினும் உயிர் விட்டு விடுமாம். அதுபோலச் சிறந்தோர்கள் தம் மானம் அழியும் நிலை வரின் உயிரை விட்டு மானத்தைக் காத்துக்கொள்வார்கள். பலர் முன்னிலையில் திரௌபதியின் ஆடையைக் களையத் தொடங்கிய துச்சாதனன் தலை கவிழுமாறு திரௌபதி தன் உணர்ச்சிகள் யாவற்றையும் ஒருமுகமாக்கிக் கண்ணனைக் கருத்தில் இருத்தி, "கோவிந்தா கோவிந்தா !!" என்று கதறினாள். வண்ண வண்ணத் துணிகள் களையக் களைய மேலும் மேலும் வளர்ந்து வந்துகொண்டே இருந்தன. அவள் செய்த உபாயம் தான் என்ன? வேறென்னவாக இருக்கும்? திருமாலடியே சரண் எனக் கதறினாள். இதனை வில்லிபுத்தூராழ்வார் வாக்கால் காண்போம்:

"ஆறாகி இருதடங்கண் அஞ்சனவெம்
புனல்சோர அளகம் சோர
வேறான துகில்தகைந்த கைசோர
மெய்சோர வேறோர் சொல்லும்
கூறாமல் கோவிந்தா கோவிந்தா
என்றரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊறாத அமிழ்தூற உடல்புளகித்து
உள்ளமெலாம் உருகினாளே."

ஆகவே, பக்த சிகாமணிகளே! தன் நிலை குறைந்து பெருமை அழியும் என்னும் அச்சமா? அல்லது சொன்ன சொல்லைக் காப்பாற்றமுடியாமல் மானம் போகும் நிலையா? எதற்கும் அஞ்சவேண்டா! "கோவிந்தா! கோவிந்தா!" என்று கதறுங்கள்; "அச்சுதா! அச்சுதா!" என்று அலறுங்கள்; அச்சம் அழியும்; மானம் நிலைக்கும்; ஆனந்தம் பெருகும்; கண்ணன் கைவிடான்; கருணை பொழிவான்; திண்ணம் திண்ணம்.

கண்ணன் கழலிணையே கதி

ஸ்ரீ:

ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹாய நம:

# ஸ்ரீ ந்ருஸிம்ஹ த்வாத்ரிம்சத் பீஜமாலா ஸ்தோத்ரம்

[இந்த ஸ்தோத்ரம் இதுவரை எங்கும் வெளியானதாகத் தெரியவில்லை. ஸ்ரீ ந்ருஸிம்ஹ பீஜாக்ஷரங்கள் முப்பத்திரண்டில் ஒவ்வொன்றையும் முறையே முதல் எழுத்தாக வைத்து 32 சுலோகங்களின் வடிவில் இந்த ஸ்தோத்ரம் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்ரத்தைக் குருபரம்பரையாகக் கேட்டவர்கள் மட்டுமே அறிவார்களென்றும், இதை ஜபிப்பவர்களுக்கு ஸகல க்ஷேமங்களும் உண்டாகின்றனவென்றும் சொல்லி, இந்த ஸ்தோத்ரத்தை லோக க்ஷேமத்திற்காக வெளியிடும்படி எம்மிடம் அளித்த புதுவை ஸ்ரீ உ. வே. வரகவி நடாதூர் வேங்கடாசார் ஸ்வாமிக்கு எமது க்ருதக்ஞதையைத் தெரிவித்து இங்கு இதை வெளியிடுகிறோம். இதை அனைவரும் படித்துப் பயனடைவோமாக.]

———

உத்கீதாட்யம் மஹாபீமம் த்ரிநேத்ரஞ்சோக்ரவிக்ரஹம் |
உஜ்வலம் தம் ஶ்ரியாஜுஷ்டம் ஶ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
நருஹரிம் பஜே || 1

க்ரந்தாந்தவேத்யம் தேவேசம் ககனாச்ரயவிக்ரஹம் |
கர்ஜனா த்ரஸ்தவிச்வாண்டம் ஶ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 2

வீதிஹோத்ரேக்ஷணம் வீரம் விபக்ஷக்ஷயதீக்ஷிதம் |
விச்வம் பரம் விரூபாக்ஷம் ஶ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 3

ரங்கநாதம் தயாநாதம் தீநபந்தும் ஜகத்குரும் |
ரணகோலாஹலம் தீரம் ஶ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 4

மந்த்ரராஜாஸநாரூடம் மார்த்தாண்டோஜ்ஜ்வல தேஜஸம் |
மணிரத்நகிரீடாட்யம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 5

ஹாஹா ஹூஹ்வாதி கந்தர்வை: ஸ்தூயமாந பதாம்புஜம் |
உக்ரரூபதரம் தேவம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 6

விதிவேதப்ரதம் வீரம் விக்நநாசம் ரமாபதிம் |
வஜ்ரகட்கதரம் தீரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 7

விஷ்ணுஸப்ததளஸ்தம்பம் துஷ்டராக்ஷஸ நாசநம் |
துர்நிரீக்ஷம் துராதர்ஷம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 8

ஜ்வலத்பாவகஸங்காசம் ஜ்வாலாமாலா முகாம்புஜம் |
தாரித்ரயநாசநம் ஸ்ரீதம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே|| 9

லம்பீஜம் தேவதாநாதம் தீர்க்கவ்ருத்த மஹாபுஜம் |
லக்ஷ்ம்யாலிங்கித வக்ஷஸ்தம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 10

தந்த்ரீபூத ஜகத்க்ருத்ஸ்நம் தர்மவைகுண்ட நாயகம் |
மந்த்ரஜாபகஸாந்நித்யம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 11

ஸர்வாண்டகோஸ மாலாட்யம் ஸர்வாண்டாந்தரவாஸிநம்|
அஷ்டாஸ்யகண்டபேரண்டம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 12

தோமராங்குஸவஜ்ராணும் ஸமதம்ஷ்ட்ரைர்முகை:ஸ்திதம் |
சத்ருக்ஷயகரம் வ்யாக்ரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 13

முநிமாநஸ ஸஞ்சாரம் புக்திமுக்திபலப்ரதம் |
ஹயாஸ்யம் க்ஞாநதாதாரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே|| 14

கம்சப்தகங்கணோபேதம் கமலாயதவோசநம் |
ஸர்வைச்வர்யப்ரதம் க்ரோடம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹ்ரிம் பஜே || 15

ந்ருலோகரக்ஷணபரம் பூதோச்சாடந தத்பரம் |
ஆஞ்ஜநேயமுகம் வீரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 16

ஸிதவர்ணம் தீர்க்கநாஸம் நாகாபரணபூஷிதம் |
கருடாஸ்யம் மஹாதீரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 17

ம்ஹம் ம்ஹம்ம்ஹம்சப்தஸஹிதம் மாநவாராதநோத்ஸுகம் |
பல்லூகவக்த்ரம் பீதிக்நம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 18

பீமாக்ஷநாஸிகோபேதம் வேதக்ரஹணதத்பரம் |
தரணீத்ருதமுஸ்தாங்கம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 19

ஷட்வக்த்ரபூஜிதாங்க்ர்யப்ஜம் த்ருஷ்டகோத்ருதமண்டலம் |
கோமலாங்கம் மஹாஸத்வம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே|| 20

ணங்காரகிங்கிணீஜாலம் க்ஞாநமூர்த்திம் தராபதிம் |
வராஹாங்க முதாராங்கம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே|| 21

பயக்நம் ஸர்வபூதாநாம் ப்ரஹ்லாதாபீஷ்டதாயிநம் | 1
ந்ரும்ஸிம்ஹஸ்தம்ப ஸம்போத்யம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 22

த்ரவ்யயாச்ஞாபரம் விப்ரம் பலிமாநமுஷம் ஹரிம் |
வாமநம் ரூபமாஸ்தாய ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே || 23

ம்ருத்யுரூபம் க்ஷத்ரியாணும் முக்தஸ்நிக்தமுகாம்புஜம் |
ஜாமதக்ந்யம் பரம் தேவம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 24

த்யும் சப்தயுக்தகோதண்டம் துஷ்டராவண மர்த்தநம் |
ராமம் கமலபத்ராக்ஷம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே|| 25

ம்ருதங்ககீதப்ரணவ ச்ரவணஸக்தமாநஸம் |
பலராமம் ஹலதரம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே || 26

த்யும் த்யும் த்யும் த்யும் வேணுநாதம் ப்ரம்ஹருத்ராதி
ஸேவிதம் |
யசோதாதநயம் க்ருஷ்ணம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 27

நளிநாக்ஷம் அக்நிரூபம் ம்லேச்சநாசநதத்பரம் |
ஜ்வாலாமாலாபூரிதாங்கம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 28

மாநாயகம் மஹாஸத்வம் மமாபீஷ்ட ப்ரதாயகம் |
மத்ரக்ஷணபரம் ஶாந்தம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே || 29

ம்ருத்யுடங்கார ஸம்யுக்தம் சார்ங்கதந்வாந மீச்வரம் |
ஸத்வஸ்த்ராபரணோபேதம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம்
ந்ருஹரிம் பஜே || 30

யந்நாமஸ்மரணாத்ஸர்வ பூதவேதாளராக்ஷஸா: |
சத்ரவ: ப்ரளயம்யாந்தி ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே || 31

ஹம்பீஜநாதம் ஸர்வேசம் ஶரணம் வரயாம் யஹம் |
உபாயபூதம் லக்ஷ்மீஶம் ஸ்ரீம் க்ஷ்மிரௌம் ஹ்ரீம் ந்ருஹரிம்
பஜே || 32

## பலச்ருதி

பாரத்வாஜக்ருதம் ஸ்தோத்ரம் மந்த்ரஜார்ணவஸம்பவம் |
ஸக்ருத்படநமாத்ரேண ஸர்வதுக்கவிநாசநம் ||
ராஜவச்வம் ஜகத்வச்யம் ஸர்வவச்யம் பவேத் த்ருவம் |
பூதப்ரேதபிஶாசாதி வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கரா : ||
தூராதேவ ப்ரணஶ்யந்தி ஸத்யம் ஸத்யம் ந ஸம்ஶய : |
வித்யார்த்தீ லபதே வித்யாம் தநார்த்தீ லபதே தநம் ||
ஸர்வார்த்தீ ஸர்வமாப்நோதி மோக்ஷார்த்தீ
மோக்ஷமாப்நுயாத் |
யம் யம் காமயதே சித்தம் தம் தம் ப்ராப்நோதி நிஶ்சயம் ||

---

## ஸ்ரீ ந்ருஸிம்ஹாநுஷ்டுப் மூலம்

உக்ரம்வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் |
ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம்||

---

# ஸ்ரீ மஹாலக்ஷ்மி கவசம்

[இந்த மஹாலக்ஷ்மி கவசத்தைத் தினந்தோறும் காலையில் ஜபம் செய்பவர்களுக்கு ஸகல ஸௌபாக்யங்களும் ஸகல காரிய ஸித்தியும் ஏற்படுகின்றன என்று பலச்ருதியில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்ரத்தை எல்லோரும் படித்துப் பயனடைவோமாக.]

ஓம்

மஹாலக்ஷ்ம்யா: ப்ரவக்ஷ்யாமி கவசம் ஸர்வகாமதம் |
ஸர்வபாப ப்ரசமனம் ஸர்வவ்யாதி நிவாரணம் ||

துஷ்டம்ருத்யுப்ரசமனம் துஷ்டதாரித்ரிய நாசனம் |
க்ரஹபீடா ப்ரசமனம் அரிஷ்ட ப்ரவிபஞ்சனம் ||

புத்ரபௌத்ராதி ஜனகம் விவாஹப்ரத மிஷ்டதம் ||
சோராரிஹாரி ஜகதாம் அகிலேப்ஸித கல்பகம் |

ஸாவதாநமநா பூத்வா ச்ருணு த்வம சுகஸத்தம ||
அநேகஜந்மஸம்ஸித்தி லப்யம் முக்திபலப்ரதம் ||

தநதாந்ய மஹாராஜ்ய ஸர்வஸௌபாக்யதாயகம் ||
ஸக்ருத்படநமாத்ரேண மஹாலக்ஷ்மீ : ப்ரஸீததி |

க்ஷீராப்திமத்யே பத்மாநாம் காநநே மணிமண்டபே ||
ரத்னஸிம்ஹாஸநே திவ்யே தந்மத்யே மணிபங்கஜே |

தந்மத்யே ஸுஸ்திதாம் தேவீம் மரீசிஜநஸேவிதாம் ||
ஸுஸ்நாதாம் புஷ்பஸுரபிம் குடிலாலக பந்தநாம் |

பூர்ணேந்துபிம்பவதநாம் அர்த்தசந்த்ர லலாடிகாம் ||
இந்தீவரேக்ஷணாம் காமாம் ஸர்வாண்ட புவநேச்வரீம் |

திலப்ரஸவ ஸுஸ்நிக்த நாஸிகாலங்க்ருதாம் ஸ்ரியம் ||
குந்தாவதாதரஸநாம் பந்தூகாதர பல்லவாம் |

தர்ப்பணாகார விமலாம் கபோலத்விதயோஜ்வலாம் ||
மாங்கல்யாபரணோபேதாம் கர்ணத்விதய ஸுந்தராம் |

கமலேசஸுபத்ராட்யே அபயம்ததீம் பரம் ||
ரோமராஜி லதாசாரு மக்நநாபிதலோதரீம் |

பட்டவஸ்த்ர ஸமுத்பாஸீம் ஸுநிதம்பாதி லக்ஷணாம் ||
காஞ்சநஸ்தம்பவிப்ராஜத் வரஜாநூரு சோபிதாம் |

ஸ்மரகாஹளிகாகர்வ ஹாரி ஜங்காம் ஹரிப்ரியாம் ||
கமடீப்ருஷ்டஸத்ருச பாதாப்ஜாம் சந்த்ரவந்நகாம் |

பங்கஜோதர லாவண்யாம் ஸுதலாங்க்ரி தலாச்ரயாம் ||
ஸர்வாபரண ஸம்யுக்தாம் ஸர்வலக்ஷணலக்ஷிதாம் |
பிதாமஹ மஹாப்ரீதாம் நித்யத்ருப்தாம் ஹரிப்ரியாம் ||
நித்யகாருண்யலளிதாம் கஸ்தூரீ லேபிதாங்கிகாம் |
ஸர்வமந்த்ரமயீம் லக்ஷ்மீம் ச்ருதிசாஸ்த்ர ஸ்வரூபிணீம் ||
பரப்ரம்ஹமயீம் தேவீம் பத்மநாப குடும்பிநீம் |
ஏவம் த்யாத்வா மஹாலக்ஷ்மீம் ய: படேத் கவசம் பரம் ||
மஹாலக்ஷ்மீ: சிர: பாது லலாடே மம பங்கஜா |
கர்ணத்வந்த்வம் ரமா பாது நயநே நளிநாலயா ||
நாஸிகா மவதாதம்பா வாசம் வாக்ரூபிணீ மம |
தந்தாநவது ஜிஹ்வாம் ஶ்ரீ : அதரோஷ்டம் ஹரிப்ரியா ||
சிபுகம் பாது வரதா கண்டம் கந்தர்வஸேவிதா |
வக்ஷ: குக்ஷிகரௌ பாயும் ப்ருஷ்டமவ்யாத் ரமா ஸ்வயம் ||
கட்யூருத்வயகம் ஜாநு ஜங்கே பாதத்வயம் சிவா |
ஸர்வாங்க மிந்த்ரியம் ப்ராணாந் பாயா தாயாஸஹாரிணீ ||
ஸப்ததாதூந் ஸ்வயஞ்ஜாதா ரக்தம் சுக்லம் மநோஸ்தி ச |
க்ஞாநம் புத்திர் மஹோத்ஸாஹாந் ஸர்வம் மே பாது பத்மஜா ||
மயா க்ருதந்து யத் தத்வை தத்ஸர்வம் பாது மங்களா |
மமாயுரங்ககாந் லக்ஷ்மீ: பார்யாபுத்ராம்ஸ்ச புத்ரிகா: ||
மித்ராணி பாது ஸததம் அகிலம் மே வரப்ரதா |
மமாரிநாசநார்த்தாய மாயாம்ருத்யுஞ்ஜயா பலம் |
ஸர்வாபீஷ்டந்து மே தத்யாத் பாது மாம் கமலாலயா |
ஸஹஜாம் ஸோதரஞ்சைவ சத்ருஸம்ஹாரிணீ வதூ: ||
பந்துவர்க்கம் பராசக்தி: பாது மாம் ஸர்வமங்களா |

## பலச்ருதி

ய இதம் கவசம் திவ்யம் ரமாயா : ப்ரயத: படேத் ||
ஸர்வஸித்தி மவாப்நோதி ஸர்வரக்ஷாம் ச சாச்வதீம் |
தீர்க்காயுஷ்மாந் பவேந் நித்யம் ஸர்வஸௌபாக்யசோபிதம் ||
ஸர்வஜ்ஞ: ஸர்வதர்ஶீ ச ஸுகிதஶ்ச ஸுகோஜ்வல : |
ஸுபுத்ரோ கோபதி: ஶ்ரீமாந் பவிஷ்யதி ந ஸம்சய: |
தத்க்ருஹே ந பவேத் ப்ரம்ஹந் தாரித்ர்ய துரிதாதிகம் |
நாக்நிநா தஹ்யதே கேஹம் ந சோராத்யைஶ்ச பீட்யதே ||
பூதப்ரேதபிஶாசாத்யா : த்ரஸ்தா தாவந்தி தூரத: |

லிகித்வா ஸ்தாபிதம் யந்த்ரம் தத்ர வ்ருத்திர் பவேத் த்ருவம்||
நாபம்ருத்யு மவாப்நோதி தேஹாந்தே முக்திமாந் பவேத் |
ஸாயம் ப்ராத: படேத் யஸ்து மஹாதநபதிர் பவேத் ||
ஆயுஷ்யம் பௌஷ்டிகம் மேத்யம் பாபம் துஸ்வப்நநாசனம் |
ப்ரஜ்ஞாகரம் பவித்ரஞ்ச துர்பிக்ஷாக்நி விநாசநம் ||
சித்தப்ரஸாத ஜநகம் மஹாம்ருத்யு ப்ரசாந்திதம் |
மஹாரோக ஜ்வரஹரம் ப்ரஹ்மஹத்யாதி சோதகம் ||
மஹாஸுக ப்ரதஞ்சைவ படிதவ்யம் ஸுகார்த்திபி: |
தநார்த்தி தநமாப்நோதி விவாஹார்த்தீ லபேத் வதூ: |
வித்யார்த்தீ லபதே வித்யாம் புத்ரார்த்தீ குணவத்ஸுதாந் |
ராஜ்யார்த்தீ லபதே ராஜ்யம் ஸத்யமுக்தம் மயா சுக ||
மஹாலக்ஷ்ம்யா: மந்த்ரஸித்தி: ஜபாத் ஸத்ய: ப்ரஜாயதே |
ஏவம் தேவ்யா: ப்ரஸாதேந சுக: கவச மாப்தவாந் ||
கவசாநுக்ரஹேணைவ ஸர்வாந் காமாநவாப்நுயாத் |
ஸர்வலக்ஷண ஸம்பந்நாம் லக்ஷ்மீம் ஸர்வேச்வரேஶ்வரீம் |
ப்ரபத்யே ஶரணம் தேவீம் பத்ம பத்ராக்ஷவல்லபாம் ||

ஓம் ஸ்ரீம் க்லீம் ஸௌ: ஶ்ரியை நம:

ஸ்ரீ மஹாலக்ஷ்மீ கவசம் ஸம்பூர்ணம்

---

# ஸ்ரீ லக்ஷ்ம்யஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம்

ஸ்ரீ தேவ்யுவாச—
தேவதேவ மஹாதேவ த்ரிகாலக்ஞ மஹேஶ்வர |
கருணாகர தேவேஶ பக்தாநுக்ரஹகாரக ||
அஷ்டோத்தர ஶதம் லக்ஷ்ம்யா : ஶ்ரோதுமிச்சாமி தத்வத: |

ஈஶ்வர உவாச—
தேவி ஸாது மஹாபாகே மஹாபாக்யப்ரதாயகம் |
ஸர்வைஶ்வர்யகரம் புண்யம் ஸர்வபாப ப்ரணாஶநம் ||
ஸர்வதாரித்ர்ய ஶமநம் ஶ்ரவணாத் புக்தி முக்திதம் |
ராஜவஶ்யகரம் திவ்யம் குஹ்யாத் குஹ்யதமம் பரம் ||

துர்லபம் ஸர்வதேவாநாம் சதுஷ்ஷஷ்டி கலாஸ்பதம் |
பத்மாதீநாம் வராந்தாநாம் நிதீநாம் நித்யதாயகம் ||

ஸமஸ்ததேவ ஸம்ஸேவ்யம் அணிமாத்யஷ்ட ஸித்திதம் |
கிமத்ர பஹுநோக்தேந தேவீ ப்ரத்யக்ஷ தாயகம் ||

தவ ப்ரீத்யாத்ய வக்ஷ்யாமி ஸமாஹிதமநா : ஶ்ருணு |
அஷ்டோத்தரஶதஸ்யாஸ்ய மஹாலக்ஷ்மீஸ்து தேவதா ||

க்லீம் பீஜ பதமித்யுக்தம் ஶக்திஸ்து புவநேஶ்வரீ |
அங்கந்யாஸ: கரந்யாஸ: *ஶ்ராமித்யாதி ப்ரகீர்த்தித: ||

---

## த்யாநம்

வந்தே பத்மகராம் ப்ரஸன்னவதநாம்
ஸௌபாக்யதாம் பாக்யதாம்
ஹஸ்தாப்யாமபயப்ரதாம்
மணிகணைர் நாநாவிதைர் பூஷிதாம் |
பக்தாபீஷ்டபலப்ரதாம்
ஹரிஹர ப்ரஹ்மாதிபிஸ் ஸேவிதாம்
பார்ஶ்வே பங்கஜ சங்க பத்ம
நிதிபிர் யுக்தாம் ஸதா சக்திபி: ||

ஸரஸிஜநயநே ஸரோஜஹஸ்தே
தவளதராம்ஶுக கந்த மால்யசோபே |
பகவதி ஹரிவல்லபே மனோஜ்ஞே
த்ரிபுவனபூதிகரி ப்ரஸீத மஹ்யம் ||

ஓம்

ப்ரக்ருதிம் விக்ருதிம் வித்யாம் ஸர்வபூத ஹிதப்ரதாம் |
ஶ்ரத்தாம் விபூதிம் ஸுரபிம் நமாமி பரமாத்மிகாம் ||

வாசம் பத்மாலயாம் பத்மாம்
ஶுசிம் ஸ்வாஹாம் ஸ்வதாம் ஸுதாம் |
தந்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம்
நித்யபுஷ்டாம் விபாவரீம் ||

* 'ஸ இத்யாதி' என்றும் பாடம்.

அதிதிம் ச திதிம் தீப்தாம் வஸுதாம் வஸுதாரிணீம் |
நமாமி கமலாம் *க்ஷாந்திம் க்ஷமாம் க்ஷீரோதஸம்பவாம் ||
§அநுக்ரஹப்ரதாம் புத்திம் அநகாம் ஹரிவல்லபாம் |
அஶோகாமம்ருதாம் தீப்தாம் லோகஶோக விநாஶிநீம் ||
நமாமி தர்மநிலயாம் கருணாம் லோகமாதரம் |
பத்மப்ரியாம் பத்மஹஸ்தாம் பத்மாக்ஷீம் பத்மஸுந்தரீம் ||
பத்மோத்பவாம் பத்மமுகீம் பத்மநாபப்ரியாம் ரமாம் |
பத்மமாலாதராம் தேவீம் பத்மிநீம் பத்மகந்திநீம் ||
புண்யகந்தாம் ஸுப்ரஸந்நாம் ப்ரஸாதாபிமுகீம் ப்ரபாம் |
நமாமி சந்த்ரவதநாம் சந்த்ராம் சந்த்ரஸஹோதரீம் ||
சதுர்ப்புஜாம் சந்த்ரரூபாம் இந்திரா மிந்துசீதளாம் |
ஆஹ்லாதஜநநீம் புஷ்டிம் †ஹிதாம் ஶிவகரீம் ஸதீம் ||
விமலாம் விஶ்வஜநநீம் துஷ்டிம் தாரித்ர்யநாசிநீம் |
ப்ரீதிபுஷ்கரிணீம் ஶாந்தாம் ஶுக்லமால்யாம்பராம் ஶ்ரியம் ||
பாஸ்கரீம் பில்வநிலயாம் வராரோஹாம் யஶஸ்விநீம் |
வஸுந்த்ரா முதாராங்காம் ஹரிணீம் ஹேமமாலிநீம் ||
தநதாந்யகரீம் ஸித்திம் ஸ்த்ரைணஸௌம்யாம் சுபப்ரதாம் |
ந்ருபவேஶ்ம கதாநந்தாம் வரலக்ஷ்மீம் வஸுப்ரதாம் ||
ஶுபாம் ஹிரண்யப்ராகாராம் ஸமுத்ர தநயாம் ஜயாம் |
நமாமி மங்களாம் தேவீம் விஷ்ணுவக்ஷஸ் ஸ்தலஸ்திதாம் ||
விஷ்ணுபத்நீம் ப்ரஸந்நாக்ஷீம் நாராயணஸமாச்ரிதாம் |
தாரித்ர்யத்வம்ஸிநீம் தேவீம் ஸர்வோபத்ரவ வாரிணீம் ||
நவதுர்காம் ‡மஹாலக்ஷ்மீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் |
த்ரிகாலக்ஞாந ஸம்பந்நாம் நமாமி புவநேச்வரீம் ||

லக்ஷ்மீம் க்ஷீரஸமுத்ரராஜதநயாம்
ஸ்ரீரங்க தாமேஶ்வரீம்
தாஸீபூத ஸமஸ்ததேவ வநிதாம்
லோகைக தீபாங்குராம் |
ஸ்ரீமந்மந்த கடாக்ஷலப்த விபவ
ப்ரஹ்மேந்த்ரகங்காதராம்
த்வாம் த்ரைலோக்யகுடும்பிநீம்
ஸரஸிஜாம் வந்தே முகுந்தப்ரியாம் ||

* 'காந்தாம்' என்றும் பாடம்.
§ 'அநுக்ரஹபதாம்' என்றும் பாடம்.
† 'ஶிவாம்' என்றும் பாடம்.
‡ 'மஹாகாளீம்' என்றும் பாடம்.

மாதர் நமாமி கமலே கமலாயதாக்ஷி
ஸ்ரீவிஷ்ணு ஹ்ருத்கமலவாஸிநி விச்வமாத: |
க்ஷீரோதஜே கமலகோமல கர்ப்ப கௌரி
லக்ஷ்மி! ப்ரஸீத ஸததம் நமதாம் ஶரண்யே ||

த்ரிகாலம் யோ ஜபேத் வித்வாந்
ஷண்மாஸம் விஜிதேந்த்ரிய :|
தாரித்ர்ய த்வம்ஸநம் க்ருத்வா
ஸர்வமாப்நோதி யத்நத: ||

தேவீநாமஸஹஸ்ரேஷு புண்யமஷ்டோத்தரம் ஶதம் |
யேந ஶ்ரியமவாப்நோதி கோடிஜந்ம தரித்ரத: ||
ப்ருகுவாரே ஶதம் தீமாந் படேத் வத்ஸரமாத்ரகம்|
அஷ்டைஶ்வர்ய மவாப்நோதி குபேர இவ பூதலே ||
தாரித்ர்ய மோசநம் நாம ஸ்தோத்ரமம்பாபரம் ஶதம் |
யேந ஶ்ரியமவாப்நோதி கோடிஜந்ம தரித்ரத: ||
புக்த்வா து விபுலாந் போகாந் அஸ்யாஸ்ஸாயுஜ்ய
மாப்நுயாத் |
ப்ராத: காலே படேந் நித்யம் ஸர்வதுக்கோபஶாந்தயே
படம்ஸ்து சிந்தயேத் தேவீம் ஸர்வாபரண பூஷிதாம் ||

———

ஸ்ரீரஸ்து

# ஸ்ரீ லக்ஷ்ம்யஷ்டோத்தர
# சத நாமாவளி :

[கீழ்க்கண்ட ஒவ்வொரு நாமாவின் முன்னால் 'ஓம்' என்றும் பின்னால் 'நம:' என்றும் சேர்த்துச் சொல்ல வேண்டும்.]

1. ப்ரக்ருத்யை 2. விக்ருத்யை 3. வித்யாயை 4. ஸர்வபூத ஹிதப்ரதாயை 5. ஶ்ரத்தாயை 6. விபூத்யை 7. ஸுரப்யை 8. பரமாத்மிகாயை 9. வாசே 10. பத்மாலயாயை 11. பத்மாயை 12. ஶுசயே 13. ஸ்வாஹாயை 14. ஸ்வதாயை 15. ஸுதாயை 16. தந்யாயை 17. ஹிரண்மய்யை 18. லக்ஷ்ம்யை 19. நித்யபுஷ்டாயை 20. விபா

வர்யை 21. அதித்யை 22. தித்யை 23. தீப்தாயை 24. வஸுதாயை 25. வஸுதாரிண்யை 26 கமலாயை 27. க்ஷாந்த்யை 28 க்ஷமாயை 29. க்ஷீரோதஸம்பவாயை 30. அனுக்ரஹப்ரதாயை 31. புத்தயே 32 அநகாயை 33. ஹரிவல்லபாயை 34. அஶோகாயை 35. அம்ருதாயை 36. தீப்தாயை 37. லோகஶோக விநாஶிந்யை 38. தர்மநிலயாயை 39. கருணாயை 40 லோகமாத்ரே 41. பத்மப்ரியாயை 42. பத்மஹஸ்தாயை 43 பத்மாக்ஷ்யை 44. பத்மஸுந்தர்யை 45. பத்மோத்பவாயை 46. பத்மமுக்யை 47. பத்மநாபப்ரியாயை 48. ரமாயை 49. பத்மமாலாதராயை 50. தேவ்யை 51. பத்மிந்யை 52. பத்மகந்திந்யை 53. புண்யகந்தாயை 54. ஸுப்ரஸந்நாயை 55. ப்ரஸாதாபிமுக்யை 56. ப்ரபாயை 57. சந்த்ரவதநாயை 58. சந்த்ராயை 59. சந்த்ர ஸஹோதர்யை 60 சதுர்புஜாயை 61. சந்த்ரரூபாயை 62. இந்திராயை 63. இந்துஶீதலாயை 64. ஆஹ்லாத ஜநந்யை 65. புஷ்ட்யை 66. ஹிதாயை 67. ஶிவகர்யை 68. ஸத்யை 69 விமலாயை 70. விஶ்வஜநந்யை 71. துஷ்ட்யை 72. தாரித்ர்ய நாஶிந்யை 73. ப்ரீதிபுஷ்கரிண்யை 74. ஶாந்தாயை 75. ஶுக்லமால்யாம்பராயை 76. ஶ்ரியை 77. பாஸ்கர்யை 78. பில்வ நிலயாயை 79. வராரோஹாயை 80. யஶஸ்விந்யை 81. வஸுந்தராயை 82. உதாராங்காயை 83 ஹரிண்யை 84. ஹேமமாலிந்யை 85. தநதாந்யகர்யை 86. ஸித்தயே 87. ஸ்த்ரைண ஸௌம்யாயை 88 ஶுபப்ரதாயை 89. ந்ருபவேஶ்மகதாநந்தாயை 90. வரலக்ஷ்ம்யை 91. வஸுப்ரதாயை 92. ஶுபாயை 93. ஹிரண்ய ப்ராகாராயை 94. ஸமுத்ர தநயாயை 95. ஜயாயை 96. மங்களதேவதாயை 97. விஷ்ணுவக்ஷஸ் ஸ்தலஸ்திதாயை 98. விஷ்ணுபத்ந்யை 99. ப்ரஸந்நாக்ஷ்யை 100. நாராயண ஸமாஶ்ரிதாயை 101. தாரித்ர்ய த்வம்ஸிந்யை 102. தேவ்யை 103. ஸர்வோபத்ரவ வாரிண்யை 104. நவதுர்காயை 105. மஹாலக்ஷ்ம்யை 106. ப்ரஹ்ம விஷ்ணுஶிவாத்மிகாயை 107. த்ரிகாலஜ்ஞாநஸம்பந்நாயை 108. புவநேஶ்வர்யை.

ஸ்ரீ லக்ஷ்ம்யஷ்டோத்தரஶதநாமாவளி: ஸமாப்தா.

ஶ்ரியை நம :

# ஸ்ரீ கோமளா தண்டகம்

ஸ்ரீ கோமளா தண்டகம் என்னும் கத்யரூபமான இந்த ஸ்தோத்ரம் திருக்குட ந்தை (கும்பகோணம்) ஸ்ரீ ஆராவமுதனின் திருத்தேவியான ஸ்ரீகோமளவல்லித் தாயாரின் ஸ்வரூப ரூப கல்யாண குண விபவங்களை வர்ணிக்கும் ஸ்தோத்ரமாகும். இந்த தண்டகம் ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி திருக்குடந்தை மஹாதேசிகன் அருளியதென்று பெரியோர்கள் சொல்லுவர்.

காளிதாஸ மஹாகவியினுல் இயற்றப்பட்ட ச்யாமளா தண்டகத்தை ஞாபகப்படுத்தும் வகையில் கோமளா தண்டகமென்ற இந்த ஸ்தோத்ரம் அழகும் - நயமும் - அர்த்தபுஷ்டியும் உள்ள சொற்களில் அமைந்துள்ளதெனில் மிகையாகாது.

இந்த ஸ்தோத்ரத்தை எல்லோரும் பாராயணம் செய்து ஸ்ரீ ஆராவமுதன், ஸ்ரீ கோமளவல்லித் தாயார் அநுக்ரஹம் பெறுவோமாக.

---

ஜய து3க்3த4ாப்3தி4 தநயே
ஜய ஶார்ங்க3த4ரப்ரியே ||
ஜய காருண்ய ஸூரபே4
ஜய லாவண்ய வாரிதே4 ||

## முதல் சரணம்

ஜய ஜய ஜய தீ3வ்யதி3ந்தி3வர ச்ச2ாய கூலங்கஷ ஸ்யந்தி3 காலிந்தி3காரமந்த3 மந்த3ாநிலோத3ஞ்சி வீசீஸமீசீந வேணீப4வத் கேஶ பாஶாதிதி2பூ4த பாதே2ாத4ரே !

பீதவாஸோத4ரே! பி3ம்ப3 ஶோணாத4ரே !

ஜ்ரும்ப4மாணாம்ருதாபீ3ஶூ பி4ம்ப3ாயுதேநாஶூ ஸம்ப்ராப்த ஸௌந்த3ர்ய வக்த்ராரவிந்தே3 !

த3ரஸ்பந்த3 பக்ஷ்மத்3வயீ பக்ஷ ஸம்லக்ஷ்ய சக்ஷூர் மிலிந்தே3 !

ஸூத4ா ஸத்4ர்யுகு3க்திச் ச2லோத்3யந் மரந்தே3 !
கி3ரம் தே3ஹி தே3வீடி3தும் த்வாபி4வந்தே3 !
ரத3ஸ்பர்தி4 குந்தே3நுரஜ்யந் முகுந்தே3 !

ஶரத்பர்வ சந்த்3ர க்ஷரச்சந்த்3ரிகாரக2ர்வ க3ர்வைக ஸர்வங்கஷஸ்பா2ர ரோசிஸ் ஸ்பு2ரந்மந்த3ஹாஸே ! லஸச்சந்த்3ர

ஹாஸே ! தநீயோநதப்4ரூயுகீ3யோபமாநீய தா3மோத3ர மாநேஷு சஞ்சச் ச3ராஸே ! த்3யாஸார ஸாரோல்லஸத் த்3ருக்3விலாஸே ! ததோ ப4க்திபா4ஜாம் க்ருதாம்ஹோ நிராஸே !

மணீமண்ட3ல ப்ரோல்லஸத் குண்ட3லே ! தஜ்ஜிதோ த3க்3ர ப4ாப4ாநுமந் மண்ட3லே !

கம்பு3து3ஷ்ப்ராப கண்ட2ாப4ாலங்க்ருதே ! கம்ஸஜித் ஸத்க்ருதே ! கஞ்ஜ க3ர்ப்ப4ஸ்தி2தே !

கும்பி4கும்ப4 ப்ரதித்3வந்த்3வி வக்ஷோருஹே ! ப3ாஹு த3ம்போ4ல்லஸத் கல்பகாநோகஹே !

ஶாதகும்ப4த்3யுதே ! ஸாது4கு3ம்ப4ஸ்துதே !

ஹே ஸரஸ்வத்ஸுதே !

யோகி3ஹருத்3து3ர்க்3ரஹாகாரமத்4யே ! மஹாபே4ாகி3 மத்4யே ஶயாதீ4ஶவக்ஷஸ் ஸ்த2லாவாஸ ஶீலே஽கி2லாஶாஸ்ய லீலே ! கலாபுஷ்கலே !

மஞ்ஜு ஶிஞ்ஜாந மஞ்ஜீர சஞ்சத்பதே3 ! கிஞ்ச கஞ்ஜத் பதே3 ! ஸர்வ ஸம்பத்ப்ரதே3 ||

## இரண்டாவது சரணம்

கமிதுருரஸி கௌஸ்துப4ாப4ாபரிவாஹ ப3ாலாதபோத3ார பாத3ாரவிந்த3ப்ரபே4 ! பாஹி பத்3மே ஶுபே4 !

பத்3மஸம்லாஞ்சி2தே ! ப்ரத்தஸத்3வாஞ்சி2தே ! ப4க்த லோகாஞ்சிதே !

வேத3வேத3ாந்த வேத்3யே஽ந்ய து3ர்நிக்3ரஹோதீ3ர்ண தௌ3ஷ்க3த்யவைத்3யேzநவத்3யே !

வதூ4மாத்ரது3ஷ்ப்ராப ஸத்3ரூபதே4யே ! ஜக3த்பாவயந் நாமதே4யே ! ஹரேரூபதே4யாநுரூபே ! த்3ருஶா நிர்ஜித த்ரஸ்த ஸத்3ரூபதே4யே !

வபுஶ்ஶோப4யாதே4ாப4வஜ் ஜாதரூபேzதி லாவண்ய ராமா ஸமாஜாபி4ராமே ! ரமே !

மஞ்ஜு கஞ்ஜஸ்பு2ரத்பாணி பாதே2ாருஹே ! பம்ப்4ர மத்3ப3ம்ப4ரப்ரேயஸீ பாளிகாமோஹ விஶ்ராணந ப்ரக்ரியை காக்3ர புங்க2ாநு புங்க2ாநு த4ாவத் கடாக்ஷப்ரவாஹே ! ம்ருணுல ப்ரதிஸ்பர்தி4 ப3ாஹே !

லலாடே லஸச்சித்ரகீ சக்ரித ந்யங்கு நாபே4 ! ஸுத4ா யாஸ் ஸநாபே4zநுப4ாவா துலாவிப்ரப4ாஸ்வத் துலாகோடி யுக்தேzம்ருதஸ்யந்தி3 ஸூக்தே !

அபி4வந்த3ாரு மந்த3ார ஸந்தாநஶாகே2! விஶாகே2ஶ லோகேஶ மேகே4ஶ யாநாதி3 நாநா தி3வௌகோபி4ராராதி4தே! ப4ாரதீ நந்தி3தே! பார்வதீநந்தி3தே! வாஸவீ ஸேவிதே! கா ஸமா தே3வி தே ||

மூன்றுவது சரணம்

அயி ஜநநி த்3யாஸுத4ாஸார ஸம்ப்லாவிதாபாங்க3 ஸம்ப4ாவிதோ யஸ்த்வயாவாஸ பூ4மி: ஶ்ரியாநந்ய ஸாத4ாரணீபூ4தயாஶ்லிஷ்யதே தாவத3த்4யுஷ்யதே |

தத்3க்3ருஹத்3வார முத்3யந்மதை3 ரத்3ரிவத்3ப3ந்து4ரை ரப்யுத3ஞ்சந் மருத்3ப3ாந்த4வைஸ் ஸைந்த4வைரம்ஶுமந் மண்ட3லீ நந்த3நைஸ்யந்த3நை : பத்திபி4 : ப்ராப்தஸம்பத்திபி4ர் விஸ்ம்ருதாபத்திபி4ஸ் ஸம்ஹதிர் வைரிணாம் தேந ஸஞ்ஜீயதே |

ஜாயதே தத்3த்3விஷாம் ப்ராணநம் காநநம் தஸ்ய சேத3ாநநம் ப4ாரதீ மஞ்ஜுப4த்3ராஸநம் ஶாஸநம் |

தஸ்ய சேத் ஸர்வஸர்வம்ஸஹாதீ4ஶ சூட3ாயதே|

தத்3வஶீ போ3ப4வீத்யுர்வஶீ பூ4யதே, தத்பரீரம்ப4 ஸம்ரம்ப4யா ரம்ப4யா,

வாஹநம் தஸ்ய சைராவதோ வாத2வா வாரிதே3ா, கீ3யதே| தத்3யஶஸ்ஸர்வ ஹாஹாதி3க3ந்த4ர்வவர்கை3ரலம் புஷ்கலம் |

தத்3யஶஸ் ஸ்ரோதஸா ஸர்வதி3க் பூர்யதே |

தஸ்ய ஸித்4யந்தி நாநாபுமர்த2ா : விநா தேந கே வா ஸமர்த்த2ா ஜநா: கிம் பரம் வர்ண்யதே |

யத்தவாபாங்க3தோ விஶ்வமேதச் சரஸ்த2ாவராகார மத்4யேத4தே |

பாஹி பத்3மாலயே! பாஹிபத்3மாநநே! பாஹி காருண்ய ஸிந்தே4ா !

நமஸ்தே ஸமஸ்தேப்ஸிதார்த்த2 ப்ரத3ாநைகதாநைக ஹஸ்தே! முஹுஸ்தே புநஸ்தே நமஸ்தே ஸமஸ்தே நமஸ்தே நமஸ்தே நம: |

ஸாமாதி3 ஶ்ருதிகே4ாஷிதாத்மவிப4வா
    ஹேமாரவிந்த3ாஸநா
த4ாமாத4 : க்ருத தி3வ்யகாஞ்சந ருசிஸ்
    ஸோமாபி4ராமாநநா |

ராமா ஸார்ங்க3த4ரஸ்ய கோமலலதா
நாமாஸ்து பூ4மௌ ஸதாம்
ஸீமா ஸத்3கு4ண ஸம்பத3ா மவிரத
க்ஷேமாய ப4ாமாமணி: ||

பத்யு: ப்ரப4ாவலயி கௌஸ்துப4வைஜயந்தீ
ஸ்ரீவத்ஸபூ4ஷணமுர: பரிபூ4ஷயந்தீ |
து3க்த4ாம்பு3ராஸி குலமங்க3ள வைஜயந்தி
ஸ்ரீ கோமளாஸ்து ஸததம் ஸுகு3ணேர் ஜயந்தீ||

ஸ்ரீ கோமளா தண்டகம் ஸம்பூர்ணம்.

---

## ஸ்ரீ வேங்கடாத்வரியின் ஸ்ரீ லக்ஷ்மீஸஹஸ்ரம்

இன்றைக்குச் சுமார் 350 வருஷங்களுக்கு முன் காஞ்சீபுரத்தருகில் செய்யாற்றங் கரையிலுள்ள அரசாணிபாலை என்ற அக்ரஹாரத்தில் அவதரித்தவர் ஸ்ரீ வேங்கடாத்வரி என்னும் மஹா வித்வான். உலகிலுள்ள நன்மை தீமைகளை கந்தர்வர்கள் இருவர் வாயிலாக வெகு சமத்காரமாக வெளியிடுகிறது இவருடைய 'விச்வ குணாதர்ச சம்பு' என்ற தனிப் பெருங் காவியம்.

இவருக்கு ஒரு சமயம் சரீரத்தில் நலியுண்டாக, இவர் திருப்பதி திருவேங்கடமுடையானின் தேவியரான ஸ்ரீ பத்மாவதித் தாயாருடைய வைபவத்தைப்பற்றி லக்ஷ்மீ ஸஹஸ்ரம் என்ற ஸ்தோத்ரத்தை எழுதி தேவியின் அருளால் குணம் பெற்றார். கவிதைத் திறனும் பக்திப் பெருக்கும் ததும்பும் இந்த ஸ்தோத்ரத்திலிருந்து எடுத்த கீழ்க்கண்ட சுலோகங்களை நாம் படித்துப் பயனடைவோமாக.

— பதிப்பாசிரியர்.

## ஸ்ரீ லக்ஷ்மீஸஹஸ்ரம்

1. அஸத்3ருஸ மருணாப்3ஜத்3ருஸம்
ப்ரஸ்விந்ந பயோத4ரஸ்பு2ரந்மூர்த்திம் |
மநஸி த3தீ4மஹி ஸததம்
மாதாரம் மாதரம் ச லோகாநாம் ||

— ஆரம்பஸ்தபகம் சுலோகம் - 2.

2. ஶய்யாக்3ருஹம் தவ பிதாஜக3தாம் நியந்து:
ப்4ராதாத்3ருகே3க இதர: புநரங்க3பூ4ஷா |
வக்ஷஸ்யமுஷ்ய வரதே3 த்வமவஸ்தி2தாதத்3
வால்லப்4யமம்ப3 ப4வதீ3யமநந்யலப்4யம் |

— வக்ஷஸ்தலாவஸ்தாநஸ்தபகம் சுலோகம் - 4

3. விஹிதம் ஜஹதம் விவேகஹாநாத்
அஹிதம் கர்ம ச நித்யமாசரந்தம் |
அபயாதகு3ணம் ஹ்ரிப்ரியே மாம்
க்ருபயா கேவலயைவ பாலயேதா2: ||

— காருண்யஸ்தபகம் சுலோகம் - 17

4. க்ஷமாகுமாரி க்ஷணமீக்ஷணம் த்வம்
யத்ருச்ச2யா ந்யஸ்யஸி யத்ரஜந்தௌ |
ஸ ஈக்ஷுணநாம் த்ரய மஷ்டகம் வா
ஸஹஸ்ரகம் வா ஸஹஸா த3த4ாதி ||

— கடாக்ஷஸ்தபகம் சுலோகம் - 2

5. வல்லீதமாலமிவ வித்3யுதி3வாம்பு3வாஹம்
மாஹேந்த்3ரநீலப4வநம் மணிதீ3பிகேவ |
இந்தோ3: கலேவ க3க3நாங்க3ணமிந்தி3ரேத்வம்
ஆஶ்லிஷ்ய ஶௌரிமயஸே மஹதீ மபி4க்2யாம் ||

— ச்ருங்காரஸ்தபகம் சுலோகம் - 49

6. த4நபதி புருஹூதஸ்தா2ணு வேதா4 முகா2நாம்
அபிச த3த4தி ஶாபம் ஸம்பத3: ஸாம்பராயம் |
இதி க3திமவபு3த்3த்4யாப்யாதி2 காமாபி4 லாஷாத்
அஜஹத3க4ஶதம் மாம் ரக்ஷமாத: க்ஷமாத: ||

— க்ஷாந்திஸ்தபகம் சுலோகம் - 11

7. ந ப3ஹூந் ப3ஹூ மந்மஹே மநூந்
நச வாசோ ஜரதீரதீ4மஹே |
ப்ரயதா: ப்ரயதாமஹே வயம்
தவ நாம்நாம் ஹரிபத்நி! கீர்த்தநே ||

— நாமவைபவஸ்தபகம் சுலோகம் - 12

8. ஹ்ருதஸூக2வாரிஜநிலயம்
வாரிஜநிலயம் ரமாபி4தா4ம் ஜ்யோதி: |
ஹ்ருத3ய ஸதா3 நம மஹிதம்
ந மம ஹிதம் ததி3தரேஷு பதநம் தே ||

— சித்ரஸ்தபகம் சுலோகம் - 54

9. ஹ்ரீதோபபதே³ஶ கு³ருபத்நி க்ருதாக³ஸோ மே
கே³ாப்த்ரீ த்வமேவ ப⁴வதாத் ப⁴வதாபப⁴ாஜ:|
ஆத்மாவநே஽ப்யகுஶலைரபரை : ஸுரை : கிம்
ப³த்³த⁴: ஸ்வயம் கிமு விமோசயிதா ப³தாந்யம்||
— பலஸ்தபகம் சுலோகம் - 6

---

# புருஷஸூக்தம்

ஹரி: ஓம்

ஸஹஸ்ர சீர்ஷாபுருஷ:, ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத் |
ஸபூமிம் விச்வதோ வ்ருத்வா, அத்யதிஷ்டத்தசாங்குலம் || 1
புருஷ ஏவேதக்ம் ஸர்வம், யத்பூதம் யச்சபவ்யம் |
உதாம்ருதத்வஸ்யேஶாந:, யதந்நே நாதிரோஹதி || 2
ஏதாவாநஸ்ய மஹிமா, அதோ ஜ்யாயாக்ம்ஶ்ச பூருஷ: |
பாதோஸ்ய விச்வா பூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி || 3
த்ரிபாதூர்த்வ உதைத் புருஷ:, பாதோஸ்யேஹாபவாத்புந:|
ததோ விஷ்வங் வ்யக்ராமத், ஸாசநாநசநே அபி || 4
தஸ்மாத் விராடஜாயத, விராஜோ அதி பூருஷ: |
ஸஜாதோ அத்யரிச்யத, பஶ்சாத் பூமிமதோபுர: || 5
யத்புருஷேண ஹவிஷா, தேவாயஜ்ஞமதந்வத |
வஸந்தோ அஸ்யாஸீதாஜ்யம், க்ரீஷ்ம இத்மஶ்ஶரத்தவி:|| 6
ஸப்தாஸ்யாஸந் பரிதய:, த்ரிஸ்ஸப்த ஸமித: க்ருதா: |
தேவாயத் யக்ஞம் தந்வாநா:, அபத்நந் புருஷம் பஶும் || 7
தம் யஜ்ஞம் பர்ஹிஷி ப்ரௌக்ஷந், புருஷம் ஜாதமக்ரத: |
தேந தேவா அயஜந்த, ஸாத்யா ருஷயஶ்சயே || 8
தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத:, ஸம்ப்ருதம் ப்ருஷதாஜ்யம்|
பஶூகுஸ் தாகுஶ்சக்ரே வாயவ்யாந், ஆரண்யாந்
க்ராம்யாஶ்சயே || 9
தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத:, ருசஸ்ஸாமாநி ஜஜ்ஞிரே |
சந்தாக்ம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத், யஜுஸ்தஸ்மாதஜாயத|| 10
தஸ்மாதஶ்வா அஜாயந்த ஏகேசோ பயாதத: ||
காவோஹ ஜஜ்ஞிரே தஸ்மாத், தஸ்மாஜ்ஜாதா அஜாவய: ||
யத்புருஷம் வ்யதது:, கதிதா வ்யகல்பயந் |
முகம் கிமஸ்ய கௌ பாஹூ, காவூரு பாதாவுச்யேதே || 12
ப்ராஹ்மணோஸ்ய முகமாஸீத், பாஹூ ராஜந்ய: க்ருத: |
ஊரூ ததஸ்ய யத்வைஶ்ய:, பத்ப்யாக்ம் சூத்ரோ அஜாயத ||
சந்த்ரமா மநஸோஜாத:, சக்ஷோஸ்ஸூர்யோ அஜாயத |
முகாதிந்த்ரஶ்சாக்நிஶ்ச, ப்ராணாத் வாயுரஜாயத || 14

நாப்யா ஆஸீதந்தரிக்ஷம் ஶீர்ஷ்ணோத்யௌஸ் ஸமவர்த்தத|
பத்ப்யாம் பூமிர்திஶஶ்ரோத்ராத், ததாலோகாக்ம்
அகல்பயந் || 15
வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம், ஆதித்யவர்ணம்
தமஸஸ்து பாரே ||
ஸர்வாணி ரூபாணி விசித்யதீர:, நாமாநி க்ருத்வாபிவதந்
யதாஸ்தே || 16
தாதா புரஸ்தாத்யமுதாஜஹார சக்ர: ப்ரவித்வாந் ப்ரதி
ஶஶ்சதஸ்ர: |
தமேவம் வித்வாநம்ருத இஹபவதி, நாந்ய: பந்தா அயநாய
வித்யதே || 17
யஜ்ஞேந யஜ்ஞ மயஜந்த தேவா:, தாநிதர்மாணி ப்ரதமாந்
யாஸந் |
தேஹநாகம் மஹிமாநஸ்ஸசந்தே, யத்ரபூர்வே ஸாத்யாஸ்
ஸந்தி தேவா: | 18

---

அத்ப்யஸ்ஸம்பூத: ப்ருதிவ்யை ரஸாச்ச, விஶ்வகர்மணஸ்
ஸமவர்த்ததாதி |
தஸ்ய த்வஷ்டா விதததத்ரூபமேதி, தத்புருஷஸ்ய விச்வ
மாஜாநமக்ரே || 1
வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம், ஆதித்யவர்ணம் தமஸ:
பரஸ்தாத் |
தமேவம் வித்வாநம்ருத இஹபவதி, நாந்ய: பந்தா வித்ய
தே஽யநாய || 2
ப்ரஜாபதிஶ்சரதி கர்பே அந்த:, அஜாயமாநோ பஹுதா
விஜாயதே |
தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம், மரீசீநாம் பதமிச்சந்தி
வேதஸ: || 3
யோ தேவேப்ய ஆதபதி, யோதேவாநாம் புரோஹித: |
பூர்வோயோ தேவேப்யோஜாத:, நமோ ருசாய ப்ராஹ்மயே
ருசம் ப்ராஹ்மம் ஜநயந்த:, தேவா அக்ரே ததப்ருவந் |
யஸ்த்வைவம் ப்ராஹ்மணோ வித்யாத், தஸ்ய தேவா
அஸந்வஶே || 5
ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ அஹோராத்ரே
பார்ஶ்வே |
நக்ஷத்ராணி ரூபம்| அச்விநௌவ்யாபதம்| இஷ்டம்மநிஷாண|
அமும் மநிஷாண | ஸர்வம் மநிஷாண || 6

---

ஸஹஸ்ரசீர்ஷம் தேவம் விஶ்வாக்ஷம் விஶ்வ ஶம்புவம் |
விஶ்வம் நாராயணம் தேவமக்ஷரம் பரமம் ப்ரபும் ||
விஶ்வத: பரமம் நித்யம் விஶ்வம் நாராயணக்ம் ஹரிம் |
விஶ்வமேவேதம் புருஷஸ்தத் விஶ்வ முபஜீவதி ||
பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரக்ம் ஶாஶ்வதக்ம் ஶிவமச்யுதம்|
நாராயணம் மஹாஜ்ஞேயம் விஶ்வாத்மாநம் பராயணம் ||
நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:|
நாராயண பரோஜ்யோதி ராத்மா நாராயண: பர: |
யச்ச கிஞ்சிஜ் ஜகத்யஸ்மிந் த்ருஶ்யதே ஶ்ரூயதேபி வா |
அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித: ||
அநந்தமவ்யயம் கவிக்ம் ஸமுத்ரேந்தம் விஶ்வஶம்புவம் |
பத்மகோஶப்ரதீகாஶக்ம் ஹ்ருதயஞ்சாப்யதோமுகம் ||
அதோ நிஷ்ட்யா விதஸ்த்யாந்தே நாப்யாமுபரி திஷ்டதி |
ஹ்ருதயம் தத்விஜாநீயாத் விச்வஸ்யாயதநம் மஹத் ||
ஸந்ததக்ம் ஸிராபிஸ் துலம்பத்யா கோஶ ஸந்நிபம் |
தஸ்யாந்தே ஸுஷிரக்ம் ஸூக்ஷ்மம் தஸ்மிந்த்ஸர்வம்
ப்ரதிஷ்டிதம் ||
தஸ்யமத்யே மஹாநக்நிர் விஶ்வார்சிர் விஶ்வதோ முக: |
ஸோக்ரபுக் விபஜந்திஷ்டந் நாஹார மஜர: கவி: ||
ஸந்தாபயதி ஸ்வம் தேஹமாபாததல மஸ்தகம் |
தஸ்ய மத்யே வஹ்நிஶிகா அணீயோர்த்வா வ்யவஸ்தித: ||
நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா |
நீவார ஶூகவத்தந்வீ பீதா பாஸ்யாத்தணூபமா ||
தஸ்யாஶ் ஶிகாயாமத்யே பரமாத்மா வ்யவஸ்தித: |
ஸப்ரஹ்மா ஸஶிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட்||
ருதக்ம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்களம் |
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபாய வை நம: ||
ஓம் நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி| தந்நோ
விஷ்ணு: ப்ரசோதயாத் ||
விஷ்ணோர் நுகம் வீர்யாணி ப்ரவோசம் ய: பார்திவாநி
விமமே ரஜாக்ம்ஸி
யோ அஸ்கபாய துத்தரக்ம் ஸதஸ்தம் விசக்ரமாணஸ்
த்ரேதோருகாயோ
விஷ்ணோ ரராடமஸி விஷ்ணோ: ப்ருஷ்டமஸி விஷ்ணோ
ஶ்நப்த்ரேஸ்தோ
விஷ்ணோஸ் ஸ்யூரஸி விஷ்ணோர்த்ருவமஸி வைஷ்ணவமஸி
விஷ்ணவே த்வா ||

ததஸ்யப்ரிய மபிபாதோ அஸ்யாம் |
நரோ யத்ர தேவயவோ மதந்தி |
உருக்ரமஸ்ய ஸஹி பந்துரித்தா |
விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ: |
ப்ரதத் விஷ்ணுஸ்தபதே வீர்யாய |
ம்ருகோ ந பீம: குசரோ கிரிஷ்டா: |
யஸ்யோருஷு த்ரிஷு விக்ரமணேஷு
அதிக்ஷியந்தி புவநாநி விஶ்வா
பரோ மாத்ரயா தநுவா வ்ருதாந |
நதே மஹித்வ மந்வஶ்நுவந்தி
உபேதே வித்மரஜஸீ ப்ருதிவ்யா விஷ்ணோ
தேவத்வம் | பரமஸ்ய வித்ஸே |
விசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம் | க்ஷேத்ராய
விஷ்ணுர் மநுஷேத சஸ்யந்
த்ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ: ||
உருக்ஷிதிக்ம் ஸுஜநிமா சகார |
த்ரிர் தேவ: ப்ருதிவீ மேஷ ஏதாம் |
விசக்ரமே ஶதர்சஸம் மஹித்வா |
ப்ரவிஷ்ணுரஸ்து தவஸஸ் தவீயாந் |
த்வேஷக் ஹ்யஸ்ய ஸ்தவிரஸ்ய நாம |
அதோ தேவா அவந்து நோ யதோ
விஷ்ணுர் விசக்ரமே | ப்ருதிவ்யாஸ் ஸப்த தாமபி: |
இதம் விஷ்ணுர் விசக்ரமே
த்ரேதா நிததே பதம் | ஸமூடமஸ்ய பாக்ம் ஸுரே |
த்ரீணி பதா விசக்ரமே
விஷ்ணுர்கோபா அதாப்ய: |
ததோ தர்மாணி தாரயந் | விஷ்ணோ: கர்மாணி பஶ்யத|
யதோவ்ரதாநி பஸ்பஶே |
இந்த்ரஸ்ய யுஜ்யஸ்ஸகா |
தத்விஷ்ணோ: பரமம்பதம் ஸதாபஶ்யந்தி ஸூரய: |
திவீவ சக்ஷுராததம் |
தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாக்ம்
ஸஸ்ஸமிந்ததே |
விஷ்ணோர் யத் பரமம் பதம் ||

---

Printed at Amudasurabhi Press, Madras-24.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸஹஸ்ரநாமமும் வியாஸ பகவானும்

[ஸ்ரீ உபய வே. வித்வான் புதுக்கோட்டை
அ. ஸ்ரீநிவாஸராகவாசார்ய ஸ்வாமி]

மஹரிஷிகளுக்குள் வியாஸ பகவானைப்போல் பெருமை வாய்ந்தவர் இல்லை என்றே கூறலாம். ஞானத்தாலும் தபஸ்ஸாலும் அவர் சிறந்தவர் என்பது பிரஸித்தம். அவர் பிறந்த வம்சமும் ஒப்பற்ற மஹான்களைக் கொண்டது என்பதும் பிரஸித்தம். வியாஸர் வஸிஷ்ட பகவானுடைய கொள்பேரன்; சக்தி என்பவரின் பேரன்; பராசர ப்ரஹ்மரிஷியின் பிள்ளை; சுகப்ரஹ்மத்தின் தந்தை. பகவத் ஸ்வரூபத்தை அறிந்த மஹான்களில் வியாஸரும் ஒருவர் என்று அர்ஜுனன் கீதையில் கூறுகிறான். வியாஸர் மஹாபாரதம், பதினெட்டுப் புராணங்கள் ஆகியவற்றை இயற்றித் தம் சிஷ்யர்கள் மூலமாக உலகில் பரவச் செய்தார். ப்ரஹ்மஸூத்ரத்தைச் செய்தவரும் அவரே.

வியாஸர் இவ்வளவு பெருமையுள்ளவராயிருந்ததாலேயே பராசரர் விஷ்ணுபுராணத்தில் வியாஸரைப் புகழ்கிறார். ஸத்சிஷ்யரான மைத்ரேயருக்குப் பராசரபகவான் வியாஸருடைய அவதார ரஹஸ்யத்தைப் பின்வருமாறு உபதேசிக்கிறார்:—"மைத்ரேய! க்ருஷ்ணத்வைபாயனர் என்கிற வியாஸர் ஸாக்ஷாத் நாராயணனே என்று நீ அறிந்துகொள். இல்லாவிட்டால் சீரிய கிரந்தமான மஹாபாரதத்தை உலகில் யார்தான் இயற்றியிருக்கமுடியும்?"

ஐந்தாவது வேதம் என்று போற்றப்படும் மஹாபாரதத்திலிருந்து இரண்டு இடங்களைக்கொண்டு வியாஸ பகவானுடைய பெருமையை விளக்குவோம்.

தேர்த்தட்டிலிருந்து ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான். அதுதான் கீதை; கீதோபநிஷத்து. அது முழுவதையும் கண்ணனுடைய சொற்களைக்கொண்டு ஸஞ்ஜயன் திருதராஷ்ட்ரனுக்குச் சொல்லுகிறான். முடிவில், "மிகவும் ரஹஸ்யமான இந்த யோகத்தை யோகேச்வரனான கண்ணன் தன் வாயால் சொல்ல நான் கேட்டேன். ஸ்ரீகிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த

இந்த ஸம்வாதத்தை நினைத்து நினைத்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இன்னமும் ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் காட்டிய விச்வரூபத்தை நானும் பார்த்தேன். அத்யத்புதமான அந்த பகவத்ரூபத்தை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சர்யமும் மகிழ்ச்சியும் உண்டாகின்றன'' என்று கூறுகிறான். விச்வரூபத்தைக் காண அர்ஜுனனுக்குப் பகவான் திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்தான். ஸஞ்ஜயனுக்கு யார் கொடுத்தார்? ''வியாஸருடைய அநுக்ரஹத்தால் நான் இந்த சக்தியைப் பெற்றேன்'' என்று ஸஞ்ஜயனே இந்தக் கேள்விக்குப் பதில் கூறுகிறான். பகவான் கொடுத்தது விச்வரூபத்தைக் காணும் சக்தி குருவான வியாஸருடைய ப்ரஸாதத்தால் ஸஞ்ஜயனுக்குக் கிடைத்த சக்தியோவெனில், ஹஸ்தினுபுரத்தில் அரண்மனையில் இருந்துகொண்டே அந்த பகவான் எங்கோ தூரத்தில் குருக்ஷேத்ரத்தில் அருளிச்செய்த வார்த்தையைக் கேட்கவும் அங்கேயிருந்தே விச்வரூபத்தைப் பார்க்கவும் வல்லவனாகச் செய்தது. இவ்வாறு பகவதநுக்ரஹத்தைக் காட்டிலும் குருவான வியாஸருடைய அநுக்ரஹம் அதிகப் பெருமையுள்ளது.

மற்றொன்று ஸஹஸ்ரநாமப் பிரகரணம். ''பீஷ்மரைப்போல் ஜ்ஞானவான்கள் இல்லை. அவர் மறைந்தாராகில் ஞானமும் க்ஷீணமடைந்துவிடும். ஆகையால் உடனே அவரிடம் சென்று எல்லா தர்மங்களையும் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்'' என்று ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசிக்கப் பாண்டவர்கள் அம்புப் படுக்கையிலிருந்த பீஷ்மரையடைந்து உபதேசம் பெறுகின்றனர். அப்போது அவரிடமிருந்து தர்மங்களைக் கேட்கவேண்டும் என்று ஸ்ரீகிருஷ்ணனும் மற்றவர்களைப்போல அவர்முன் உட்கார்ந்து கேட்கிறான். இது பீஷ்மரின் பெருமை.

பீஷ்மருக்கு வியாஸ பகவானிடத்தில் எவ்வளவு பக்தியும் மதிப்பும் இருந்தன என்பதைப் பின்வரும் மஹாபாரத சுலோகம் காட்டுகிறது:

''மஹர்ஷே: கீர்த்தநாத் தஸ்ய பீஷ்ம: ப்ராஞ்ஜலி: அப்ரவீத்'' [வியாஸமஹரிஷியின் நாமத்தைச் சொன்ன மாத்ரத்தில் பீஷ்மர் கையைக் கூப்பிக்கொண்டு பேசினார்.] பீஷ்மருடைய இந்த அனுஷ்டானத்தைப் பிரமாணமாகக்கொண்டே இப்பவும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ம்ப்ரதாயத்தில் திருவாய்மொழி ஸேவிக்கும்போது பாசுரங்களில் ''குருகூர்ச் சடகோபன்'' என்று நம்மாழ்வாருடைய திருநாமம் வந்தவுடன், பக்தர்கள் கையைக் கூப்பிக்கொண்டு சொல்லுகிறார்கள்.

தர்மங்கள் எல்லாவற்றிலும் ஸஹஸ்ரநாம கீர்த்தனமே மேலான தர்மம் என்பது ஜ்ஞானாதிகரான பீஷ்மரின் முடிவு. ஸஹஸ்ரநாமத்தை அவர் உபதேசிக்கும்போது அவர் சொல்வது முற்றிலும் ஸத்யம் என்று ஸ்ரீகிருஷ்ணனும் கூட இருந்து கேட்டு

ஸம்மதம் தெரிவித்திருக்கிறான். அவனே அந்த ஸஹஸ்ரநாமத்தால் போற்றப்படும் தெய்வம். இவ்வளவு மஹிமையுள்ள ஸஹஸ்ரநாமத்தை பீஷ்மர் உபதேசித்தபடியே மஹாபாரதத்தில் சேர்த்து நமக்கு ஸ்ரீவியாஸ பகவான் கொடுத்திருக்கிறார். ஸ்ரீவியாஸர் ஒரு மஹரிஷி மட்டுமல்ல; ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனே. இதையே நாம் ஒவ்வொரு நாளும் ஸஹஸ்ரநாம படனம் செய்யும்போதெல்லாம் பின்வருமாறு அநுஸந்திக்கிறோம்:

" வ்யாஸாய விஷ்ணுரூபாய
வ்யாஸரூபாய விஷ்ணவே |
நமோ வை ப்ரஹ்மநிதயே
வாஸிஷ்டாய நமோ நம: ||"

---

## YE, YOUNGSTERS!

The breath-taking advance of Science and the consequent rise in the tempo of materialistic methods of thought and life, are becoming a serious challenge to Morals, Philosophy, Religion and to God. Many a young person lured by the material advantages of unconditioned living realizes at a late stage that materialism is not quite a bed of roses and that it breaks down at the first touch of adversity or some such physical imbalance. Then begins the quest for spiritual ideas.

It is needless to add that there will be real peace and happiness in this world, if only we give God His Rightful Place in the scheme of things, and live in conformity with His plans and purpose with a real and abiding faith in HIM.

ஸ்ரீ :

# "ஐந்தாவது வேதம்" எனப் போற்றப்படும் வேதவியாஸரின் மகாபாரதம் உருவாகிய இடம்

பாரதம் ஈந்த காவியங்களுள் மிகப் பெரியதும், புனிதமான தும் பெருமை வாய்ந்ததுமான மகாபாரதத்தை இயற்றிய வேத வியாஸ முனிவர் மகத்தான இக்காவியத்தை இயற்றுவதற்கு இன்றி யமையாது வேண்டப்படுகின்ற தபம், அமைதி, இனிமை, கற்பனை வளம் ஆகிய பேராற்றல்களை இயற்கையிலேயே பெற்றிருந்த போதிலும் இந்நூலை உருவாக்க அவர் தேர்ந்தெடுத்த இடமும் முக்கியத்துவம் வாய்ந்ததே. மாபெரும் முனிவரின் பேராற்றல் களுக்கு உறுதுணையாக, அரும்பணிக்குப் பெரும் ஆதரவாக அமைந்தது அமைதியும் இனிமையும், வளமும் வனப்பும் சூழ்ந்த "பான்போஷ்" (Panposh) என்று இன்று அழைக்கப்படும் இடம். பான்போஷில் வேதவியாஸரின் குகை இந்த இனிமைச் சூழலில் குடிகொண்டிருக்கிறது. "பான்போஷ்" கல்கத்தா—நாக்பூர் (S. E. Rly.) ரயில் பாதையில் ரவுர்கேலாவிலிருந்து 8 km. தொலை வில் உள்ளது.

"நவபாரதத்தின் ஓர் புதிய ஆலயம்" என ஸ்ரீ ஜவஹர்லால் நேரு அவர்களால் போற்றப்பட்ட 'ரவுர்கேலா', ஒரிஸ்ஸா மாநிலத்தில் கல்கத்தா—நாக்பூர் ரயில் பாதையில் கல்கத்தா விலிருந்து சுமார் 250 மைல்கள் தொலைவிலுள்ளது. இங்குதான் இந்தியாவிலேயே மிகப் பெரியதான இரும்பு எஃகு ஆலை உள்ளது.

இங்கிருந்து சுமார் 1 மைல் தொலைவில் "பிராஹ்மணி" (Brahmani), கோயல் (Koyal), சங்க் (Sankh) என்னும் மூன்று நதிகள் கூடும் சங்கமத்தின் அருகில் ஓர் குன்றில் அமைந்திருக் கின்றது வேதவியாஸரின் குகை. இங்கு அமைதியும், சாந்தமும், இனிமையும் இன்றும் குடிகொண்டுள்ளன. உருக்காலையின் விளை வாகப் பெருகிய ஜனநெருக்கமும், நவீன வாழ்க்கையின் சந்தடியும் இன்றும் இவ்விடத்தை அணுகவில்லை.

ஓர் சிறு குன்று; அதைச் சூழ்ந்து நிழல் தரும் மரங்கள் சூழ்ந்த பசும் சோலை. அருகில் பாயும் நதியின் நீரோட்டம் உணர்ச் சியையும் உள்ளத்தையும் குளிர்விக்கிறது. இக்குன்றின்மேல் ஓர்

சிறிய குகை சிதிலமாகிக் கிடக்கின்றது. இக்குகைதான் இங்கு வசிக்கும் மக்களால் புனிதமாகப் போற்றிப் பூஜிக்கப்படும் ஸ்ரீ வேதவியாஸரின் குகை. இங்கிருந்துதான் வியாஸரின் மகாபாரதம் பிறந்தது. இனிமை கொழிக்கும் இச்சூழ்நிலையில் காவியமும் ஓவியமும், இலக்கியமும் இலக்கணமும் பிறந்தது.



பான்போஷில் உள்ள ஸ்ரீ வேதவியாஸரின் குகை: அருகாமையிலிருந்து எடுத்த தோற்றம். (இந்த இடத்தை அடைவதற்கான விவரத்தை இதைப்பற்றிய கட்டுரையில் காண்க.)

இச்சிறு குகையின்முன் ஒரு சூலத்தை நிறுவி வியாஸரை ஜனங்கள் வழிபடுகின்றனர். இக்குன்றில் வேதவியாஸரின் குகையைத் தவிர, 'பட்டாபிஷேக ராமர்', 'பராசக்தி', 'ஆஞ்சநேயர்', 'ஈஸ்வரன்' முதலியோர்க்கும் கோயில்கள் உள்ளன. இவை தெய்வ மணத்தையும், பக்தி மணத்தையும் பரப்பிவருகின்றன.

ஹிந்துக்களின் முக்கிய பண்டிகை நாட்களிலும், மற்றும் அமாவாஸை, கிருத்திகை போன்ற தினங்களிலும் இங்கு 'மேளா' என்றழைக்கப்படும் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. இந்நாட்களில் சுற்றுப்புறங்களிலிருந்து மக்கள் திரள்திரளாக வந்து 'பிராஹ்மணி' நதியில் நீராடி, வேத வியாஸரையும், பிற தெய்வங்களையும் வழிபட்டு மன அமைதியும், புத்துணர்வும் பெற்றுச் செல்கின்றனர்.

மகாபாரதம் பிறந்த இப்புனித இடம் கீழ் இந்தியாவில் ஓர் யாத்திரை ஸ்தலமாகப் போற்றப்பட்டு விளங்கி வருகின்றது.

'பான்போஷ்' ஓர் சிறிய ரயில் நிலையம். இங்கு "எக்ஸ்பிரஸ்" ரயில் வண்டிகள் நிற்பதில்லை. பாசஞ்சர் ரயில் வண்டிகளே நிற்கும். ரயில் நிலையத்திலிருந்து வேதவியாஸர் குகை 1 மைல் தொலைவில் இருப்பதால் இங்கு வருபவர்கள் நடந்தோ, ஸைக்கிள் ரிக்ஷாவிலோ, டாக்ஸிகளிலோதான் செல்லவேண்டும். இவ்விடத்திற்கு எளிதாகவும், ஸௌகரியமாகவும் செல்ல விரும்புபவர்கள் ரவுர்கேலா ரயில் ஜங்ஷனிலிருந்து காரிலோ, டாக்ஸியிலோ செல்லலாம்.



பிராஹ்மணி, கோயல், சங்க் என்னும் மூன்று நதிகளின் சங்கமம்

இந்த இடத்திற்கு எங்களுடைய பிரதிநிதி 11-7-1967 அன்று சென்று வியாஸரை வழிபட்டு பிரத்தியேகமாக எடுத்து வந்த இரு போட்டோக்களை மேலே தந்துள்ளோம்.

பழமையும் புதுமையும் ஒன்றாக இணைந்து விளங்கும் ரவுர்கேலா ஓர் யாத்திரைத் தலமே.

— லிப்கோ பதிப்பகத்தார்.

ஸ்ரீ:

# ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமமும் திருமாலையும்

## [ஒப்பிலியப்பன் ஸந்நிதி உ. வே. வங்கீபுரம் நவநீதம், ஸ்ரீராமதேசிகாசார் ஸ்வாமி]

ஆயிரம் என்பது எம்பெருமானுக்கு மிக உகந்த எண் என்று தோன்றுகின்றது. வேத பாகங்களுள் சிறந்த பகுதியான புருஷ ஸூக்தம் தொடங்கும்போதே எம்பெருமானுக்கு **முடிகளும் ஆயிரம், கண்களும் ஆயிரம், திருவடிகளும் ஆயிரம்** என்று ஓதுகின்றது. தமிழ்மறைக்கு உபநிடதமாய் விளங்கும் திருவாய்மொழியும் "**தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய் பேர்களாயிரத்தாய்**" என்று புருஷ ஸூக்தம் கூறியதைக் கூறுவதுடன் கூறுத தோள்களையும் பேர்களையும் முன்பும் பின்பும் வைத்துப் பேசியது. புருஷஸூக்தம் ஸர்வேச்வரனை பரமபுருஷனை நிர்ணயிக்க முற்பட்டதுபோல் ஸஹஸ்ரநாமமும் பரதேவதையைக் காட்டி அதன் அநந்த கல்யாண குணங்களை விளக்குவதுபற்றி அனைவராலும் விரும்பி நாடோறும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றது.

ஸர்வஜ்ஞரான பீஷ்மாசார்யரிடம் தருமபுத்திரன் பல தர்மோபதேசங்களைப் பெற்றும் அவன் மனம் திருப்தி பெறவில்லை. பின்னும் சில முக்கியமான விஷயங்களில் அவரால் தெளிவு பெற்றாலன்றி அதுகாறும் பெற்ற உபதேசங்கள் பயன் தருவனவாகாவென்று சிந்தித்தான். பின்வரும் ஐந்து கேள்விகளைக் கேட்டான்: **(1) சிறந்த தெய்வம் எது? (2) அடையவேண்டிய முக்கிய பலன் எது? (3) ஸ்தோத்ரமும் அர்ச்சனையும் செய்யப்பட உரியன் எவன்? (4) எல்லாவற்றினும் சிறந்த தர்மம் எது? (5) ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட எதை ஜபிக்கவேண்டும்?** என்பன. பீஷ்மாசார்யரும் (1) **நாராயணனே பரதேவதை. (2) அவனே முக்கியமாய் அடையப்படும் பயன். (3) அவனே துதிக்கப்படவும் அருச்சிக்கப்படவும் உரியன். (4) அவனைத் துதித்தலே சிறந்த தர்மம். (5) அவன் திருநாமத்தை ஜபிப்பதே ஸம்ஸார பயத்தைப் போக்குவது என்னும் முடிவுகளை** விளக்கி உபதேசித்தார். க்ருத யுகத்தில் தியானத்தையும் திரேதா யுகத்தில் யாகம் முதலியவற்றையும் த்வாபர யுகத்தில் அர்ச்சனத்தையும் கலியுகத்தில் நாமஸங்கீர்த்தநத்தையும் நற்கதி பெறும் வழிகளாகச்

சாஸ்த்ரம் கூறும். இதனாலும் இக்கலியுகத்தில் ஸஹஸ்ரநாம அநுஸந்தாநத்திற்கு முக்கியத் தன்மை வலியுறுத்தப்படுகின்றது.

இம்மை மறுமைப் பயன்களை அளிக்கவல்ல இந்த ஸஹஸ்ர நாமத்தைப் பெரும்பாலான மக்கள் நாடோறும் அநுஸந்தித்து வருவதைக் காண்கின்றோம்.

இதை அநுஸந்தித்தவுடன் தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய திருமாலையென்னும் அருளிச் செயற் பகுதியையும் பலர் அநுஸந்தித்து வருவதைப் பார்க்கின்றோம். ஸஹஸ்ரநாமத்துக்கும் திருமாலைக்கும் எத்தகைய தொடர்பு என்று ஆராயும்போது உண்மை வெளியாகின்றது. தர்மபுத்திரன் கேட்ட கேள்விகளுக்குப் பீஷ்மர் அளித்த விடைகளெல்லாம் திருமாலையில் இன்னும் விளக்கமாய் அமைந்துள்ளன. பீஷ்மர் விடை கூறிய முதல் சுலோகத்தில் ஜகத்துக்குப் பிரபுவான ஸர்வேச்வரனை அவன் திருநாமங்கள் ஆயிரத்தாலும் துதிப்பவன் ஸகல துக்கங்களினின்றும் விடுபடுவதாகக் கூறினார். ஆழ்வார் திருமாலையின் முதற் பாசுரத்திலேயே அரங்கனை மூவுலகுண்டுமிழ்ந்த ஜகத் காரணனென்று காட்டி அவன் நாமம் கற்ற செருக்கால் யமபடர் தலைமீது நடப்பதாய் முழக்குகின்றார்.

இப்படிப் பரதேவதையையும் நாமஸங்கீர்த்தநத்தின் பெருமையையும் இருவரும் தங்கள் முதல் ஸூக்தியிலேயே காட்டிவிட்ட ஒற்றுமை காண்க. பீஷ்மர் உபதேசித்தது போலவே ஆழ்வாரும் முக்கருவிகளையும் எம்பெருமான் விஷயத்தில் பயன்படுத்த வேண்டிய முறைகளை ஆவேகத்துடன் வலியுறுத்துகின்றார். பீஷ்மர் பரரூபத்தை இலக்காக வைத்து உபதேசித்தவற்றை எல்லாம் அரங்கனையன்றி வேறொன்றினைக் காணப்பொறாத இவ்வாழ்வார் அரங்கனையே இலக்காக வைத்து உபதேசிக்கின்றார். ஸஹஸ்ரநாமம் அவன் திருநாமத்தின் பெருமையை விளக்க அவதரித்தது போலவே திருமாலையும் அதற்காகவே தோன்றியது. ஸஹஸ்ரநாமம் கூறிய தத்துவங்களை மிக எளிய தெய்வீகத் தமிழில் விளக்கிப் பாமர மக்களும் உணர்ந்துகொள்ளுமாறு திருமாலை செய்யும் உதவி கூறத் தரமன்று. இந்த அம்சங்களை எல்லாம் உள்ளத்துக் கொண்டே அறிஞர் பலர் ஸஹஸ்ரநாம பாராயணத்துடன் திருமாலை அநுஸந்தாநத்தையும் சேர்த்துக்கொண்டுள்ளனர் என்பது பொருந்தும்.

———

# 1967, 1968, 1969, 1970 .......-ல்
## ஆஸ்திகர்கள் குறைந்தபட்சமாக அனுஷ்டிக்கவேண்டியவை

" உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன், எம்பெருமா னென்றென் றேகண்கள் நீர்மல்கி,
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக் கவனூர் வினவி,
திண்ண மென்னிள மான்புகு மூர் திருக் கோளூரே."

— திருவாய்மொழி, 6—7—1.

இந்த "நவீன" காலத்தில் ஸஹஸ்ரநாம பாராயணம் பூரண பலனை அளிப்பதற்கு ஆஸ்திகர்கள் கீழே கொடுக்கப் பட்டுள்ள மிகவும் எளியதும் சாமான்யமானதுமான தர்மங்களை யாவது அனுஷ்டிக்கவேண்டும்.

1. "பிறருடைத் துன்பம், தனதென எண்ணி உறுதுயர் நீக்கிக் கர்வம் கொள்ளாப் பெருங்குணத்தவனே" ஆஸ்திகன் எனப்படுவான். எல்லோரும், எப்பொழுதும் அஹிம்ஸையைக் கடைப் பிடிக்கவேண்டும். பிறருக்குத் துன்பத்தை விளைவிக்கக்கூடிய செயல்களை நினைக்காமலும், அவற்றில் ஈடுபடாமலும் இருத்தல் அவசியம். மிருகங்கள், பறவைகள் போன்ற வாயில்லா ஜீவன் களிடமும் கருணையுடன் நடந்து கொள்ளவேண்டும். முக்கியமாகப் பசுவை "லோகமாதா"வாகப் போற்றி ரக்ஷிக்கவேண்டும்.

2. தினந்தோறும் தவறாமல் பக்தி சிரத்தையுடன் அவரவர் சம்பிரதாயப்படி நெற்றிக்குறி (திருமண், விபூதி அல்லது கோபி சந்தனம்) அணியவேண்டும். முக்கியமாக இரவு படுக்கப்போகும் முன்னால் பல் துலக்கி முகம் கழுவி ச்ரிய :பதியான பகவானை உள்ளூரத் துதித்துக்கொண்டு பளபளவென்று நெற்றிக்கிட்டுக் கொண்டு தூங்கு வது நற்பலனை அளிக்கும்.

3. அவரவர் பெரியோர் பின்பற்றிவந்த ஆசார நியமங்களில் முக்கியமானவற்றையாவது கைவிடாமல் அனுஷ்டித்து, பகவானை யும் தினந்தோறும் துதிக்கவேண்டும்.

4. வேதமறிந்த பெரியோர்களை அவமதிக்காமல் அவர்களைப் போற்றிக் கௌரவிக்க வேண்டும். வேதம் ஓதக் கற்றுக்கொள் ளுதல் அனைவருக்கும் சாத்தியமில்லை. புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம்

மட்டுமாவது உபதேசம் பெறுதல் அவசியம். தவிர, வேத சார மான, நாலாயிர திவ்யப்ரபந்தங்களை ஸகலரும் ஸுலபமாகக் கற்றுக்கொள்ளலாம். எனவே கற்றறிந்த பெரியவர் ஒருவரை ஆச்ரயித்து உபதேசம் பெற்று அப்பிரபந்தங்களில் சில பாசுரங் களையாவது மனப்பாடமாகக் கற்றுக்கொள்ளவேண்டும்.

5. காலத்தை வீணுக்காமல் சதா — அதாவது நடந்து செல் லும்போதும், பஸ், ரயில், இவற்றில் பிரயாணம் செய்யும்போதும்— பகவந் நாமாவை சப்தம் செய்யாமல் உச்சரித்துக்கொண்டிருக்க வேண்டும். வாய் மாத்திரம் பகவந் நாமாவை, சந்தடியின்றி, உச்சரித்துக்கொண்டிருந்தால் போதாது. பகவான் கோயில் கொள்ளத் தக்கதான நம் மனத்தை சிரத்தை எனும் நதியில் பிரவஹிக்கும் தூய்மை என்னும் நீரினுல் சுத்தம் செய்து அதில் பகவானை எழுந்தருளச் செய்யவேண்டும்.

6. அவரவர் சக்திக்கேற்ப பூஜை முறைகளையும், மற்றப் பண்டிகைகளையும் அனுசரிக்கவேண்டும். பூஜை, ஜபம், நைவேத் தியம் முதலியவை விரிவாகச் செய்யப்படாவிட்டாலும், பக்தி சிரத்தையுடன் செய்யப்படவேண்டும். ''தொழிலும் தொழுத லாம்'' எனக் கருதி அவரவர் தொழிலுக்கும், கடமைக்கும் குறை நேராவண்ணம் பூஜை முறைகளை வகுத்துக் கொள்வது நன்று. பூஜை முறைகளை அறவே ஒதுக்காமல், சிறிதளவேனும் அனு சரிக்கவேண்டும்.

மந்திரம் ஓதும் வேதியர்கள் எளிதில் கிடைக்காத இடங் களிலும் ஆவணி அவிட்டம், தர்ப்பணம் முதலியவற்றைச் செய் வது கடினமல்ல. அந்த அந்த விசேஷ தினங்களுக்கு உரிய மந்தி ரங்களை முன்கூட்டியே அறிந்து வைத்துக்கொண்டு இவற்றைச் சிறப்பாகக் கொண்டாடவேண்டும்.

7. இயன்றவரை பகவானுக்கு நைவேத்தியம் செய்துவர வேண்டும். அங்ஙனம் செய்ய முடியவில்லையானுல், எந்த நல்ல பொருளையும் உண்பதற்கும் அல்லது உபயோகப்படுத்துவதற்கும் முன், ஒரு நிமிடமாவது பக்தி சிரத்தையுடன் பகவானை நினைத்து அவனுக்கு அதை அர்ப்பணம் செய்தல் வேண்டும். இதுவும் முறை யான நைவேத்தியத்திற்கு ஒப்பாகும்.

8. எல்லோரிடமும், குறிப்பாக மூத்தவர்களிடம், விநயத் துடன் பழகவேண்டும்.

9. ஏழை, எளியவர்களுக்குத் தம்மாலான, தான தர்மங் களைச் செய்யவேண்டும்.

10. உலகமனைத்தின் உள்ளத்தையும் வெல்லும் நட்பு மனப் பான்மையைக் கொள்ள வேண்டும்.

11. பிறரையும் தம்மைப் போலவே பாவித்து நல்வழியில் நடக்கவேண்டும்.

12. விரோதத்தின் விளைவாக உருவாகும் போட்டி மனப்பான்மையைத் தவிர்க்கவேண்டும்.

13. பிறர் பொருளை அபகரிப்பதையும் பிறரை தூஷிப்பதையும் தவிர்க்கவேண்டும்.

14. சாதுக்களிடம் அபசாரப்படாமலிருக்க வேண்டும்.

15 "சர்வேஜனாஸ் ஸுகினோ பவந்து" என்று அடிக்கடி அவன் திருவடிகளை வணங்கி வழிபடவேண்டும்.

சுருங்கக்கூறின் அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம் (திருடாமை), சௌசம் (சுத்தம்), இந்திரிய நிக்ரஹம் என்னும் யாவர்க்கும் பொதுவான ஐந்து தர்மங்களை அனுஷ்டித்து வரவேண்டும்.



ஸகலத்தையும் தரச்கூடிய கல்பக விருக்ஷம் "அச்யுத" என்னும் நாமம்; சர்மதேனுவே "அநந்தன்" என்னும் நாமம்; சிந்திப்பதையெல்லாம் தரும் சிந்தாமணியே "கோவிந்தா!", "கோவிந்தா!" என்னும் நாமம்.

"அச்யுத: கல்பகவிருக்ஷஸ்ச அநந்த: காமதேநுர் பவேத்।
சிந்தாமணிஸ்து கோவிந்தோ நாமத்ரயமுதா ஹ்ருதம்॥"

ஸ்ரீ :

# ப்ருஹஸ்பதிகளுக்கு ஸம்பாவனை செய்வதில் தாராளம் காட்டுக

**வே**தாத்யயனம் செய்யவேண்டியது பிராம்மணர்களுடைய கடமையாகும். எனினும், புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம் இவற்றை மட்டுமாவது, பெரியோர்களுடைய உபதேசம் பெற்று ஸ்வரத்துடன் ஓதுவதற்குக் கற்றுக்கொண்டால் இதுவே வேதாத்யயனம் செய்ததற்கு ஒப்பாகும் என்பது பெரியோர் கருத்து. இதுவும் ஸாத்தியமில்லாதவர்கள் வேத வித்துக்களாகத் திகழும் பிராம்மணர்களை அவமதிக்காமல் **அவர்களைக் கௌரவித்துப் போற்றி வந்தால்கூடப் போதும்**; இதனுல் வேதாத்யயனம் செய்யாத பாபத்திற்காக பகவான் நம்மை க்ஷமிப்பார்.

வேதமறிந்த பிராம்மணர்கள் பலர் வைதிகச் சடங்குகளைச் செய்து வைக்கும் ப்ருஹஸ்பதிகளாக இருந்து வருகிறுர்கள். ப்ருஹஸ்பதி என்னும் இந்தப் புனிதமான வ்ருத்தியை மேற்கொண்ட பெரியோர்கள் இதில் போதிய வருமானமின்மையினுல் தமது பிள்ளைகளைத் தொடர்ந்து இந்த வ்ருத்தியையே செய்து வரச் செய்ய மனமில்லாதவர்களாகப் பாஷாந்தரப் படிப்புகளுக்கு அனுப்பி விடுகிறுர்கள். இதன் விளைவாக இனி வரப்போகும் தலைமுறையில் வைதிக கார்யங்களைச் செய்துவைக்கும் ப்ருஹஸ்பதி என்பவரைக் காண்பதே அரிதாகிவிடும்.

எனவே, இந்த வ்ருத்தியை மேற்கொள்ள பல இளைஞர்கள் முன்வருவதற்கு ஊக்கமளிப்பது லௌகிகர்கள் கையில்தான் இருக்கிறது. சாஸ்திரிகள் அல்லது ப்ருஹஸ்பதி ஸ்வாமிகளை கௌரவத்துடனும் மரியாதையுடனும் நடத்தவேண்டும். அவர்களுக்கு ஸம்பாவனைகள் செய்வதிலும் நாம் தாராள மனப்பான்மையுடன் நடந்துகொள்ள வேண்டும். ஆவணி அவிட்டம், தர்ப்பணுதிகள். யக்ஞோபவீததாரணம் முதலியவைகளை ப்ருஹஸ்பதியின் உதவியின்றி செய்துகொள்ள நேரிடும் ஸந்தர்ப்பங்களிலும், அததற்குரிய ஸம்பாவனைகளை அந்தந்த ப்ருஹஸ்பதிக்கு அனுப்பி வைத்துவிட வேண்டும். இங்ஙனம் செய்தால்தான் பல இளைஞர்கள் இந்த வ்ருத்தியில் ஈடுபட உற்சாகத்துடன் முன் வந்து, இந்த ஸமூகம் அடியோடு க்ஷீணித்து விடாமல் இருப்பது ஸாத்தியமாகும். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி காமகோடிப் பெரியவாள் போன்ற பல மடாதிபதிகளும் இதையே அடிக்கடி வற்புறுத்தி வருவது கவனிக்கத்தக்கது.

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,**
**சென்னை-17.**

ஸ்ரீயை நம:

# ஸ்ரீஸூக்தமும் ஸகல காரிய ஸித்தியும்

சேதநர்களாகிய நாம் ஸகல காரிய ஸித்தி பெற பல வழிகளில் முயற்சி செய்கிறோம். ஆனால் நம் முயற்சிகளில் சில குறைகள் இருக்கலாம். அதனால் தோல்விதான் ஏற்படுகிறது. ஆனால், பகவத் க்ருபை இருந்தால் வெற்றி அடையமுடியும். பகவதனுக்ரஹத்தை அடைய ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ஆழ்வார்கள் நாயன்மார் முதலியவர்களுடைய பாசுரப் பாராயணமும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும் பெரிதும் உதவுகின்றன. அவையும் தவிர லோகமாதாவான ஸ்ரீ மஹாலக்ஷ்மியையே நேரில் உபாசித்தும் அவ்வனுக்ரஹத்தைப் பெறலாம். அத்தகைய ஒரு சிறந்த உபாசனை முறையே ஸ்ரீஸூக்தம் ஆகும். இது ருக்வேதத்தில் 'கிலம்' என்னும் பகுதியில் உள்ளது. வேதங்களே ஹிந்து மதத்திற்கு அடிப்படை; ஸ்ரீ விவேகாநந்தர் வேதங்களை அறிவுக் களஞ்சியம் என்று கூறுகிறார். இதனால் அந்த வேதத்தின் ஒரு பாகமான ஸ்ரீஸூக்தத்தின் பெருமை சொல்லாமலே விளங்கும். ஆகையால் இந்த ரிக்குகளை உச்சரித்து ஹோமம் செய்பவர் இம்மையில் பெருஞ் செல்வமும் புகழும் கல்வியும் பெற்றுப் பிறகு பிறவித்தளை நீங்கி இன்பமயமான வைகுண்ட விண்ணகரத்தில் வீற்றிருப்பர். தினந்தோறும் பாராயணம் செய்து வருவதால் ஸகல ஸௌபாக்யங்களும் பெற்று வாழ்வர்.

மேற்கூறிய ஸ்ரீஸூக்தத்தில் உள்ள ஒவ்வொரு ரிக்கும் ஒவ்வொரு பலனைக் கொடுக்கும்.

அவை :—

1. தேஜஸ், கீர்த்தி முதலியன
2. பசு, சேவகர் முதலியன
3. பகையழிவு
4. கல்வி
5. ஐசுவரிய விருத்தி
6. நிலையான செல்வம்
7. குபேரன் ஆசியும் சிந்தாமணியின் ஆசியும்
8. தரித்திரம் நீங்க
9. தான்ய விருத்தி
10. வாக்குச் சாதுர்ய விருத்தி
11. வம்ச விருத்தி
12. உயர் பதவி
13. வாகனாதிகள்
14. ராஜ்ய போகம்
15. கல்வி முதலிய செல்வங்கள்

[**வெகு முக்கியம்: இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்ய ஆரம்பிக்கும்முன் ஓர் ஆசார்யனை ஆச்ரயித்து அவரிடம் உபதேசம் பெற்றுக் கற்றுக்கொண்டு பிறகு பாராயணம் செய்தல் நலம். மேலும்,** ஸ்ரீஸூக்த பாராயணத்தைக் காலை வேளைகளில் செய்யவேண்டும். (விடியற்காலையில் செய்தால் இன்னும் சிறந்தது) என்றும்,



தென்னாற்காடு ஜில்லா, திருப்பாதிரிப்புலியூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கே, சுமார் 3 மைல் தொலைவில் திருமங்கையாழ்வார், ஸ்ரீமந் நிகமாந்த வேதாந்த தேசிகன் முதலிய பெரியோர்கள் மங்களாசாஸநம் செய்த திருவஹீந்திரபுரம் திவ்யதேசத்தில் ஸேவை தரும்

**ஸ்ரீ ஹேமாப்ஜ நாயகி.**

பக்தர் கோரும் வரங்களை "இல்லை" என்று சொல்லத் தெரியாத தாயார் இவர் என்னும் [illegible]ரும் புகழ்பெற்ற லோகமாதா.

சூர்யாஸ்தமனத்துக்குப் பிறகு செய்யக்கூடாது என்றும் சில பெரியோர்கள் கருதுகின்றனர்.]

ஹிரண்ய வர்ணாம் ஹரிணீம் ஸுவர்ண ரஜத ஸ்ரஜாம் |
சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ ம ஆவஹ || 1

தாம் ம ஆவஹ ஜாத வேதோ லக்ஷ்மீம் அநபகாமிநீம் |
யஸ்யாம் ஹிரண்யம் விந்தேயம் காமஶ்வம் புருஷாந் அஹம் || 2

அஶ்வ பூர்வாம் ரதமத்யாம் ஹஸ்திநாத ப்ரபோதிநீம் |
ஶ்ரியம் தேவீம் உபஹ்வயே ஸ்ரீர்மாதேவீ ஜுஷதாம் || 3

காம் ஸோஸ்மிதாம் ஹிரண்ய ப்ராகாராம்
ஆர்த்ராம் ஜ்வலந்தீம் த்ருப்தாம் தர்ப்பயந்தீம் |
பத்மே ஸ்திதாம் பத்ம வர்ணாம்
த்வாம் இஹோ பஹ்வயே ஶ்ரியம் || 4

சந்த்ராம் ப்ரபாஸாம் யஶஸா ஜ்வலந்தீம்
ஶ்ரியம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம் |
தாம் பத்மநேமீம் [பத்மினீமீம்] சரணமஹம் ப்ரபத்யே
அலக்ஷ்மீர்மே நஶ்யதாம் த்வாம்வ்ருணே || 5

ஆதித்ய வர்ணே தபஸோதி ஜாதோ வனஸ்பதிஸ் தவ வ்ருக்ஷோத பில்வ:|
தஸ்ய பலாநி தபஸாநுதந்து மாயாந்தராயாஶ்ச பாஹ்யா அலக்ஷ்மீ:|| 6

உபைது மாம் தேவஸக: கீர்த்திஶ்ச மணிநா ஸஹ |
ப்ராதுர்பூதோஸ்மி ராஷ்ட்ரேஸ்மிந் கீர்த்திம்ருத்திம் ததாது மே || 7

க்ஷுத் பிபாஸா மலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் நாஶயாம்யஹம்
அபூதிம் அஸம்ருத்திம் ச ஸர்வாம் நிர்ணுத மே க்ருஹாத் || 8

கந்த த்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் |
ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம் த்வாமிஹோபஹ்வயே ஶ்ரியம் || 9

மநஸ: காமமாகூதிம் வாச: ஸத்யமஶீமஹி |
பஶூநாம் ரூபமந்நஸ்ய மயி ஸ்ரீ: ஶ்ரயதாம் யஶ: || 10

கர்தமேந ப்ரஜாபூதா மயி ஸம்பவ கர்தம |
ஶ்ரியம் வாஸய மே குலே மாதரம் பத்ம மாலிநீம் || 11

ஆப: ஸ்ருஜந்து ஸ்நிக்தாநி சிக்லீத வஸ மே க்ருஹே |
நிச தேவீம் மாதரம் ஶ்ரியம் வாஸய மே குலே || 12

ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்டிம் பிங்களாம் பத்மமாலிநீம் |

சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ || 13

ஆர்த்ராம் ய: கரிணீம் யஷ்டிம் ஸுவர்ணாம் ஹேமமாலினீம் |
ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ || 14

தாம் ம ஆவஹ ஜாதவேதோ
லக்ஷ்மீம் அநபகாமினீம் |
யஸ்யாம் ஹிரண்யம் ப்ரபூதம் காவோ
தாஸ்யோஶ்வான் விந்தேயம் புருஷாநஹம் || 15

## ஸ்ரீ தேவிக்குத் தனித் துதி

பத்மப்ரியே பத்மிநி பத்மஹஸ்தே பத்மாலயே பத்மதளாயதாக்ஷி |
விஶ்வப்ரியே விஷ்ணுமநோநுகூலே த்வத்பாதபத்மம் மயி ஸந்நிதத்ஸ்வ ||

ஶ்ரியை ஜாத: ஶ்ரிய ஆநிர்யாய ஶ்ரியம் வயோ ஜநித்ருப்யோ ததாது |
ஶ்ரியம் வஸாநாம் அம்ருதத்வமாயந் பஜந்தி ஸத்ய: ஸமிதா மிதத்யூந் || 2

## பல ஶ்ருதி

ஶ்ரிய ஏவைநம் தத் ஶ்ரியாமாததாதி |
ஸந்ததம் ருசாவஷட் க்ருத்யம் ஸந்தத்தம்
ஸந்தியதே ப்ரஜயா பஶுபி: |
ய ஏவம் வேத || 3

## ஸ்ரீ லக்ஷ்மீ காயத்ரீ

ஓம் மஹாதேவ்யை ச வித்மஹே
விஷ்ணு பத்ந்யை ச தீமஹி |
தந்நோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத் || 4

## ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளியவை :

### ஸ்ரீஸ்துதி—12

ஆஸம்ஸாரம் விததமகிலம் வாங்மயம் யத்விபூதி:
யத்ப்ருபங்காத் குஸும தநுஷ: கிங்கரோ மேருதந்வா |
யஸ்யாம் நித்யம் நயந சதகை: ஏகலக்ஷ்யோ மஹேந்த்ர:
பத்மே தாஸாம் பரிணதிரஸௌ பாவ லேசைஸ் த்வதீயை: ||

### ஸ்ரீ பூஸ்துதி—32

பத்யுர் தக்ஷிண பாணிபங்கஜ புடே விந்யஸ்த பாதாம்புஜா
வாமம் பந்நக ஸார்வபௌம ஸத்ருசம் பர்யங்கயந்தீ புஜம் |
போத்ர ஸ்பர்ச லஸத் கபோல பலகா புல்லாரவிந்தேக்ஷணா
ஸா மே புஷ்யது மங்களாந்யநுதிநம் ஸர்வாணி ஸர்வம் ஸஹா ||

### ஸ்ரீகோதாஸ்துதி—1

ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தந கல்பவல்லீம்
ஸ்ரீரங்கராஜ ஹரிசந்தந யோக த்ருச்யாம் |
ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்
கோதாமநந்யசரண: சரணம் ப்ரபத்யே ||





# LIFCO'S RELIGIOUS PUBLICATIONS

| | Price Rs. | P. | Postage* & Regn. Extra Rs. | P. |
|---|---|---|---|---|
| 1. SRI RAGHAVA-YADAVEEYAM (of Arasanipalai Venkatadhvari)—This booklet treats the stories of Ramayana and Bhagavatha together. This work displays the excellent verbal ingenuity and poetic imagery of the poet in that the very letters that constitute a verse to depict the story of Sri Rama is reversed in its entirety to portray the deeds of Sri Krishna—WITH SUBSTANCE OF ALL THE SLOKAS IN ENGLISH ... | 1 | 75 | 0 | 80 |
| 2. SANGRAHA SRI VALMIKI VACHANA RAMAYANAM in simple Samskrit prose retaining the words of the original—by Vidwan M. Sripati Sastri, B.A. ... | 1 | 25 | 0 | 75 |
| 3. SANGRAHA SRI VYASA VACHANA BHAGAVATHAM in simple Samskrit prose retaining the words of the original—by Vidwan M. Sripati Sastri, B.A. ... | 1 | 50 | 0 | 75 |
| 4. YOUR LIFE & FORTUNE (in English) based on Janma Rasi (Moon sign) and Janma Lagnam (Ascending sign)—by Prof. N. R. Tiruvenkatacharya, B.A. ... | 2 | 75 | 0 | 85 |
| 5. SRIMAD RAMAYANAM AND ALL-ROUND SUCCESS—An ideal book for daily prayers with prayers of Ramayana Deities—The Sargas for parayanam in Samskrit and Hints in English—In this book are set out the various chief worries that may beset a man and the Chapters or Sargas of the Ramayana (in Devanagiri) to be read for the purpose: 572 pages ... | 9 | 00 | 1 | 55 |
| 6. THE RAMAYANA IN 100 LETTERS—Ramayana in the form of simple letters. Profusely illustrated: 408 pages ... | 7 | 75 | 1 | 25 |
| 7. CHITRA-RAMAYANAM—The story of Sri Rama (in Words and Pictures) ... | 3 | 80 | 1 | 00 |
| 8. SELECT SHRINES OF SRI RAMA ... | 2 | 00 | 0 | 90 |



* According to Postal Rates in force from 1—8—1967.

| | Price Rs. | Price P. | Postage* & Regn. Extra Rs. | Postage* & Regn. Extra P. |
|---|---|---|---|---|
| 9. தசாபுக்திகளும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ஒவ்வொரு தசைக்குமான 9 புத்தகங்கள் ஸ்தோத்ரமாலையுடன் ஒவ்வொன்றும்... | 2 | 00 | 0 | 95 |
| 10. ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ஸ்தோத்ர மாலையுடன் ... | 3 | 75 | 1 | 10 |
| 11. ஸ்தோத்ர மாலை மட்டும் ... | 1 | 30 | 0 | 70 |
| 12. திருவிளையாடற் புராணம் (கதைச் சுருக்கம்)... | 1 | 00 | 0 | 80 |
| 13. பெரிய புராணம் (கதைச் சுருக்கம்) ... | 1 | 00 | 0 | 80 |
| 14. குமரனும் கோசலை குமரனும் (திருப்புகழில் ராமாயணம்) ... | 0 | 90 | 0 | 80 |
| 15. திருப்புகழ் மஞ்சரி (கந்தர் அநுபூதி, கந்தரலங்காரம், திருமுருகாற்றுப்படை ஆகியவற்றுடன்) ... | 1 | 20 | 0 | 80 |
| 16. ஸ்ரீ மகா பக்த விஜயம் (ஸங்க்ரஹ பஜனாவளியுடன்) ... | 3 | 50 | 1 | 10 |
| 17. ஸ்ரீவைஷ்ணவ நித்யாநுஸந்தானம் (இரு கலையாருக்கும் பொது) ... | 3 | 00 | 1 | 05 |
| 18. ஸ்ரீவைஷ்ணவ நித்யாநுஷ்டான க்ரமம் (இரு கலையாருக்கும் பொது) ... | 1 | 50 | 0 | 85 |
| 19. ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் (ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச் செய்த தமிழ்ப் பாசுரங்களின் திரட்டு) பரிசோதகர்: ஒப்பிலியப்பன் ஸந்நிதி ஸ்ரீ உபய வே. வ. ந. ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி ... | 2 | 60 | 0 | 85 |
| 20. ஸ்ரீ தேசிக ஸ்தோத்ர நிதி (ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த ஸ்தோத்ரங்களின் தொகுப்பு)—தமிழில் ... | 3 | 00 | 1 | 00 |
| 21. ஸ்ரீவைஷ்ணவ திருவாராதன க்ரமம் (வடகலை ஸம்ப்ரதாயம்) ... | 0 | 90 | 0 | 75 |
| 22. திருமாலை, திருப்பள்ளியெழுச்சி ... | 0 | 20 | 0 | 75 |
| 23. ஸ்ரீரங்கம் பெரியாச்ரமம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸந்நிதி வைபவம் ... | 2 | 00 | 0 | 80 |

* According to Postal Rates in force from 1—8—1967.

| | | Price | | Postage* & Regn. Extra | |
|---|---|---|---|---|---|
| | | Rs. | P. | Rs. | P. |
| 24 | ஸ்ரீரங்க மஹாத்மியம் (இக்ஷ்வாகு குலதனம்) | 2 | 50 | 1 | 00 |
| 25. | ராமோதந்தம் — மூலமும் தமிழ் உரையும் ... | 1 | 00 | 0 | 80 |
| 26. | திருநீர்மலை ஸ்தல புராணம் ... | 0 | 30 | 0 | 75 |
| 27. | திருவயிந்திரபுர ஸ்தல புராணம் ... | 1 | 30 | 0 | 85 |
| 28. | ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் ... | 0 | 25 | 0 | 75 |
| 29. | ஸ்ரீ கனகதார ஸ்தோத்ரமும் ஸ்ரீ லக்ஷ்மி அஷ்டோத்ர சதநாம ஸ்தோத்ரமும் — ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ... | 0 | 25 | 0 | 70 |
| 30. | திருப்பாவை, திருவெம்பாவை ... | 0 | 13 | 0 | 72 |
| 31. | சித்திரத் திருப்பாவை ... | 0 | 60 | 0 | 75 |
| 32. | ஸ்ரீ ரகுவீரகத்யம் (சுதர்ஶநாஷ்டகத்துடன்) தமிழில் ... | 0 | 40 | 0 | 70 |
| 33. | புரட்டாசித் திருவோணத் திருநாளும் சில ஸத் விஷயங்களும் ... | 0 | 70 | 0 | 80 |
| 34. | ஆழ்வார்களும், ஸ்ரீதேசிகனும் ஸர்வார்த்த ஸித்தியும் ... | 0 | 80 | 0 | 80 |
| 35. | பெரியாழ்வார் பேரருள் ... | 0 | 60 | 0 | 75 |
| 36. | ஸ்ரீவைஷ்ணவ ஸந்த்யாவந்தனம் ... | 0 | 70 | 0 | 75 |
| 37. | ஸ்ரீவைஷ்ணவ அமாவாஸ்யை தர்ப்பணம் ... | 0 | 40 | 0 | 75 |
| 38. | த்ரிவேதி ஸ்மார்த்த ஸ்ந்த்யாவந்தனம் ... | 1 | 00 | 0 | 80 |
| 39. | ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் (தமிழ் வசனம் — மலிவுப் பதிப்பு) கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்கள் எழுதியது: | | | | |
| | பால காண்டம் ... | 8 | 00 | 1 | 30 |
| | அயோத்யா காண்டம் ... | 8 | 00 | 1 | 40 |
| | ஆரண்ய காண்டம் ... | 5 | 00 | 1 | 10 |
| | கிஷ்கிந்தா காண்டம் ... | 5 | 00 | 1 | 05 |
| | ஸுந்தர காண்டம் ... | 12 | 50 | 1 | 90 |
| | யுத்த காண்டம் ... | 9 | 00 | 1 | 50 |
| | உத்தர காண்டம் ... | 6 | 00 | 1 | 20 |
| | ராமாயண நோட்டுகள் ... | 8 | 00 | 1 | 25 |

* According to Postal Rates in force from 1—8—1967.

## அச்சிலிருக்கும் லிப்கோ வெளியீடுகள்



1. ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும்
2. ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும்
3. ஸகல காரிய ஸித்தியும் பன்னிரு சைவத் திருமுறையும்
4. ஸகல காரிய ஸித்தியும் நாலாயிர திவ்யப்ரபந்தமும்
5. ஸகல காரிய ஸித்தியும் தேவாரத் திருமுறைகளும்
6. ஆறுமுகனுக்குகந்த ஆறு படைவீடுகள்
7. ஸ்ரீ வைஷ்ணவ பாலசிக்ஷை
8. தாது ஸாகரதரணி : (ஸம்ஸ்கிருதத்தில்)
9. கோத்ரங்களும் மஹரிஷிகளும்

15—9—1967 தி லிட்டில் ப்ளவர் கம்பெனி
சென்னை-17

**Stockists of LIFCO Books:**

Sri K. V. T. Rao, Bookseller, Ranga Vilas Mantapam, Srirangam, Trichy-6.

Sri V. Srinivasa Varadhan, 77, North Chitrai Street, Srirangam, Trichy.

Sri N. Venkatachariar, 14, Kesava Perumal Sannadhi Street, Mylapore, Madras-4.

Sri T. N. Narasimhachariar, 35, Sannadhi Street, Madurantakam.

Sri V. Santhanam, B.A., L.T., 36 South Car Street, Srivilliputtur.

M. Damodaram & Co., Booksellers, c/o M. D. Nagabhushanam, 108, Corporation Fruit Market, Madras-1.





Sulekha Printers, 5, Bujanga Rao Street, Madras-15

## ஸ்ரீ ஸஹஸ்ரநாமச் சிறப்பு

யாவந்தி புவி தீர்த்தாநி
ஜம்பூத்வீபேஷு ஸர்வதா |
தாநி தீர்த்தாநி தத்ரைவ
விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம் ||

—பாத்மோத்தர கண்டம் அ. 73

ஜம்பூத்வீபம் என்ற பூமண்டலத்தில் எத்தனைப் புண்ணிய தீர்த்தங்கள் உள்ளனவோ அவை யனைத்தும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் உள்ள இடத்தில் எந்நாளும் வஸிக்கின்றன.



## மலையாள பக்த சிரேஷ்டர் பூந்தானம் பாடிய நாம மஹிமை

"யுகம் நாலிலும் நல்லூ கலியுகம்
சுகமே தன்னெ முக்தி வருத்துவான்
கிருஷ்ண கிருஷ்ணு முகுந்தா ஜனார்தனு
கிருஷ்ண கோவிந்த ராம யெந்நிங்ஙினே
திருநாம சங்கீர்த்தன மென்னியே
மற்றேதுமில்ல யெந்நிந்நுமறிஞ்ஞாலும்
அது சிந்திச்சு மற்றுள்ள லோகங்ஙள்
பதினாலிலுமுள்ள ஜனங்ஙளும்
மற்று த்வீபுகளாறிலு முள்ளோரும்
முக்தி தங்ஙள்க்கு சாத்யமல்லாய்கயால்
கலிகாலெத்தெப் பாரத கண்டெத்தெ
கலிதாதரம் கைவணங்ஙீடுந்நு
அதில் வெந்நாலொரு புல்லாயிட்டெங்கிலும்
இது காலம் ஜனிச்சு கொண்டீடுவான்
பாக்யம் போராதெ போயல்லோ தைவமே
பாரத கண்டத்திஙல் பிறந்நோரு
மானுஷர்க்கும் கலிக்கும் நமஸ்காரம்"

(மலையாளம்)